உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலை சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.

பட உதவி : நேஷனல் மியூஸியம், புதுதில்லி).

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# கே.எஸ். வெங்கடரமணி

ஆங்கில மூலம்:

என். எஸ். ராமசாமி

தமிழில்:

எம்.என். ராமசாமி
என். கிருபானந்தன்
எம். வளர்மதி



சாகித்திய அக்காதெமி

*K.S. Venkataramani* - Tamil translation by N. Krupanandan, M. Valarmathi and M.N. Ramaswamy of N.S. Ramaswami's monographs in English. Sahitya Akademi, 1991.



ISBN 81 7201 041 9


முதற் பதிப்பு: 1991

**சாகித்திய அக்காதெமி**

ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி-110 001.
ஜீவன்தாரா பில்டிங், 4வது மாடி, டைமண்ட ஹார்பார் ரோட், கல்கத்தா-700 053.
29, எல்டாம்ஸ் சாலை, தேனாம்பேட்டை, சென்னை 600 0018.
172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிராலய சாலை, தாதர், பம்பாய்-400 014.

SAHITYA AKADEMI
REVISED PRICE Rs. 15-00

*Laser Typesetting by Sri Maruthy Laser Printers, Madras–600 014, and Printed by N.P.T.Offset, Madras.*

## வெளியீட்டார் குறிப்பு

சாகித்திய அக்காதெமியின் சார்பில் சென்னையில், எழுத்தாளர் அசோகமித்திரனை இயக்குநராகக் கொண்டு ஒரு மொழிபெயர்ப்பாளர் பட்டறை நடந்தது. அதில் இருபதுக்கும் மேற்பட்ட மொழி பெயர்ப்பாளர்கள் கலந்து கொண்டனர். அந்தப் பட்டறையில் மொழி பெயர்க்கப்பட்ட நூல்களில் இதுவும் ஒன்று.

சாகித்திய அக்காதெமி

# முன்னுரை

ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்ச் சென்னையில் மயிலாப்பூரின் முக்கிய வீதிகளில் மெலிந்த உருவத்துடன் ஆடம்பர மற்ற எளிய ஆடைகள் அணிந்த ஒரு மனிதர் சிந்தனை வயப்பட்ட வராகவும் சுற்றுப்புறச் சூழ்நிலையை அறவே மறந்தவராகவும் தனித்து நடந்து சென்று கொண்டிருப்பதை நான் பலமுறை கவனித்திருக்கிறேன். புறத் தோற்றத்திற்கு மாறாக அவரிடம் ஒரு தீர்க்கதரிசிக்கே உரியதொரு தோரணை அவரைக் கவனிக்கத்தக்க வராகச் செய்தது. கடற்கரையில் உலாவுவதைப் போல் அவர் வீதிகளில் நடப்பார்.

சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவர்தான் திரு. கே.எஸ். வெங்கடரமணி என்று தெரிந்து கொண்டேன். என் தந்தை திரு. என்.எஸ். ஸ்ரீனிவாசன், சென்னை விக்டோரியா விடுதியில் இருந்த நாட்களில் 'ஒலிம்பியன்ஸ்' எனும் பெயரில் ஒரு குழுவை அமைத்த அவரது நண்பர் குழாமில் வெங்கடரமணியும் ஒருவர் என்றும் அறிந்தேன். அவர்மீது எனக்கு ஈடுபாடு பெருகியது. அவரது படைப்புக்களைக் கருத்தூன்றி ஆர்வத்துடன் படித்தேன்.

1952ஆம் ஆண்டில் அவரது மறைவுக்குப் பின்னர் அவரது பெயர் பெரும்பாலும் மக்கள் கவனத்திலிருந்து மறைந்து விட்டது. அவரது நூல்கள் கிடைப்பதும் அரிதாகிவிட்டது. மேலும் சொல்லப்போனால் இந்த நூலை எழுத நான் முனைந்தபோதும் அவரைப் பற்றிய குறிப்புக்களைச் சேகரிக்கும்போதும் நான் எதிர்பார்க்க முடியாத சிரமங்களை எதிர்கொள்ள வேண்டி யிருந்தது. வெங்கடரமணி அவர்கள் மறைந்து ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளே ஆயின எனினும் இன்றைய தலைமுறைக்கு அவரைப்பற்றி அறவே தெரியாது எனலாம்.

இந்நூலில் அவரை ஒரு புது எழுத்தாளர் போலவே வெளிப் படுத்தி உள்ளேன். அவர் தமிழ் மற்றும் ஆங்கில மொழிகளில் எழுதினாலும் குறைவான நூல்களையே எழுதியுள்ளார். ஆனால் அவர் எழுதியுள்ள நூல்கள் தென்னிந்தியாவில் நடந்த விடுதலை

போராட்டத்தின் உயிர்நாடியைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இலக்கியத் துறையில் மட்டுமன்றி நாட்டு விடுதலைப் போராட்ட வரலாற்றிலும் ஒரு சிறப்பான இடத்தை வகிக்க வேண்டியவர் என்றுதான் நான் நம்புகிறேன். எது எப்படியாயினும் சந்தர்ப்ப வசமாகக் கவனத்திலிருந்து மறைந்த அவர் மீண்டும் மீட்கப் பெற வேண்டியதொரு எழுத்தாளரே.

வெங்கடரமணி வாழ்க்கையில் துன்பங்கள் மிகுந்திருந்தாலும் அவருக்குக் கிடைத்த நண்பர்களைப் பொருத்த மட்டில் நற்பேறு பெற்றவரே. அச்சிலர் அவரது நினைவுகளைத் தம் மனதில் இன்றும் பசுமையாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களில் மூவருக்கு-இப் படைப்புக்குத் துணை புரிந்தமைக்கு-நான் நன்றிக் கடன் பட்டுள்ளேன். மத்திய அரசிலும் அஸ்ஸாம், குஜராத் மாநில அரசுகளிலும் தொழில் நிர்வாகத் துறையில் உயர் பதவிகளை வகித்த அவரது நெருங்கிய உறவினர் திரு. கே.வி. ஸ்ரீனிவாசன் அவர்கள் வெங்கடரமணியைக் குறித்த சில முக்கியமான குடும்ப விவரங்களைக் கொடுத்துதவினார். சிறந்த எழுத்தாளரும் வெங்கடரமணியின் சம காலத்தவருமான திரு. கே.சந்திரசேகரன் அவர்களும் முக்கிய சில விவரங்களையும் நூல்களையும் தந்தருளினார். மூன்றாவது நண்பரான திரு. பெ.நா. அப்புசுவாமி அவர்களை நினைக்கும்போது நெஞ்சு உருகுகிறது. 1986ஆம் ஆண்டில் அவருடைய மறைவுக்குச் சற்று முன்னர் கற்றை கற்றையாக எழுதப்பட்ட தன் நினைவுக் குறிப்புத் தாள்களைப் "பயன்படுத்திக் கொண்டதும் பத்திரமாகத் திருப்பித் தந்து விடவும்" என்று கூறி என்னிடம் கொடுத்தார். அவருடைய பழம் பெரும் நண்பரைப் பற்றிய இந்த நூலைப் படித்திருக்க முடிந்திருந்தால் அவர் பெரிதும் மகிழ்ச்சியுற்றிருப்பார்.

எனக்கு வெங்கடரமணியோடு நேரிடையாகப் பழக்கம் இல்லை. அவருடன் ஒரு வார்த்தைகூட நான் பேசி அறியேன். அவர் இன்றும் வாழ்பவராகவே எனக்குத் தோன்றுகிறது. காரணமின்றி புறக்கணிக்கப்பட்ட இந்த எழுத்தாளரை நம் நாட்டு மக்கள் நன்றியுடன் நினைக்கச் செய்வது நியாயமானதே. அதன் பொருட்டு நான் மேற்கொண்ட தாழ்மையான சிறு முயற்சியே இந்நூல்.

சென்னை
அக்டோபர், 1986

என்.எஸ். இராமசுவாமி

# பொருளடக்கம்

# 1

## அர்ப்பணிக்கப்பட்ட வாழ்க்கை

நவீன பாரதத்தை உருவாக்குவதற்காகத் தன் எழுத்துப் பணியை அர்ப்பணித்த எழுத்தாளர் 'காவிரிப்பூம்பட்டினம்' சித்தாந்த வெங்கடரமணி அவர்கள். தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதிய அவர், இந்திய கிராமங்கள் பழஞ்சிறப்பையும், வளத்தையும் மீண்டும் பெற்று பாரதத்தின் மறுமலர்ச்சிப் பணியில் பங்கு கொள்ளப் போகும் நாளை ஆவலுடன் எதிர் நோக்கினார். நாட்டு விடுதலைப் போராட்டத்தின் கடைப் பகுதியிலும் சுதந்திர பாரதத்தில் ஐந்தாண்டுகளும் வாழ்ந்திருந்த அவர் நாட்டுப் பற்றையும் சமுதாயச் சீர்திருத்தத்தையும் உயிர் மூச்சாகக் கொண்டிருந்தார். நாட்டுச் சேவைக்காக அவர் எழுதியமை லாபகரமானது என்பதாலோ அப்படி எழுதுவதுதான் முறை என்பதாலோ அன்று. நாட்டுப் பற்று என்பது அவரது ரத்தத்தில் ஊறிய ஒன்று.

இலட்சியவாதியும் தேசபக்தருமான வெங்கடரமணி அடிப்படையில் ஒரு பிரசாரகர். இச்சொல் நாளடைவில் தவறாகப் புரிந்துக் கொள்ளப்படும் பொருள் கொண்டதாகப் போயினும் நாட்டு விடுதலைப் போர் நடந்த காலத்தில் நாட்டுப் பணிக்காக உயர்ந்த கொள்கைப் பரப்பாளராக இருப்பது இந்திய எழுத்தாளருக்குக் கிடைக்கும் பெரும் பெருமையாகக் கருதப் பட்டது. வெங்கடரமணி புதினங்களை எழுதினார். அவரது காலத்தில் அவை பெரிதும் போற்றப்பட்டன. திறமையான புதின எழுத்தாளராக இருப்பினும் அவரது காலத்திய நாட்டுச் சூழ்நிலைக்கு முற்றிலும் மாறான தற்காலத்தில் அவரை நம் நினைவில் நிலை பெறச் செய்வது கிராமிய வாழ்வின் முன்னேற் றத்தில் அவர் காட்டிய தீவிரமான ஈடுபாடுதான் எனலாம். விடுதலைக்குப் பின்னர் பாரதத்தின் வருங்காலம் கிராமங்களில் தான் அடங்கியிருக்கிறது என்பதில் அவர் அசையா நம்பிக்கை கொண்டிருந்தார். அவரது புதினங்கள், கவிதை நடையிலான

உரைநடைகள், அவர் வகுத்த திட்டங்கள் அனைத்துமே கிராமிய மறுமலர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டவை. இந்திய இலக்கிய வரலாற்றில் வெங்கடரமணியைப் போல் ஒரே குறிக்கோளில் முனைப்போடு இருந்த எழுத்தாளர்கள் மிகச் சிலரே.

வெங்கடரமணி எளிதில் புரிந்து கொள்ள முடியாத தன்மையுடையவர். பார்வைக்கு எளிமையாகத் தோன்றிய அவர், வாழ்வின் ஆடம்பரங்களை வெறுத்தார். உயர்ந்த கோட்பாடுகளைக் கடைப்பிடித்துத் தனிமையான வாழ்க்கை வாழ்ந்தார். ஓர் இலட்சிய நோக்கு அவருக்கு இருந்தது. கிராம புனரமைப்பைக் குறித்து அவருக்கு இருந்த அசையா நம்பிக்கை, அக்காலத்திய இந்தியர் எவருக்கும் இருக்கவில்லை என்று கூடக் கூறலாம். அரசியல் ரீதியைக் காட்டிலும் இந்தியாவின் வருங்காலம் கிராமங்களிலேயே உள்ளதென்று கூறி அதன் மறுமலர்ச்சிக்குப் பாடுபட்ட வகையில் அவர் மகாத்மா காந்தியைத் தீவிர நம்பிக்கையுடன் பின்பற்றினார்.

வெங்கடரமணி ஓர் இலட்சியவாதி. அதேசமயம் பகற்கனவு காண்பவரில்லை. அவருடைய வாழ்க்கையின் பின்னணி அவரை நன்கு விளக்குகிறது. தன் கிராமம், குடும்பம் ஆகியவை குறித்து அவர் பெருமை கொண்டிருந்தார். அவை இரண்டுமே சிறப்பானவை. ஆதலால் அவர் கொண்டிருந்த பெருமை நியாயமானதே. காவிரிப்பூம்பட்டினம் பழம் பாரதத்தின் வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களில் ஒன்று. சிறந்த துறை முகமான இது, வரலாற்று ஆசிரியர்களின் நோக்கில், மேற்குக் கடற்கரைப் பகுதியில் உள்ள பருக்கச்சா மற்றும் கொடுங்கள்ளூர், கிழக்குக் கடற்கரைப் பகுதியில் உள்ள தாம்ரலிப்தி எனும் துறைமுகங்களுக்குச் சமமான சிறப்புக்கொண்டிருந்தது.

கிறிஸ்துவுக்குப் பிறகு முதல் நூற்றாண்டுகளில் இந்தியாவுக்கும் ரோம பேரரசுக்கும் நடைபெற்ற வாணிபம் நர்மதை நதிக்கரையில் அமைந்த பருக்கச்சா எனும் துறைமுகம் வாயிலாக நடைபெற்றது. (இது தற்போது ப்ரோச் என்றழைக்கப்பட்டு இன்றைய குஜராத் மாநிலத்தில் உள்ளது). கி.பி. முதல் நூற்றாண்டின் இடைக்காலத்தில் அலெக்ஸாண்ட்ரியாவைச் சேர்ந்த 'ஹிப்பாலஸ்' என்ற மாலுமி தென்மேற்குப் பருவக்காற்றின் உதவியால் நாற்பதே நாட்களில் கப்பலின் மூலம் எகிப்திலிருந்து

கேரளாவை அடைய முடியும் என்ற சாத்தியத்தைக் கண்டுபிடித்த பின்னர், கேரளாவைச் சார்ந்த கொடுங்கள்ளூர் பருக்கச்சாவின் முக்கியத்துவத்தைக் குறைத்து விட்டது. கடைச் சங்கத் தமிழ் இலக்கியத்தில், 'முசிறி' என்று அப்போது வழங்கப்பட்ட கொடுங் கள்ளூர் துறைமுகத்தின் மூலம் நடைபெற்ற வாணிகத்தைக் குறித்துச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இடைக்காலத்தில் பெரியாறு தன் போக்கை மாற்றிக் கொண்ட பின்னர் கேரளக் கடற்கரையில் உள்ள 'கொச்சின்' தலைசிறந்த துறைமுகமாக மாறியது. அதுவரை முசிறியே மேற்கத்திய நாடுகளுக்கு முக்கிய வாணிபத் துறையாக விளங்கியது. ப்யூடிங்கர் சாசனத்தின்படி கிரேக்க தெய்வமான 'அகஸ்டஸ்'ஸுக்கு முசிறியில் ஒரு கோயில் இருந்ததாகத் தெரிகிறது. இதனால் கிரேக்க நாட்டு யவனர்கள் அப்பகுதியில் வாழ்ந்திருக்கக் கூடும் என்றும் தெரிகிறது.

இப்போது மேற்கு வங்காளத்தில் உள்ள 'தாம்லுக்' எனப்படும் அக்காலத்திய தாம்ரலிப்தி எனும் துறைமுகம் தென்கிழக்கு ஆசிய நாடுகளுடன் போக்குவரத்துத் தொடர்பு கொள்ள பயன்படுத்தப் பட்டது. இத்துறைமுகத்தின் மூலம்தான் கி.பி. 5-ஆம் நூற் றாண்டைச் சேர்ந்த பாஹியான்; கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இட்ஸிங் எனும் சீன நாட்டைச் சேர்ந்த புத்த யாத்ரீகர்கள் தம் நாட்டிற்குத் திரும்பிச் சென்றனர்.

அக்காலத்தில் காவிரிப்பூம்பட்டினம் இவற்றுக்கிணையாகப் பெருமை பெற்றிருந்தது. தமிழ்ச் சங்க இலக்கியத்தில் சித்தரிக்கப்பட்டுள்ள சிறந்த நகரங்களில் இதுவும் ஒன்று. தற்போது திருச்சி நகரத்தின் ஒரு பகுதியாக விளங்கும் உறையூரைத் தங்கள் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி புரிந்த முற்காலச் சோழர்கள் காவிரிப்பூம்பட்டினத்தை மாற்றுத் தலைநகராகக் கொண்டிருந்தனர். காவிரியின் ஒரு கிளையாறு வங்கக்கடலில் இணையும் இடத்தில் இது அமைந்துள்ளது.

கி.பி. 2-ம் நூற்றாண்டில் அலெக்ஸாண்ட்ரியாவைச் சார்ந்த 'தாலமி' (ptolemy) என்ற புவியியல் வல்லுநர் 'காபேரிஸ் எம்போரியம்' (khaberis emporium) என்று குறிப்பிடுவது இக்காவிரிப் பூம்பட்டினத்தையே ஆகும். அங்ஙனமே கி.பி. முதல் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் 'பெரிபிளஸ் ஆப் த எரித்ரியன் ஸீ' (Periplus of the Erythraean Sea) எனும் நூலின்

ஆசிரியர் கொரமாண்டல் கடற்கரைப் பகுதியில் இருந்ததாகப் பொதுவ் (Poduce) சொபாத்மா (Sopatma) என்பனவற்றோடு குறிப்பிடும் 'காமரா' (Camara) என்பது காவிரிப்பூம்பட்டினத்தையே குறிப்பிடுகிறது என்று அறியப்பட்டுள்ளது. முற்காலச் சோழ மன்னர்களில் புகழ் பெற்ற கரிகால்வளவன் காவிரிப்பூம் பட்டினத்தைப் பெரிதும் சார்ந்திருந்தான்.

சங்கப் பாடல் ஒன்று, இத்துறைமுகத்திலிருந்து நடைபெற்ற வணிகத்தைச் சிறப்பாக வர்ணித்திருக்கிறது. "இல்லங்களின் திறந்த கூரைகளின் மூதும், துறைமுகத்தை ஒட்டிய களஞ்சியங்களின் மேலும்,மான்விழியைப் போன்ற சாளரங்களைக் கொண்ட மாடங்களின் மீதும் பகலவன் தன் ஒளிக்கற்றைகளைப் பரப்பு வான். புகாரின் பல பகுதிகளில் குறைவற்ற செல்வம் பெற்ற யவனர்களின் மாளிகைகள் கண்களைக் கவரும். துறைமுகப் பகுதிகளில் பன்னாட்டு மாலுமிகள் காணப்பட்டாலும் அவர்கள் அனைவரும் இணைந்து ஒரே இனமாக இன்புற்று வாழ்ந்தது எல்லா விதத்திலும் தெரிந்தது". காவிரிப்பூம்பட்டினத்தின் ஒரு பகுதி இன்றும் 'வெள்ளையன் இருப்பு' என்றே அழைக்கப் படுகிறது.

சங்க காலத்தை ஒட்டி எழுந்த காவியமான சிலப்பதிகாரம் காவிரிப்பூம்பட்டினத்தைத் திட்டமிட்டு அமைக்கப்பட்ட நகரம் என்று கூறுகிறது. இது மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவ்விரண்டு பகுதி களுக்கும் இடையேயுள்ள இடைப்பகுதி அங்காடிகளால் நிறைந் திருந்தது. அரசனும் அரசு ஊழியர்களும், போர் வீரர்களும் பெரும் வணிகர்களும் விவசாயிகள் அனைவரும் பட்டினப் பாக்கத்தில் வாழ்ந்தனர். சிறு வணிகர்கள், கைவேலை வல்லுநர், கூலிவேலை செய்வோர் அனைவரும் மருவூர்ப்பாக்கத்தில் வாழ்ந்தனர். கடற்கரை அருகாமையில் மீனவர் வாழ்ந்தனர். துறைமுகப் பகுதியில் தானிய களஞ்சியங்களும் இறக்குமதியான பொருட் களை வைக்க பொருள் காப்புக் கூடங்களும் இருந்தன.

இத்துறைமுகத்தின் வாழ்க்கை வெளிநாட்டு வாணிபத்தையே மையமாகக் கொண்டிருந்தது. மேற்கத்திய நாடுகளிலிருந்து உயர் இனக் குதிரைகள் இறக்குமதி ஆயின. மலேசியா, இலங்கை, சீனாவிலிருந்தும் கூட பல்வேறு பொருட்கள் இறக்குமதி

செய்யப்பட்டன. 'பெரிப்ளஸ்' நூல் இவ்வாறு கூறுகிறது." தாமிரிகாவில் (முற்காலத்தில் தமிழகத்தைச் சேர்ந்திருந்து தற்போது கேரளாவாக அழைக்கப்படும் பகுதி) உற்பத்தியான எல்லாப் பொருட்களும் இத்துறைமுகங்களில் (அதாவது காமரா என்று குறிப்பிடப்படும் காவிரிப்பூம்பட்டினம், பொதுஸ், சொபாத்மா எனும் துறைமுகங்களில்) இறக்குமதி செய்யப் பட்டன. தவிர, எகிப்து நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட பெரும் பாலான பொருட்களும் பராலியா (Paralia) கன்னியாகுமரி யிலிருந்து இராமேசுரம் வரையுள்ள பகுதி) மூலம் கொண்டு சேர்க்கப்பட்ட பொருட்களும் கூட இங்கே இறக்குமதி செய்யப் பட்டன.

கிடைத்துள்ள குறிப்புகளின்படி முதன்முதலாக் காவிரிப்பூம் பட்டினத்தைப் பற்றிய குறிப்பு கி.மு. 2-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. கி.பி. துவக்க நூற்றாண்டுகளில் காவிரிப்பூம்பட்டினம் புகழின் உச்சியை எட்டியது. கடற்கரையின் அருகில் உள்ள 'வெள்ளையன் இருப்பில்' கிடைத்துள்ள ரோம நாட்டு நாணயத்தால் வெளி நாட்டவரின் தொடர்பு உறுதிப்படுத்தப் பட்டுள்ளது. இப்பட்டினம் பௌத்த மதத்தினரின் நிலையமாகச் சிறிது காலம் இருந்தது. வாணிபம் மட்டுமன்றி மதமும் நாகரீகமும் இத்துறைமுகத்தின் மூலம் தென்மேற்காசிய நாடு களுக்குப் பரவின. தாய்லாந்து கல்வெட்டு ஒன்று காவிரிப்பூம் பட்டினத்தின் அருகிலுள்ள நாங்கூர், மணிக்கிராமம் எனும் இரண்டு ஊர்களைக் குறிப்பிடுகிறது.

இந்திர விழாவை ஒரு மன்னன் கொண்டாடாமல் விட்டு விட்டதால் காவிரிப்பூம்பட்டினம் கடலில் மூழ்கிவிட்டது என்று சங்கப் பாடல் ஒன்று குறிப்பிடுகிறது. கடற்கரைக்கு அருகா மையில் கடலுக்கடியில் சில கட்டிட அமைப்புக்கள் கண்டுபிடிக்கப் பட்டதாக ஆழ்கடல் தள தொல்பொருள் ஆய்வு தெரிவித் திருப்பது இக்கூற்று உண்மையென உறுதிப்படுத்துகிறது. அப்பகுதி மீனவர்கள் அவை உடைந்து மூழ்கிப் போன ஒரு கப்பலின் பகுதிகளெனவும் கூறுகிறார்கள்.

நில அகழ்வு ஆய்வில் சில குறிப்பிடத்தக்க எஞ்சுப் பொருட்கள் வெளிப்பட்டுள்ளன. அவற்றுள் படகுத் துறை மேடை யொன்று மரக் கம்பங்களைக் கொண்டு விளங்குகிறது. அது

படகுகளைக் கட்டி வைப்பதற்குப் பயன்படுத்தப் பட்டிருக்கலாம். பட்டினப்பாலை எனும் சங்க நூல், நெல் சுமந்த நாட்டுப்புற படகுகள் ஆப்புக் கட்டைகளில் கட்டிவைக்கப்பட்ட படகுத் துறை மேடை ஒன்றை விவரித்துள்ளது. இன்னொரு தொல்பொருள் ஆய்வு சிற்பங்களைக் கொண்ட பௌத்த மடம் ஒன்றையும் கண்டுபிடித்திருக்கிறது.

பழம் புகார் பட்டினத்தின் சில தோற்றங்களைக் கடற்கரை ஓரத்தில் இப்போது மீண்டும் அமைத்திருப்பதை வெங்கடரமணி உயிரோடு இருந்திருந்தால் பார்த்துப் பெரிதும் கவரப் பட்டிருப்பார். காவிரிப்பூம்பட்டினத்தை இருப்பிடமாகக் கொண் டிருந்த கோவலன், கண்ணகி, மாதவி ஆகியோரைப் பற்றி எழுத ப்பட்ட சிலப்பதிகாரத்து நிகழ்ச்சிகளை நாற்பத்தொன்பது சிற்பங்களாகச் செதுக்கி அங்கே வைத்திருக்கிறார்கள். இலக்கிய நூல்களில் காணப்படும் குறிப்புகளைக் கொண்டு பண்டைக் கால காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த பல கட்டிடங்களை மீண்டும் அதேபோல் உருவாக்கியுள்ளார்.

வரலாற்று பெருமைமிக்க இத்தகைய ஊரில் பிறந்ததற்கு வெங்கடரமணி பெருமை கொண்டதில் வியப்பில்லை. ஆனால் இங்கு குறிப்பிடத்தக்கது என்னவெனில் மற்ற எவருமே இவ்வூரைப் பற்றி பெருமை கொள்ளாத காலத்தில் வெங்கடரமணி பெருமை பாராட்டியதுதான். இருபது ஆண்டுகளுக்கு முன்புவரை காவிரிப்பூம்பட்டினத்தின் பெருமை சில பழந்தமிழ் அறிஞர் களைத் தவிர வேறு எவருக்கும் பெரும்பாலும் தெரியாது எனலாம். தற்காலக் காவிரிப்பூம்பட்டினத்தின் அருமை மைந்தர்களில் ஒருவரான வெங்கடரமணி அங்குப் பிறந்தமைக்குப் பெருமை கொண்டது முற்றிலும் சரியானதே. எழுத்தாளர் என்ற முறையில் அவரால் இயன்றதெல்லாம் அவர் தன் ஊருக்குச் செய்தார். காவிரியாறு கடலில் இணையும் இடத்தில் பலமுறை சிந்தனை வயப்பட்டவராய் அமர்ந்திருப்பார். அவரது புதினங்களில் வரும் பாத்திரங்களும் சூழ்நிலை அமைப்புகளும் காவிரிப்பூம் பட்டினத்துப் பகுதியை ஒட்டி அமைக்கப்பட்டன. நகர வாழ்க்கையை வெறுத்த அவர் வாய்ப்பு கிட்டிய போதெல்லாம் தான் பெரிதும் விரும்பும் ஊரில் புகலடைந்து விடுவார்.

அவ்வூரில் அவரைக் கவர்ந்த மற்றொன்றும் இருந்தது. அது அவருடைய குடும்பமும் அதைச் சார்ந்தவர்களின் எண்ணமும்தான். அவரது குடும்பம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. வரலாற்று அறிஞராக இல்லாமற்போனாலும் இயன்ற அளவுக்குத் தம் முன்னோர்களின் சாதனைகளையும் புகழினையும் நினைவுக்குக் கொண்டு வருவதில் அவர் ஆர்வங் கொண்டிருந்தார். அவரது முன்னோர்களில் மிகவும் புகழ் பெற்றவர் 'அய்யாவு' என்று வரலாற்றுக் குறிப்புகள் குறிப்பிடும் அய்யாவு அய்யர் ஆவார்.

கி.பி. 1712 முதல் 1728-வரை தஞ்சாவூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த மராட்டிய மன்னரான முதலாம் சரபோஜியிடம் அய்யாவு அய்யர் அறத்துறை அதிகாரியாகப் பணியாற்றினார். ஏகோஜி என்றும் அழைக்கப்பட்ட வெங்கோஜியால் தஞ்சையில் இவ்வம்ச ஆட்சி நிறுவப்பட்டது. சிவாஜியின் மாற்றாந் தாய் மகனான அவர் ஏறக்குறைய கி.பி. 1676-இல் இவ்வரசை அமைத்தார். கி.பி. 1684-இல் அவரது மறைவுக்குப் பின்னர் ஷாஜி ஆட்சிக்கு வந்து கி.பி. 1712-ஆம் ஆண்டுவரை அரசாண்டார். அவருக்குச் சந்ததி இல்லாததால் முதலாம் சரபோஜி, துக்கோஜி எனும் அவரது இரு சகோதரர்களும் சேர்ந்துஆட்சி புரிந்தனர். முதலாம் சரபோஜி 1728-இல் இறந்த பின்னர் துக்கோஜி 1736-ஆம் ஆண்டில் தான் மரணமடையும்வரை தனித்து அரசாண்டார்.

சரபோஜி மன்னர் அறச்சிந்தைமிக்க, இறை அன்பு பூண்டவர் எனச் செவிவழிச் செய்திகளால் தெரிய வருகிறது. அய்யாவு அய்யர் அவ்வகையில் அவருக்குப் பெரிதும் துணை புரிந்தார். அறச் செயல்களில் மட்டுமே அய்யாவு ஈடுபட்டார் என்பது இல்லை. காவிரிப்பூம்பட்டினப் பகுதியின் முன்னேற்றத்திற்காக அவர் பெரிதும் பாடுபட்டார். 'அய்யனாறு' என்று பின்னர் பெயர் பெற்ற கால்வாயை அவர்தான் வெட்டினார். காவிரி நீர் சரியாகப் பாயப் பெறாத சீர்காழி வட்டத்திலுள்ள சில கடற்கரைப் பகுதி கிராமங்களுக்குப் பயனளிக்குமெனத் திட்டமிட்டு வெட்டப் பட்டதால் இது சிறப்புடையதாகும். இதுவே ஒரு வடிகாலாகவும் பயன்பட்டது. சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர் காவிரியாற்றின் குறுக்கே மேட்டூர் அணை கட்டுவதற்கு முன்னர் பெருவெள்ளப் பெருக்கு அப்பகுதியில் ஆண்டுதோறும் பெருந்துன்பத்தையும்,

சேதத்தையும் விளைவித்து வந்தது. அய்யாவுக் கால்வாய் அதிகப்படியான நீரை வெளியேற்றப் பயன்பட்டது. காவிரிப்பூம் பட்டினத்திற்கு அருகே அமைந்துள்ள திருவெண்காட்டில் உள்ள 'மங்கா மடம்', திருக்கடையூரைச் சார்ந்த சரபோஜி ராஜபுரம் முதலான பல கல்வியிற் சிறந்த அந்தணர் வாழ் அக்ரஹாரங்கள் வளமை பெற்றதற்கும் அவரே காரணமாக இருந்தார்.

வம்ச மரபுப்படி அரசர் அய்யாவுக்கு, காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து செம்பனார் கோயிலுள்ள எல்லையம்மன் கோயில் வரை பரவியுள்ள பரந்த பெரு நிலப்பரப்பை ஜாகீராக அளித்தாராம். இவ்வூர் கோயில் கல்வெட்டு ஒன்று வரிப்பணம் செலுத்தும் ஒப்பந்தத்தைக் குறிப்பிடும்போது அரசு அலுவரான, காவிரிப்பூம்பட்டினத்துச் சுப அய்யாவய்யன் என்பவரையும் ஹவில் தாண்டவராய முதலியார் என்பவர் பற்றியும் குறிப்பிடுகிறது.

அய்யாவின் வாழ்க்கைப் பாதை குறித்துப் பல மாறுபட்ட செவிவழிச் செய்திகள் மக்களிடையே வழங்குகின்றன. அவர் பின்னர் 'சிர்கிளே' அல்லது அரண்மனை அகவினைஞராகவும் உள்ளாட்சி அமைச்சராகவும் பின்னர் திவானாகவும் உயர்வு பெற்று அரசவையில் பெரும் செல்வாக்கைப் பெற்றிருந்தார் என்பது உறுதியானாலும் அதன்பின்னர் அவரது வாழ்வுப் போக்கைக் குறித்துக் கருத்து ஒற்றுமை இல்லை. சரபோஜி மன்னருக்கு ஒரு மகன் பிறந்தபோது முன்பின் ஆராயாது, தங்கச் சங்கிலி பூட்டிய தங்கத் தொட்டில் ஒன்றைக் குழந்தைக்குப் பரிசளித்தார் அய்யாவு. 'அரசாங்கப் பணத்தைக் கையாடியதால் தான் அவரால் அத்தகைய விலை உயர்ந்த பரிசைத் தர முடிந்தது' என அவரது எதிரிகள் மன்னரின் மனதில் விஷமேற்ற முனைந்தார்கள். அதற்குச் செவிமடுத்த மன்னன் அய்யாவுவைச் சிறையிலிட்டான். அரை வயிற்று உணவளிப்பான். அவமானம் தாளாத அவ்வந்தணர் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சிறைச்சாலையில் தற்கொலை செய்து கொண்டார். இறப்பதற்கு முன்னர் 'திருவெண்காட்டுக் கோயில் மணி அறுந்து வீழ்ந்து, மீண்டும் கட்டப் பெறக்கூடாது என்றும் கோயிலின் வடக்குச் சுற்றுச் சுவர் இடிந்து வீழ்ந்து என்றுமே குட்டிச் சுவராக கிடக்கக் கடவது என்றும் சாபமிட்டாராம்'. 1928-ஆம் ஆண்டில் வெளி யிடப்பட்ட ஒரு நூலில் வெங்கடரமணியின் நெருங்கிய

உறவினரான திரு. கே.ஆர். சுப்பிரமணியம், "இப்போதும்கூட அக்கோயிலின் பெரிய மணி சரியான இடத்தில் கட்டப்படவில்லை. வடக்கு வெளிச்சுற்றுச் சுவர் இன்றும் இடிந்தே காணப்படுகிறது" என்று எழுதியிருக்கிறார்.

இன்னொரு செவிவழிச் செய்தி அய்யாவு சிறையிலிருந்து தப்பித்துக் கொண்டதாகக் கூறுகிறது. மற்றொரு செய்தியின்படி திருவெண்காட்டுக் கோயில் ஈசன் சரபோஜியின் கனவில் தோன்றி, மன்னன் அளித்த நிலப் பகுதியால் ஈட்டிய பணத்தால் தான் அய்யாவு தங்கத் தொட்டில் பரிசு அளித்ததாகக் கூறி அவரை உடனே விடுதலைச் செய்யும்படி ஆணையிட்டாராம். அய்யாவு அரசவையிலிருந்து விலகிக் கொண்டதோடு மட்டுமன்றி அரசன் அளித்திருந்த ஜமீனையும் திருப்பித் தந்து விட்டதாகவும் சொல்லப்படுகிறது. திரும்பக் காவிரிப்பூம்பட்டினத்திற்குப் போகும் வழியில் திருவெண்காட்டில் அவர் இறந்து விட்டாராம்.

அநேகமாக அமர்சிங்கின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1787-1798) எழுதப்பட்டிருக்கக் கூடிய 'காவிரிப்பூம்பட்டினத்தின் வரலாறு' எனும் மெக்கன்ஜி கையெழுத்துப்படியில் நூறு ஆண்டுகளுக்கு முன்னர் அவ்வூரைச் சேர்ந்த அய்யா வைய்யன் ஒரு பெரும் புதையலைக் கண்டெடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது. அதில் ஒரு பகுதி திருவெண்காட்டுக் கோயிலைச் செப்பனிடப் பயன்படுத்தப் பட்டதாகவும் மற்றப் பகுதி அரசு கருவூலகத்தில் சேர்க்கப் பட்டதாகவும் கூறப்பட்டுள்ளது. அமர்சிங்கின் அரசாங்க அலுவலர் சிலர் அவ்வூரில் மறைத்து வைக்கப்பட்டுள்ள புதையலை அகழ்ந்து எடுக்க முயன்று தோல்வியுற்றதாகவும் அந்நூல் ஆசிரியர் கூறுகிறார். ஆனால் அய்யாவுவின் துயரந்தரும் முடிவைப் பற்றி அச்சுவடு குறிப்பிடவில்லை.

புகழ்பெற்ற பாண்டிச்சேரி நாட்குறிப்பாசிரியரான திரு. ஆனந்தரங்கம் பிள்ளையவர்கள் 1738-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 26-ஆம் நாளுக்கான குறிப்பில் தஞ்சைப்புது மன்னரின் குடும்பத்தைச் சார்ந்த ரங்கோஜி பண்டிதரின் ஆதரவில் வாழ்ந்த (பெயர் தெளிவற்ற) ஓர் அய்யன் என்பவரைக் குறிப்பிட்டுள்ளனர். தஞ்சை அரசனிடம் இருந்து காரைக்காலை வாங்கும் முயற்சியில் பாண்டிச்சேரியிலிருந்து அனுப்பப்பட்ட நால்வர் குழுவில் 'அய்யன்' என்பவரும் இருந்தார் என இந்நாட்குறிப்பு

குறிப்பிடுகிறது. ரங்கோஜி பண்டிதரின் ஆதரவில் இருந்ததாகவே வைத்துக் கொண்டாலும் அய்யாவு எவ்வாறு பாண்டிச்சேரி குழுவில் இடம் பெற்றார்? என்று கூறுவது கடினமே. ஆனந் தரங்கம் பிள்ளையவர்கள் குறிப்பிடும் அய்யனும் அய்யாவும் வெவ்வேறானவர்களாக இருக்கக்கூடும்.

கிடைத்திருக்கும் விவரங்கள் சில இடங்களில் ஒன்றுக்கு ஒன்று முரணாக அமைந்துள்ளன. ஆனால் அய்யாவு அவரது காலத்தில் குறிப்பிடத்தக்க மனிதராக இருந்தார் என்பது மட்டும் உறுதி. காவிரிப்பூம்பட்டினத்துப் பகுதியில் மிக முக்கியமான மனிதராக இருந்தார். அக்குடும்ப வழக்கின்படி, அக்குடும்பத்தின் ஆறு கிளையினர் காவிரிப்பூம்பட்டினம் மற்றும் அதன் சுற்று வட்டார கிராமங்களை உரிமையாகக் கொண்டிருந்தனர். அய்யாவுவின் ஜமீனே பத்து சதுர மைல்கள் பரந்திருந்ததாக அவரின் சந்ததி யினர் கூறுகின்றனர்.

அய்யாவு திருவெண்காட்டுக் கோயிலின் மீது மிகுந்த அக்கறை காட்டினார் என்பதில் ஐயமில்லை. காவிரிப்பூம் பட்டினத்துப் பிராந்தியத்திலேயே இதுதான் பெருமை வாய்ந்த கோயில் ஆகும்.

இத்தகைய வரலாற்றுச் சிறப்புமிக்க ஊரில், செல்வாக்கு மிகுந்த குடும்பத்தில் 1891-ஆம் ஆண்டில் வெங்கடரமணி பிறந்தார். அவரது தந்தையரான திரு. சித்தாந்த அய்யர் சுங் வரிவிதிப்பு அதிகாரியாகப் பணியாற்றினார். பரம்பரையாக வந்த மூதாதையர் சொத்தும் அவருக்கு இருந்தது. அய்யாவுவின் ஏழாம் தலைமுறையாக வெங்கடரமணி பிறந்தார்.

அய்யாவுவின் மகனான முத்தப்பருக்கு ஆறு மகன்களும் ஆறு மகள்களும் இருந்தனர். வெங்கடரமணியின் தாய்வழி பாட்ட னாரான அகோரப்பர் மருத்துவராகவும் சோதிடக் கலை வல்லுநராகவும் விளங்கினார். அவர் நோய்களைத் தீர்ப்பதில் எவ்வளவு வல்லுநர் என்றால், அக்குடும்பத்தில் வழங்கி வந்த பெருமையான கருத்தின்படி, அவரிடம் மருத்துவம் செய்து கொள்ள வெள்ளையர்களும் வருவார்களாம். அது பெரு மதிப்பிற் குரிய ஒன்றாகக் கருதப்பட்ட காலமது. அவர் சோதிடக்கலை பற்றி ஒரு நூல் கூட இயற்றினார். வெங்கடரமணி பின்னர்

அதனை "ஹைவேஸ் ஆப் அஸ்ட்ராலஜி" (Highways of Astrology) எனும் தலைப்பில் 'கும்பா' என்ற புனைப் பெயரில் வெளியிட்டார்.

வெங்கடரமணியின் தந்தையைக் குறித்தும் தாய் யோகாம்பாளைக் குறித்தும் அதிகமாக எதுவும் தெரியவில்லை. அவரது தந்தையார் அக்காலத்துத் தஞ்சாவூர் பண்ணையாருக்கே உரித்தான தோரணையில் அரசு அலுவலகப் பணியின் இடையே ஓய்வு நேரங்களில் விவசாயத்தை மேற்பார்வையிட்டார். அவ்வூரின் சமய, சமுதாய நற்பணிகளில் பங்கு கொண்டார். அவர் வகித்த பதவி இன்றுள்ளவும் போல் சிறப்பு குறைந்ததல்ல. தஞ்சை கிராமம் பகுதியினரின் வழக்கப்படி பெயருக்கு ஓர் உத்தி யோகத்தைச் செய்து வந்தார். அவர் தன் மகனுக்கு ஏக்கர் ஏக்கராக நிலங்களை மட்டும் உரிமையாக வைத்து விட்டுப் போகவில்லை. தஞ்சை கிராமப் பகுதியின் மீது ஆழ்ந்த ஒரு பற்றுதலையும் உண்டாக்கினார். இப்பற்றுதல்தான் பிற்காலத்தில் இலக்கியமாக உருவெடுத்தபோது தமிழிலும் இந்திய-ஆங்கிலத்திலும் அழகிய அணிகளாக உயிர் பெற்றது.

தன் சிறுகதைகளில் சுங்கவரி விதிப்பு அதிகாரி. பாத்திரங்கள் வரும் இடங்களில் வெங்கடரமணி, தன் தந்தையாரின் அதிகார வாழ்வை நினைவு கூர்ந்திருக்கிறார்.

1951-ஆம் ஆண்டில் சென்னையில் சிறப்பாகக் கொண் டாடப்பட்ட அவரது அறுபதாம் ஆண்டு விழாவில் பேசும் போது தனது இளமைக் கால வாழ்வை அவரே விவரித்தார். "சிறுவனாக இருந்த போது மிகவும் உற்சாகத்துடனும், சுறுசுறுப்பாகவும், பரவசமாகவும் ஓடியாடி கூத்தடிப்பேன். வெயிலில் அலைந்து திரிந்து கொண்டிருப்பேன். குறுக்கு வழிகள் கண்டுபிடிப்பதில் ஒரு தனி குஷி. கார்கால கருமேகங்களைக் கண்டாலே எனக்குக் களிப்பாக இருக்கும். மழை பொழிய ஆரம்பித்து விட்டால் போதும், வீட்டை விட்டு வெளியே ஓடி விடுவேன். என் பெற்றோர்களுக்கு அது கவலையைத் தரும். அருகில் உள்ள குன்றுகளிலும் பள்ளத்தாக்குகளிலும் நேரத்தைக் கழிப்பேன். மழை நீரைத் தேக்கிக் குளம் செய்வது, உயர்ந்த தொங்கற் பாறையின்மீது நீரைப் பாய்ச்சி அருவிகளாகச் செய்வது இதுதான் வேலை. மழை கொட்டுவதையும் பாராட்டாமல் தன்னந்தனியாய் நின்று நீரில் நனைந்தவாறு கைதட்டிக்

குதூகலிப்பேன். யாராவது வீட்டிலிருந்து வந்து கூட்டிச் செல்லும் வரையில் இதே கூத்துதான்".

இவ்வாறு இயற்கையுடன் ஒன்றிய, உணர்ச்சிமிக்க சிறுவனைப் பள்ளியில் அடக்கி வைத்த போது அவன் துயரம் அடைந்தான் என்பதில் வியப்பில்லை. "மூன்றாம் ஃபாரம் வரை பள்ளியை நான் ஒரு சிறைச்சாலையாகவே கருதினேன்." என்றார் அவர்.

தஞ்சை மாவட்டத்தில் தற்போது மயிலாடுதுறை என வழங்கப்படும் மாயவரத்தில் உள்ள நேஷனல் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்த பின்னர் மீண்டும் மகிழ்ச்சியுடன் காலங்கழிக்கலானார். சிறப்புமிக்க கணிதஇயல் ஆசிரியரான திரு. சேஷு அய்யர் என்பவர்தான் அப்பள்ளியின் தலைமை ஆசிரியராக விளங்கினார். அரை நூற்றாண்டுகளுக்கு முன்னர் அவரைப் போல சில தலைமையாசிரியர்கள், வெறும் தலைமை யாசிரியர் என்ற வரம்புக்கும் அப்பால் இருந்தனர். ஊரில் மிகுந்த செல்வாக்கு கொண்டிருந்த அத்தலைமையாசிரியர்கள் சான்றோர் களாகவும் அறிஞர்களாகவும் விளங்கினர். வெங்கடரமணியின் கூற்றின்படி அங்குதான் அவர் வாழ்வின் மாற்றத்தை உணர்ந் தார். "மாயவரம் வந்தது மகிழ்ச்சிகரமான இடமாற்றம். சுழல்களோடு பாய்ந்து செல்லும் காவிரியாற்றங்கரையில் பள்ளி நேரம் போக மற்ற நேரங்களில் நான் இயற்றிய பாடல்களைப் பாடிக் கொண்டிருப்பேன். புனிதமான காவிரியாறு எனக்கு ஒரு புது சுதந்திர உணர்ச்சியையும் மகிழ்ச்சியையும் ஊட்டி என்னை ஓர் இயற்கை ரசிகனாக்கியது. மனித குலம் மீது ஆர்வம் காட்டும் மனிதனாய் மாற்றியது. அதுவரை பாடப்புத்தக அறிவாளியாக இருந்த என்னைக் காவிரியாறும், எட்மண்ட்பர்க்கும், ஸ்ரீ அரவிந் தரும், பங்கிம் சாட்டர்ஜி இயற்றிய 'வந்தே மாதரம்' பாடலும் வங்கப் பிரிவினையும் வெறும் புத்தக படிப்பின் பயனின்மையை உணர்த்தின. பாடப் புத்தகங்களும், அறிஞர்களின் வரட்டுப் பொருள் வளமும் புத்தக அறிவை மட்டும் தந்து தேர்வு எனும் கசாப்புக் கடையில் அடிபடும் படிப்பாளியாக மட்டும் மாற்றும் என்பதை உணர்ந்தேன். மேற்சொன்னவை என் நாட்டின் மீதும் மனித இனத்தின் மீதும் முதன் முதலாக அன்பை உருவாக்கி ஊக்குவித்தன. புத்தம்புது வாழ்வை அமைத்துக் கொள்ளும் புத்துணர்ச்சியை, மகிழ்ச்சியைத் தந்தன. சிறுவனாக

இருக்கும்போதே நாட்டின் நிலைமையில் ஏதோ குறையுள்ளது என்பதை உணர்ந்தேன்."

மாயவரம் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கையில் தான் பின்வாழ்வில் தான் சிறப்படையப் போகும் பணியை மேற் கொள்ளத் தொடங்கினார் வெங்கடரமணி. அப்போது அவருக்கு வயது பதினாறு. இலக்கியம், தேசியம் என்ற திருக்கோயிலில் தன்னைத் தானே அர்ப்பணித்துக் கொண்ட ஒரு தீவிர பக்தன் போல, உலகைத் திருத்தி அமைக்கும் பணியில் அவர் உணர்வு பூர்வமாகத் தன்னை ஈடுபடுத்தினார். உலகத்தின் அமைப்பு முறையில் ஏதோ குறையுள்ளது என்று அவர் பதினாறாம் வயதிலேயே அறிந்து கொண்டார். இளமை வேகத்தில் உலகைச் சீர்த்திருத்தும் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். "விவேகத்திற்கும் சமுதாய சீர்திருத்தத்திற்கும் எழுத்தே பொதுவான சிறந்த சக்தி என்பதை உணர்ந்து பள்ளிச் சிறுவனாக இருக்கும்போதே ஒரு பேச்சாளனாகவும், எழுத்தாளனாகவும் ஆனேன். வங்கப் பிரிவினையை எதிர்த்துப் பள்ளி மாணவர்கள் செய்த போராட்டத்தில் என் கன்னிப் பேச்சு நடைபெற்றது. என் முதற் கட்டுரை, மாயவரம் நகராட்சியினரின் திறமையற்ற, ஊழல்நிறைந்த ஆட்சி முறையைக் கண்டித்து எழுதப்பட்டதாகும். இவையெல்லாம் 1907 லும் 1908-லும் நடந்தவை."

அக்கட்டுரைதான் பின்னர் தன்னை ஓர் எழுத்தாளனாக்கியது என்று வெங்கடரமணி பிற்காலத்தில் கூறிக் கொண்டார். அப்போது அவர் நான்காவது ஃபாரம் (அதாவது இன்றைய 9-ஆம் வகுப்பு) படித்துக் கொண்டிருந்தார். 'எட்மண்ட் பர்க்'கின் எழுத்து நடையிலும், அரவிந்தர் 'வந்தே மாதரம்' இதழில் எழுதிய எழுத்திலும் வெங்கடரமணி தன் மனதைப் பறி கொடுத்திருந்தார். இளம் ஆர்வலரின் கவனம் மாயவரம் நகராட்சியின் சீர்கேடான ஆட்சிமுறை விழுந்தது. எட்மண்ட் பர்க், வாரன்ஹேஸ்டிங்குக்கு எதிராகப் பயன்படுத்திய கடுஞ்சொற்களை ஒரு மணி நேரத்திற்கு "கடனாக"ப் பெற்று அவற்றை நகராட்சித் தலைவர் மீது வீசியதாக அவர் கூறினார்.

தான் எழுதிய புகார் குறிப்பைக் காவிரியாற்றின் கரை யோரத்தின் பன்முறை படித்துப் படித்து மகிழ்ச்சியுற்றார். அவர் பின்னர் அதை எதில் அச்சிடச் செய்வது என்று எண்ணிப்

பார்க்கலானார். சென்னையில் வெளியாகும் "ஹிந்து" இதழில் வெளியிடலாம் என்றாலோ "திவான் பகதூர்" ஆர். ரகுநாதராவ் 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியை ஆயுள் குத்தகைக்கு எடுத்துக் கொண்டிருந்ததாக இளைஞரான வெங்கடரமணிக்குத் தோன்றியது. 'ஹிந்து'விலிருந்து 'பிரசுரிக்க இயலாது' எனும் அனுதாபக் கடிதம் வந்தாலும் பெருமைதான் என்றாலும் அப்படிப்பட்ட தியாகத்தில் எல்லாம் அவ்விளம் எழுத்தாளர் மயங்கவில்லை.

அச்சமயத்திலேயே சென்னையில் இருந்து 'இண்டியன் பாட்ரியாட்' எனும் புது நாளேடு வரத் தொடங்கியது. தன் அதிருஷ்டத்தை அதில் சோதித்துப் பார்க்லாம் என்று இந்த மாயவரம் சிறுவன் கருதினான். நான்கு இட்லிகளைத் தியாகம் செய்து அவற்றின் மதிப்பான ஓர் அணா காசில் தபால் தலைகள் வாங்கி தன் கட்டுரையைச் சென்னைக்கு அனுப்பினான். அதன் பின்னர் அதன் தலைவிதியை அறிய தபால்காரரின் காக்கிச் சட்டையையும் அவரது செருப்பின் "கிறீச்" ஒலியையும் நாள் தோறும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். (இவ்வனுபவத்தைப் பின்னர் தான் எழுதிய சிறு கதை ஒன்றில் வெங்கடரமணி நன்கு பயன்படுத்திக் கொண்டார்)

'ஆசிரியருக்குக் கடிதம்' எனும் பகுதிக்கு எழுதிய விஷயம் அப்பகுதியில் வராமல் ஒரு நிருபரின் செய்தியாக 'இண்டியன் பாட்ரியாட்'டில் வெளியாயிற்று. அது மாயவரத்தில் பெரிய கொந்தளிப்பையே உண்டு பண்ணியதாக வெங்கடரமணி தெரிவிக்கிறார். சுதந்திரத்திற்கு பிறகு பரோடாவின் திவானாகவும் புகழ்மிக்க இராஜ தந்திரியாகவும் விளங்கிய திரு. வி.டி. கிருஷ்ணமாச்சாரியார் அப்போது அங்கே மாவட்ட துணை ஆட்சித் தலைவராக (டெபுடி கலெக்டராக) இருந்தார். அவர் அந்தப் பத்திரிக்கையின் பிரதியை நகராட்சித் தலைவருக்கு அனுப்பினார். நகராட்சித் தலைவர் அதைப் படித்துக் கடுஞ்சினம் கொண்டார். 'அதை எழுதியது யார்?' என்று கண்டுபிடிக்க சில ஆட்களை அமர்த்தி இரகசிய புலனாய்வு செய்தார்.

அந்த உளவாளிகள் ஓர் அப்பாவி பள்ளி ஆசிரியர்தான் அதை எழுதியிருக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டனர். அந்தக் கண்டன கட்டுரையை அவ்வளவு உயர்ந்த நடையில் தன்னால் எழுதியிருக்கவே முடியாது என்று அந்த ஆசிரியர் பாவம்

எவ்வளவு எடுத்துச் சொல்லி மன்றாடிப் பார்த்தும் நகராட்சித் தலைவர் நம்பவில்லை. இத்தறுவாயில் வெங்கடரமணி அக்கட்டுரையை எழுதியது தான்தான் என்று தானாக முன்வந்து ஒப்புக் கொண்டார். ஒரு வார காலமாக மாயவரத்தின் செயலாற்றலற்ற நிர்வாகச் சீர்கேட்டைக் கிளறிவிட்டிருந்தார் வெங்கடரமணி. இந்த நிகழ்ச்சியால் எழுத்தின் மாபெரும் ஆற்றலை உணர்ந்து கொண்டார் அவர். இவ் உணர்ச்சி வாழ்நாள் முழுவதும் அவரிடம் ஒட்டிக் கொண்டிருந்தது.

அவருடைய நெருங்கிய உறவினர் ஒருவர் புகழ் பெற்ற அமெரிக்க மற்றும் இந்தியப் பத்திரிக்கைகளை வரவழைத்து ஒரு சிறு கூட்டத்தையேச் சுற்றிக் கூட்டி வைத்துக் கொண்டு உரக்க, உலகையே மறந்தவராய், படித்துக் காட்டுவது வழக்கம். இந்த உற்சாகம் வெங்கடரமணியையும் தொற்றிக் கொண்டு எழுத்துத் துறையின் மீது கவனம் செலுத்தக் காரணமானது.

பத்திரிக்கையாளராகவும், எழுத்தாளராகவும் ஆகியே தீருவது என்ற முடிவுடன் வெங்கடரமணி, கல்லூரியில் சேர சென்னைக்கு வந்தார். சென்னை கிறித்துவக் கல்லூரியில் சேர்ந்து 'விக்டோரியா' விடுதியில் தங்கினார். ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில் இந்தியக் கல்லூரிகளில், 'கேம்பிரிட்ஜ்' பல்கலைக் கழகத்தில் இயங்கிய 'அபாஸில்ஸ்' (Apostles) போன்ற மாணவர் குழுக்கள் ஏற்பட்டதாகத் தகவல் எதுவும் இல்லை. ஆனால் விக்டோரிபா விடுதியில் வெங்கடரமணி அங்குத் தங்கியிருந்த போது, ஒளிவிடக் காத்து நிற்கும் திறமைமிக்க மாணவர்கள் பலர் இருந்தனர். வெங்கடரமணி தமக்கே உரித்தான உற்சாகத்துடன் அவர்களுடன் சேர்ந்து கொண்டார். அக்குழுவினர் பேச்சிலேயே முழுமூச்சையும் செலுத்தினர். எப்போதும் கூட்டமாகக் கூடி பேச்சு பேச்சுதான். வெங்கடரமணியின் குழுவினர் தங்களை 'ஒலிம்பியன்ஸ்' என்று ஆணவத்தால் அன்றி, உற்சாகத்தைப் பெருக்குவதற்கு அழைத்துக் கொண்டனர்.

பெரும்பாலும் கல்லூரி விடுதிகள் 'பாடும் பறவைகளின் கூடாக' இராது. கலையையோ இலக்கியத்தையோ மையமாகக் கொண்ட சங்கங்களைக் காண்பது அரிது. விக்டோரியா விடுதி மட்டும் இதற்கு விதிவிலக்காக அமைந்தது. இருபதாம் நூற்றாண்டின் முதல் முப்பது ஆண்டுகளில் வாழ்ந்த, செயற்கரிய

செயல்களைச் செய்து முடிக்கும் வல்லமை மிக்க பல இளம் அறிஞர்களின் இருப்பிடமாக இருந்தது அது. அவர்களில் சிலர் செயற்கரிய செயல்களைச் செய்தும் முடித்தார்கள். நகர வாழ்க்கைக்கும் புதியதாக வந்திருந்த இந்த இளைஞர்கள், அறிஞர் களின் குழுக்களை அமைத்துக் கொண்டனர். வருங்காலத்தை அறிதல், தலைவிதி, விருப்பம் முதலான பலவிதமான கருத்துக்களை எடுத்துக் கொண்டு அலசி ஆராய்வதில் ஆர்வம் காட்டினர். வெங்கடரமணி கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது விடுதலை போராட்டம் உச்ச நிலைக்கு வரவில்லை. ஆயினும் அந்நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. உலக விவகாரங்கள், இலக்கிய உலகு தத்துவ ஞானிகளின் லட்சியக் கனவு முதலான பல பொருட்கள் விவாதிக்கவும், எதிர்க்கவும் ஆதரித்துப் புகழவும் எவ்வளவோ இருந்தன. பிற்காலத்தில் தம்மை மேம் படுத்திய அறிவு பூர்வ உரையாடல் திறமையை, நுணுக்கத்தைப் பெறும் ஆர்வத்தை, வாய்ப்பை இந்த விடுதியில்தான் வெங்கட ரமணி பெற்றார்.

அவர் தன் முழு நேரத்தையும் பேச்சிலேயே கழித்தார் என்று சொல்ல முடியாது. பிற்காலத்தில் 'ஹிந்து' பத்திரிக்கையின் துணையாசிரியராகவும், 'விக்னேஸ்வரா' என்ற புனைப் பெயரில் 'சுதந்திரா'; 'சுயராஜ்யா' முதலான இதழ்களில் எழுதிப் புகழடைந்தவருமான திரு. என். ரகுநாதன் என்பவரின் துணையுடன் வெங்கடரமணி ஒரு இதழைத் துவக்கினார். அவ்விதழிலும் பிற இதழ்களிலும் வெங்கடரமணி எழுதிய நினைவோட்டக் கட்டுரைகளும் சிறுகதைகளும் பின்னர் 'ஜடாதரன் முதலிய கதைகள்' எனும் தலைப்பில், ரகுநாதனின் முன்னுரையுடன் வெளியிடப்பட்டன.

வெங்கடரமணி தங்கியிருந்த காலத்து விக்டோரியா விடுதி வாழ்க்கை குறித்து மயங்கு வைக்கும் தெளிவற்ற விவரங்கள் கிடைத்துள்ளன. வெங்கடரமணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவில் அன்பொழுகும் பாராட்டு உரையில் ரகுநாதன் இவ்வாறு எழுதுகிறார்.

"இது கே.எஸ்.வி.யோடு ஏற்பட்ட முதல் மற்றும் குழப்பமான போராட்டத்தை நினைவுறுத்துகிறது. நான் விக்டோரியா விடுதியின் நூலகத்தில் அமர்ந்து நாற்காலியை ஜன்னலின் அருகே

தள்ளி வைத்துக் கொண்டு 'இங்கிலீஸ் ரிவ்யூ'வில் முகத்தைப் புதைத்தவாறு ஆழ்ந்து படித்துக் கொண்டிருந்தேன். பேச்சுத் திறமைமிக்க வெங்கடரமணியின், வெளியே போகும் வழியை அடைத்துக் கொண்டிருப்பதை நான் உணரவில்லை. எனக்கு மேஜையின் மீது காலைப் போட்டுக் கொண்டு அமர அதிகாரம் இல்லாததைப் போலவே அவருக்கும் நூலகத்தின் வழியே வெளியேற உரிமை இல்லைதான். என்னருகில் அரை நிமிடம் நின்று, ஒரு மரக் கட்டையைப் பார்ப்பது போல் என்னை நோக்கியவர் பின்னர் உலகுக்கு எல்லாம் கேட்கும் குரலில் "நடைவழி கைகால்களைப் பரப்பிக் கொண்டு கிடப்பதற்கு அல்ல" என்று அவர் சொன்ன போது எனக்குக் குழப்பமாகவும், வேடிக்கை யாகவும் இருந்தது. அங்கேயிருந்து வேகமாக ஓடிவிட்டேன்."

இப்படித்தான் ஏடாகூடமாய் அவர்களின் சிறந்த நட்பு துவங்கியது. வெங்கடரமணி நட்பை ஏற்படுத்திக் கொள்வதில் திறமைசாலி. ரகுநாதன் தொடர்ந்து எழுதுகையில், "கலகம் செய்வதில் அவருக்கு வேட்கை இருந்தது என்று எனக்குத் தோன்ற வில்லை. யாரிடமாவது தனக்குள்ள வாஞ்சையை இவ்வாறு காட்டிக் கொள்வதுதான் அவரது இயல்பு என்பதை விரைவில் அறிந்து கொண்டேன். நான் அவருக்குத் தூரத்து உறவினன் எனத் தெரிந்து கொண்டார். தன் புராதன வீட்டின் மீது அலாதியான பெருமை அவருக்கு இருந்தது. அவரைப் போலவே நானும் இலக்கியம் ஹானர்ஸ் வகுப்பு (Litt. Hons) படிப்பவன் என்றும் அவரைவிட ஓராண்டு கீழ்வகுப்பில் மாநிலக் கல்லூரியில் படிப்பவன் என்றும் அறிந்து கொண்டார். அவரைப் போன்றே எனக்கும் எழுத்தாளனாக வேண்டும் என்று விரும்புவதையும் அவர் உணர்ந்து கொண்டார். 'ஈஸ்ட் அண்டு வெஸ்ட்' என்ற இதழில் எனது எழுத்து முயற்சி - அந்தக் கால கட்டத்திய இலக்கியம் ஒரு கண்ணோட்டம் - வெளிவந்ததைப் பார்த்து வெங்கடரமணி அனைவரிடமும் சென்று இலக்கிய அடிவானில் ஒரு புது விண்மீன்-பிரகாசமான நட்சத்திரம் - தோன்றியுள்ளது என்று சொல்லி வந்தார்.

வேறு ஓரிடத்தில் ரகுநாதன் குறிப்பிடுவதில் இருந்து வெங்கடரமணி புதியதாக வருவோர் போவோர் அனைவருடன் தன்னம்பிக்கையோடு சந்தித்துப் பேசுவார் என்று தெரிகிறது. வெங்கடரமணியின் தன்னம்பிக்கையைச் சித்தரித்துக் கூறுகையில்

'நாட்டுச் சேவல் உதயசூரியன் வருகையை எப்படி எக்காளமிட்டுக் கூவி அறிவிக்குமோ' அப்படி என உவமையோடு கூறுகிறார். திரு. மலபாரியின் 'ஈஸ்ட் அண்டு வெஸ்ட்' -இல் இரண்டு கட்டுரைகள் பிரசுரித்த தைரியத்தில் அரசு மாளிகையில் சர். வேலண்டின் சிராலை அவர் மடக்கியது அவருடைய விடுதியைச் சேர்ந்த எங்களுக்குப் பெரு வியப்பாக இருந்தது. எங்களுக்கு எங்கள் கல்லூரிப் பேராசிரியர்களிடம்கூட பேசத் துணிவு இருந்தது கிடையாது" என்றார் ரகுநாதன்.

வயதுக்கு மீறிய தனது இளமைக் கால திறமைகள் கல்லூரியில் மலர்ச்சியடைந்தன என்று வெங்கடரமணியே கூறியிருக்கிறார். அவரது வழக்கமாக கவர்ச்சிகர சொற்களில் கூற வேண்டுமானால் அவர். சென்னைக்கு இடமாற்றமானது, "நாற்றங்காலிலிருந்து பயிர் வயலில் நடப்பட்டதைப் போன்றதாகும். மொட்டு மலர்ந்து மணத்தை வெளிப்படுத்தியது போன்றதாகும்" என் வாழ்க்கை யிலேயே கல்லூரியில் பலவிதமான மகிழ்ச்சிகர செயல்களில் ஈடுபட்டு பரவசமாகக் கழித்த அந்த ஐந்து ஆண்டுகள்தான் மகத்தான காலம்" என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

வெங்கடரமணி சட்டக் கல்லூரியில் சேர்ந்து சட்டவியலில் பட்டம் பெற்றார். அவ்வகையில் அவர் அக்காலத்தில் படித்த இந்தியர்கள் பொதுவாகச் செய்த ஒரு செயலையே செய்தார். விரிவாகக்கூறினால் அக்கால இந்தியர்களுக்கு இரண்டேவித வேலை வாய்ப்புகளே இருந்தன: அரசு ஊதியம் மற்றும் வழக்கறிஞர் தொழில். இப்போது எண்ணிப் பார்க்கும்போது, வெங்கடரமணியின் மனப்பாங்கிற்கு அவரை விட எவரும் வழக்கறிஞர் தொழிலுக்குப் பொருத்தமற்றவராக இருந்திருக்க முடியாது என்று தோன்றுகிறது. அவருடைய இலட்சிய மனப் பாங்கும் வழக்கறிஞர் தொழிலில் வெற்றி பெறத் தேவையான உணர்ச்சிக்கு இடமில்லாத புத்திசாலித்தனமும் முற்றிலும் மாறுபட்டவையாகும்.

ஆயினும் வெங்கடரமணி வழக்கறிஞர் பணியைச் சீராகவே துவக்கினார். அப்போது அட்வகேட்-ஜெனரலாக இருந்து, பின்னர் வைஸ்ராயின் செயற்குழுவில் இடம் பெற்ற சர்.சி.பி. இராமசுவாமி அய்யரிடம் பயிற்சி பெறத் தொடங்கினார். 1922-23ஆம் ஆண்டுகளில் விரிவாக நடைபெற்ற தஞ்சை அரச

குலத்துக்குச் சம்பந்தமான தத்து பற்றிய ஒரு கடின வழக்கில் கலந்து கொண்ட வழக்கறிஞர்களில் வெங்கடரமணியும் ஒருவர். வேறு சில நல்ல வழக்குகளும் அவருக்குக் கிடைத்தன. எனினும் இத்தொழிலில் அவரது மனம் ஈடுபடவில்லை. உயர்நீதி மன்றத்திற்கு அவர் ஒழுங்காக போய் வந்தார். ஆனால் அங்கே நூலகத்தில், தன் சகாக்களான உயர்குடி மக்களுடன் உரையாடத் தான் சென்றார். மெல்ல மெல்ல வழக்கறிஞர் தொழிலைத் துறந்து விட்டு அதிகமாக எழுத்துப் பணியில் மூழ்க ஆரம்பித்தார். எனினும் அவரது நாவல்களில் அவரது வழக்கறிஞர் வாழ்க்கையின் சில எதிரொலிகள் இருக்கத்தான் செய்கின்றன. 'முருகன்-ஓர் உழவன்' எனும் நாவலில் வரும் 'மார்க்கண்டம்' எனும் வழக்கறிஞர் பாத்திரம் அப்போது சட்டத்துறையில் புகழ் பெற்றிருந்து பின்னர் அட்வகேட்-ஜெனரலான ஒரு வழக்கறிஞரை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டதாகும்.

"நான் பல சங்கங்களில் செயலாளராக இருந்த காரணத்தால், என் கல்லூரி நாட்களில் பெரும்பாலும் நாள்தோறும் நான் ஏதாவது ஒரு சங்கத்தில் பேசினேன். இதனால் இளம் பருவத்திலேயே உயர்நீதி மன்ற நீதிபதிகள் முதலான பல முக்கியமானவர்களுடன் எனக்குத் தொடர்பு கிடைத்தது. டபுள்யூ.எம்.கோட்ஸ்--ட்ராட்டர், வழக்கறிஞர் குழாமில் உறுப்பினர்களான சர்.சி.பி.இராமசுவாமி அய்யர், எஸ். ஸ்ரீனிவாச அய்யங்கார் மற்றும் பத்திரிக்கையாளர்களா ன எஸ்.கஸ்தூரி அய் யங்கார், டி.ஈ.வெல்பி முதலியவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டேன்"

உலக வாழ்க்கைக்கு ஒத்துவராத இந்த இலட்சியவாதி தான் வழக்கறிஞர் தொழிலை மிகவும் விரும்பியடைந்ததாகக் கூறிக் கொண்டே அத்தொழிலில் வெற்றியடையாமல் இருந்திருக்கிறார். அவருடைய நோக்கில் கட்சிக்காரர் என்பவர் விசித்திரமான உணர்ச்சிக் குவியலுடன் கூடிய ஒரு புதிரான மனிதப்பிறவி.

இப்படி வழக்கறிஞர் தொழிலில் தோல்வியுற்ற வெங்கடரமணி அரை நூற்றாண்டுக்கு முன்னர் சென்னையில் நகைப்புக் குரியவராய் இருந்தார். இவரைப் போன்றே வழக்கறிஞர் தொழிலில் வெற்றி பெறாத நகைச்சுவை எழுத்தாளரான

எஸ்.வி.வி. இப்படிப்பட்ட பிழைக்கத் தெரியாத வழக்கறிஞர்களைப் பற்றி நகைச்சுவையாக எழுதுவதுண்டு. பிழைக்கத் தெரிந்த வழக்கறிஞருக்கும் அப்பாவி வழக்கறிஞருக்கும் உள்ள வேற்றுமையை ஒரு கதை மூலம் சொல்வதுண்டு. வழக்கு தொடர்ந்திருந்த ஒரு கட்சிக்காரர் ஒரு வழக்கறிஞர் வீட்டிற்குச் சென்று அவரைப் பார்க்க வேண்டும் என்று அழுக்குச் சட்டையுடன் அலங்கோலமாக இருந்த ஒருவரைக் கேட்டாராம். அதற்கு அவர், "நான்தான் வக்கீல். உங்களுக்கு என்ன வேண்டும்?" என்றுகேட்டாராம். பரிதாபமாகக் காட்சியளித்த அவரை வியப்புடன் ஒருமுறை ஏற இறங்க பார்த்துவிட்டு கட்சிக்காரர் வேறு ஒரு வழக்கறிஞரைப் பிடிக்க நழுவி விட்டாராம். அங்கேயும் ஓர் அசுத்தமான மனிதரையே சந்தித்தாராம். "வக்கீலைப் பார்க்க வேண்டும்" என்றபோது, "கேட்டுச் சொல்கிறேன்" என்று உள்ளே சென்றவர், நன்கு உடையணிந்து கொண்டு வெளியே வந்து, "நான்தான் வக்கீல். என்ன விஷயம் சொல்லுங்கோ" என்று கேட்டாராம். அக்கட்சிகாரர் அவரையே வழக்கறிஞராக வைத்துக் கொண்டதாகக் கதை. முதல் வழக்கறிஞரின் இடத்தின் வெங்கடரமணி இருந்திருந்தால் "நீங்கள் யார்? எந்த ஊர்? சுதந்திர போராட்டத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்றெல்லாம் குறுக்கு விசாரணை செய்து கட்சிக்காரர் வேறு ஒரு வழக்கறிஞரைத் தேடிக் கொண்டு ஓடும்படி செய்திருப்பார்.

வெங்கடரமணியின் வாழ்க்கையின் கதை இதன் பின்னர் அவரது நண்பர்களையும் அவரது எழுத்துப் பணியையும் பற்றித் தான் இருக்கிறது. உள்நோக்கித் திரும்பிய ஆன்மீக வாழ்க்கையை மேற்கொண்டார் அவர். 1930-ஆம் வருடத் தொடர் காலத்தில் அவர் மைலாப்பூர் வீதிகளில் தலையைக் குனிந்தபடி மெள்ள நடந்து கொண்டிருப்பதைக் காணலாம். புறநினைவே இருக்காது. அவரைப் பார்ப்பவர்கள் 'அடக்கமான தோற்றத்துடன், உலகப் பண்பாட்டைத் துறக்காமல் காணப்படும் இம்மனிதர் ஆன்மீக வாழ்வில் திளைப்பவர்' என எளிதில் தெரிந்து கொள்வர். ஒரு வேளை காவிரி நதியையும் காவிரிப்பூம்பட்டினத்தையும் பற்றி நினைத்துக் கொண்டிருந்தாரோ என்னவோ? நகர வாழ்க்கை சற்றும் பிடிக்காத அவரை, இறைவனுடனும் இயற்கையுடனும் மனிதன் தொடர்பு கொள்ளத்தக்க, கிராமப்புறத்தின் பரந்த வெளிதான் கவர்ந்திழுத்தது. வங்கக் கடலில் காவிரியாறு

சங்கமமாகும் காட்சி அவரது அகக்கண்முன் அகலாது என்றும் நின்றது.

அவருக்கு நண்பர்களே சொத்து சுகம் எல்லாம். சொல்லப் போனால் அவர் எழுதிய நூல்களுக்குப் பின்னர் அவருக்குச் சிறப்பைத் தருவது பலதரப்பட்ட மனிதர்களுடன் அவர் பூண்டிருந்த நட்பும் ஆதரவும்தான். அவர் எளிதாக நண்பர்களை உண்டாக்கிக் கொண்டதோடல்லாமல் அவர்களை இறுதிவரை தக்க வைத்துக் கொள்ளவும் செய்தார்.

திரு. கே.ஆர். ஸ்ரீனிவாச அய்யங்கார், வெங்கடரமணியின் பகுத்தறிவாற்றலாலும் மனிதாபிமானத்தால் இளமையிலேயே கவரப்பட்டார். "நாளடைவில் வெங்கடரமணியின் வட்டத்துக்குள் நான் ஈர்க்கப்பட்டேன். நாங்கள் ஏழு பேர்; வெங்கடரமணி, கே. சந்திரசேகரன், கே. இராம கோடீஸ்வர ராவ், எம். சலபதிராவ், மஞ்சேரி, எஸ். ஈஸ்வரன், ஏடிமணி, நான் (சென்னை ஆர்மினியன் வீதியில் உள்ள) ஒய்.எம்.ஐ.ஏ. கட்டிடத்தில் திரிவேணி அலுவலகத்தில் முதல் மாடியில்தான் சந்தித்துக் கொள்வோம். மதிய உணவின்போது வெங்கடரமணியும் சந்திரசேகரனும் டர்பன், நீளக்கோட்டு சகிதமாக வந்துவிடுவார்கள். இராம கோடீஸ்வரராவ் லேசில் சிரிப்பு வராத 'உம்' என்ற முகத்துடன் சிலையைப் போல் அமர்ந்திருப்பார். சலபதிராவ் வெட்டி எறிந்து காரசாரமாய் எல்லாவித விவகாரங்களைப் பற்றியும் விவாதிப் பார். மணி குடுகுடுவென்று பாதரசப் பந்து போல் துள்ளி வருவார்; ஓட்டாமல் அதே வேகத்தில் நழுவி விடுவார். ஈஸ்வரன் இளமையிலேயே ஞானியானவரைப் போன்றும் உலக இன்ப துன்பங்களைத் தம் தோளில் சுமந்து கொண்டிருக்கும் கவிஞர் போலவும் இருப்பார்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன், இன்று மிகவும் குறைவாகவே தெரிந்துள்ள அறிவு ஜீவிகளின் வாழ்க்கைத் தரத்தை இந்த விசேஷக்குறிப்புகள் நினைவுக்குக் கொண்டு வருகின்றன. வேறுபட்ட சூழ்நிலைகளிலிருந்து வந்தாலும் நாட்டு நலனை மையமாகக் கொண்டு ஒருங்கே இணைந்த, உயர்ந்த குறிக் கோள்களைக் கொண்டிருந்த படித்த இளைஞர்களின் அறிவுச் சங்கமத்தை இங்கே காண்கிறோம். பேச்சால் உலகத்தையெல்லாம்

எப்படியெல்லாம் அலசினார்களோ! இக்குழுவிற்கு வெங்கடரமணி தலைவரும் ஆலோசகரும் ஆவார்.

வெங்கடரமணியின் தோழமையில் மனம் இணைந்து மகிழ்ச்சி ததும்பிய நிலையைச் சந்திரசேகரன் சமீபத்தில் வருணித்துள்ளார். "பேச்சையே மூச்சாகக் கொண்டிருக்கும் நண்பர்களைப் பார்த்து விட்டால் போதும். வெங்கடரமணியின் கண்கள் ஒளியுடன் திகழும். அவரது நாக்கு உவமான உவமேயங்களை அள்ளி வீசும். சற்றுப் பெருமிதமாகப் பேசினாலும் நயமான நகைச்சுவை அவரது பேச்சில் புரளும். அவருடைய கிண்டல் பேச்சை ரசிக்க அவரைச் சுற்றி எப்போதும் ஒரு கூட்டம் இருக்கும். கன்னா பின்னாவென்று வாயாட மாட்டார். அதே சமயம் கண்டனம் செய்யவே முடியாத சொற்பொழிவாகவும் இருக்காது. அமைதியான நீர்நிலையின் மேல் சிறு கூழாங்கற்களை வீசியெறிந்து அதில் ஏற்படும் அலை வட்டங்களை வேடிக்கை பார்ப்பதுபோல் இருக்கும் அவரது உரையாடல். வேண்டாத ஆங்காரமோ சஞ்சல உணர்ச்சியோ கொள்ள மாட்டார். தன் உரையாடலைக் குறைத்துக் கொள்ளவும் தெரியும்; அதே சமயம் நீட்டிக் கொண்டே போகவும் தெரியும். மிகவும் இனிமையாக, ஆவலைத் தூண்டும் வகையில் ஆர்வமாகத் தொடரும் உரையாடலை-சொந்தப் பணி ஏதாவது வந்தால்-திடீரென நிறுத்திவிட்டுப் போகவும் செய்வார். தன் வாழ்வின் குறிக்கோளை எப்போதும் மனதில் நிறுத்தி வைப்பார். எந்தவித ஆர்ப்பாட்டமும் இன்றி கவனத்தைத் தன்பால் கவர்ந்திழுத்துக் கொள்வதில் அதிசமர்த்தவர். எவருடைய மனத்தையும் புண் படுத்தாமல் இதைச் செய்வதில் அவர் சிறந்த திறமை கொண்டிருந்தார்."

தன் போன்ற அறிஞர்களின் நன்மதிப்பைப் பெற்ற, அதே சமயம் எழுத்துப் பணியில் முழுமூச்சாக மூழ்கியிருந்த வெங்கட ரமணியின் உருவத்தைச் சந்திரசேகரன் இவ்வாறு படம்பிடித்துக் காட்டுகிறார். "சிறிய தலை. அதன் உச்சியில் சிறு குடுமி. குறுகிய முகவாய். மூக்குக் கண்ணாடி வழியாக எடைபோடும் கூரிய பார்வை. இதுதான் வெங்கடரமணியின் தோற்றம். அவருடைய உடையில் நவீன பாணி என்பதை இம்மியும் காணமுடியாது. இறுக்கி மூடிக்கொண்டிருக்கும் சாதாரண கோட்டும் தலையோடு பொருந்தாத ஒரு தலைப் பாகையும் அணிந்து கொண்டு

'நடையுடை பாவனையே முக்கியம்' என்று கொண்டிருக்கும் புறஉலகை லட்சியம் செய்யாத ஒரு தோரணை அவரிடம் காணப்படும்."

மேற்கூறியவற்றால் மக்களைக் கவர வெங்கடரமணி தன் வெளிப்படைத் தோற்றத்தை நம்பியிருக்கவில்லை என்பது புரியும். உண்மையில் ஒரு படைப்பாசிரியராக அவர்தன் சமகாலத்தவர் பாராட்டைப் பெற்றார். முதல் உலகப் போர் நடைபெற்ற காலத்தில் அமெரிக்க நாட்டுக் குடியரசுத் தலைவரான உட்ரோ வில்சனுக்கு இந்திய சுதந்திர போராட்டம் குறித்த ஆங்கிலேயர் போக்கைக் கண்டித்து 1927-ல் கடிதம் எழுதிய சென்னை உயர்நீதி மன்ற நீதிபதியான சர்.எஸ். சுப்பிரமணிய அய்யரைப் பாராட்டி வெங்கடரமணி ஒரு கட்டுரை எழுதினார். அக்கட்டுரையைப் பற்றித் திரு. சந்திரசேகரன் குறிப்பிட்டுள்ளார். அக்கட்டுரை தீரர் எஸ். சத்தியமூர்த்தி அவர்களைப்பெரிதும் கவர்ந்தது. அதை எழுதிய ஆசிரியருக்குப் பாராட்டுக் கூட்டம் ஒன்றை நடத்த வேண்டுமென அவர் விரும்பினார். அதற்காகத் திரு. சந்திர சேகரன் புகழ்பெற்ற ஆபரண அங்காடிக்குச் சென்றார். 125 ரூபாய் மதிப்புள்ள தட்டு ஒன்றை வாங்கினார். அக்காலத்தில் அது ஒரு பெருந்தொகையாகும். அதில் பொறிக்க காளிதாசரின் சாகுந்தலத்தின் இறுதிப் பாடலைப் பேராசிரியர் எஸ். குப்புசுவாமி சாஸ்திரி தேர்ந்தெடுத்தார். வழக்கறிஞர் சங்கத்தில் அப்பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. அதற்குச் சென்னை உயர்நீதி மன்றத்தின் நீதிபதியான சர். சி.வி. குமாரசுவாமி சாஸ்திரி தலைமை தாங்கினார்.

இக்காலத்தில் வெங்கடரமணி ஆன்மாவிற்கும் அறிவிற்கும் விருந்தாக அமைந்த பல நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டார். இது பற்றி அவரது நண்பர்கள் பலர் எழுதியுள்ளனர். உதாரணமாக, திரு. ஒய். மகாலிங்க சாஸ்திரி (வெங்கடரமணியின் 'சாம்புவுடன் ஒரு நாள்' எனும் படைப்பினை வடமொழிப்படுத்தியவர்) அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது "நண்பர் கூட்டம் அவரை எப்போதும் சூழ்ந்திருக்கும். மேதைமையும் நகைச்சுவையும் நிரம்பிய திறமையான உரையாடலில் அவர் இருபதாம் நூற்றாண்டின் ஜான்சனாகத் திகழ்ந்தார். அவரது திறமையை வியந்து ரசிப்ப வர்கள் அவரது உரையாடலின் தீவிரத்தைத் தூண்டுவதற்காக இடையிடையே ஓரிரண்டு சொற்களைக் கூறியவாறு அவரது

பேச்சைக் கேட்பதில் மகிழ்ச்சி அடைந்தனர். அறிவாற்றலும், கிண்டலுமாக ஒழுங்குபட அவரது பேச்சு அமையும். மதிப்பை உண்டாக்கும். நேர்த்தியும் ஒளிவிடும். அவரைச் சூழ்ந்திருப் பவர்கள் யாருக்குமே பொழுது போவதே தெரியாது. அவரது கூர்மையான பார்வை அப்படியே அனைவரையும் பேச்சில் இரண்டறக் கலந்து விடுமாறு செய்யும். குறும்புத்தனமான அவரது பேச்சு நமது மனத்தவறுகளை உணரச் செய்துவிடும். பரிவு உணர்விலும் அன்போடு பழகும் பண்பிலும் ஊறித் திளைத்த இயல்பின் காரணமாக பிறர் மனதை அதிர்ச்சியடையுமாறோ வருத்தப்படுமாறோ செய்வதைக் காட்டிலும் மனதுக்கு இதமளிப்பதாகவே அது அமையும். அவரது மனம் எப்போதும் பொங்கியெழும் உணர்வுடையதாக இருக்கும். அவரது பேச்சில் பரந்த, சுவைமிக்க, தந்திரமான நகைச்சுவை துள்ளும். ஜீவன் ததும்பும் சிந்தை, உரிய வார்த்தையைத் தேர்ந் தெடுத்து உரிய இடத்தில் பயன்படுத்தித் தன் கருத்துக்களை வெளியிடும் ஆற்றல், மின்னித் தெறித்து ஒளிவிடும் உருவகங்களை எப்போதும் வழங்கும் திறன் பெற்றிருந்தார் அவர்."

அவரது நூல்கள் தொடர்ந்து பிரசுரம் பெற்றதும் வெங்கடரமணி அவரது வாழ்நாட்களிலேயே ஓர் இலக்கிய நிறுவனமாக விளங்கலானார். அவரது ஆளுமை அவரது நண்பர்களைக் கவர்ந்ததைப் போலவே, அவரது எழுத்துக்கள் வாசகர்களைக் கவர்ந்தன. அவரது படைப்புக்கள் அவரைச் செல்வந்தராக்கவில்லை. அவரது முன்னோர்கள் விட்டுச் சென்ற சொத்தான எழுநூறு ஏக்கர் ஏழு ஏக்கராகத் தேய்ந்தது. இருப்பினும் அவரது ஆன்மீக வாழ்வு இதனால் பாதிக்கப் படவில்லை. அவரது வங்கி இருப்பில் பணம் பெருகாவிட்டாலும் அவரது புகழ் பெருகியது.

வெங்கடரமணி முதலில் ஆங்கில மொழியில் எழுதினார். ஏனெனில் அக்காலத்து மக்களின் மனப்பாங்கே அவ்விதமாக இருந்தது. ஆனால் காலஞ் செல்லச் செல்ல அவர் தன் தாய் மொழியான தமிழ் மொழிக்குத் தாவினார். இரவீந்திரநாத் தாகூரைச் சாந்திநிகேதனில் சந்தித்தபொழுது அவர் வெங்கட ரமணியிடம் தமிழில் எழுதும்படி ஆலோசனை கூறியதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் அதற்கு முன்னரே அவர் "தமிழ் உலகு"

என்ற தமிழ் வார இதழைத் துவக்கியிருந்தார். 1922-முதல் 1924 வரை- அதாவது இரண்டாண்டுகள் - அது நடந்தது. அவரது ஆங்கில எழுத்துக்களைப் போலவே தமிழிலும் இசை நயமிக்க இனிய நடை அமைந்திருந்தது.

பின்னர் 'பாரத மணி' எனும் தமிழ் இதழ் வெளியிடப்பட்டது. அதை நடத்துவது பொருளாதாரச் சுமையாக இருந்தது. பெருஞ் சிரமத்துடனேயே அதன் இதழ்களை வெளிகொணர முடிந்தது. எனினும் வெங்கடரமணி அதைத் தொடர்ந்து வெளியிட்டார். அதன் மூலம் நாட்டினருக்கு எவ்வளவோ சொல்ல வேண்டியிருப்பதால் அதைத் தொடர்ந்து நடத்துவதில் ஒரு குறிக்கோள் உள்ளதாக அவர் கூறினார். ஐம்பது இதழ்கள் வெளிவந்தபின் அது நிறுத்த வேண்டியதாயிற்று. (தமிழில் அவரது பத்திரிக்கைத் துறை அனுபவத்தைப் பற்றி இந்நூலின் பிற்பகுதியில் விவரமாகக் கூறப்பட்டுள்ளது). 'கந்தன் தேசபக்தன்' எனும் தனது ஆங்கிலப் புதினத்தை அவரே தமிழில் மொழிபெயர்த்தார்.

சென்னையில் இருந்ததைப் போலவே வெங்கடரமணிக்கு இந்தியாவின் இதர பாகங்களிலும் நண்பர்கள் பலர் இருந்தனர். சி. இராஜகோபாலாச்சாரியார், சி.பி. இராமசுவாமி அய்யர், டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், விடி. கிருஷ்ணமாச்சாரியார், பொருளாதாரப் பத்திரிக்கையாளர் சி.எஸ். அரங்கசாமி முதலியோர் அவர்களில் குறிப்பிடத் தக்க சிலராவர். வெங்கடரமணி அடிக்கடி வட இந்திய நகரங்களுக்குச் சென்று கிராம வளர்ச்சி, இந்திய அரசியல், ஆங்கில இலக்கியம் முதலியவற்றைக் குறித்துச் சொற்பொழிவுகளாற்றினார். இராமசுவாமி அய்யரும், இராதாகிருஷ்ணனும் பெனாரஸ் இந்து பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர்களாகப் பணியாற்றிய காலத்தில் வெங்கடரமணி அங்கு சென்று மாணவர்களிடையே பேசினார்.

ஆள்வார் சமஸ்தான அரசரிடம் இரண்டு ஆண்டுகள் கிராம வளர்ச்சி ஆலோசகராகப் பணியாற்றினர். அக்குறுகிய காலத்திலேயே அவர் செய்த நற்பணிகள் ஏராளம். ஆனால் ஆள்வாரிலேயே அவர் காச நோயால் பாதிக்கப்பட்டார். அப்பிணியைத் தீர்க்கும் சரியான மருந்துகள் அந்நாட்களில் இல்லாத காரணத்தால் அந்நோயே அவரைக் கொன்றுவிட்டது.

அவரது ஆன்மீக ஆசிரியர்களில் காஞ்சி, காமகோடி பீடத்தின் பெரிய சங்கராச்சாரிய சுவாமிகளும் ஒருவர். சுவாமி களின் சமூகத்திற்கு மெய்யியலில் பிரபல எழுத்தாளரான பால் பிரண்டனை வெங்கடரமணி அறிமுகப்படுத்தினார். பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியிடம் பால் பிரண்டனை அழைத்துச் சென்றவரும் அவரே.

அவரது அறுபதாம் ஆண்டு நிறைவு விழா சென்னையில் 1951-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 24-ம் நாள் அவரது நண்பர் களால் சிறப்பாக நடத்தப் பெற்றது. சென்னை உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியான டாக்டர் பி.வி. இராஜ மன்னார் (இலக்கியவாதியான அவர் அப்பதவியை வகித்த முதல் இந்தியராவார்) தலைமை தாங்கினார். "ஆங்கிலத்தையே தாய்மொழியாகக் கொண்டு இலக்கியத் தேர்ச்சியினால் புகழ் பெற்றவர்களுக்கு நிகரான ஆங்கிலப் புலமை அவரிடம் இருந்தது." என்று அவர் பாராட்டினார். "இந்தியாவின் வரலாற்று ரீதியான பண்பாட்டின் மிக முக்கிய உணர்வை, நாட்டின் வாழ்விலும் சமூக அமைப்புகளிலும் வெளிப்பட்ட முறையில் அவர் தமது நேரான உள்ளுணர்வாலும் விமர்சன ஆற்றலினாலும் பகுத்தறிந்து ஆராயும் திறனாலும் நன்கு கிரகித்துக் கொண்டிருந்தார். கிராமத்தில் அடையப் பெற்றிருந்த கூட்டு முயற்சி, தனி மனித சுதந்திரம் ஆகியவற்றின் வெகு பரிபூரண ஒருங்கிணைப்புதான் தேசிய வாழ்வின் உண்மையான ஜீவன் ஆகும் என அவர் உணர்ந்திருந்தார். கிராமத்தின் ஆதார வாழ்வையும் அதன் அடையாளத்தையும் சிதைத்து விடாமல், கிராமத்தைப் பாது காக்கவும், நவீன வழிகளில் அதைப் புதுப்பிக்கவும் அவர் கடந்த முப்பது ஆண்டுகளாக வாதாடி வந்தார்."

தனது சொந்த கிராமத்தில் ஆசிரமங்களையும் கிராமீய பல்கலைக் கழகம் ஒன்றையும் நிறுவ வேண்டும் என்று பெரிதும் விரும்பிய வெங்கடரமணியின் ஆர்வத்தை டாக்டர் இராஜமன்னார் குறிப்பிட்டார். மேலும் "காவிரியாறு கடலில் கலக்கும் இடமான, தன் சொந்த ஊரான காவிரிப்பூம் பட்டினத்தில் அவர் தமது இறுதி நாட்களை இனிமையாகக் கழிக்கத் திட்டமிட்டிருந்தார். அதற்காக காற்றோட்டமுள்ள ஒரு சிறந்த இடத்தையும் தேர்ந்தெடுத்திருந்தார்." என்று கூறினார். பேராசிரியர் கே. சுவாமிநாதன், "ஒரு கட்டுரையாளராக,

நாவலாசிரியராக, சிறுகதை எழுத்தாளராக ஆங்கிலத்திலும், வீறுமிக்க நடைக்கு உரியவராக தமிழிலும்; மேலும் சமுதாய முருகியல் தொடர்பாக ஓர் ஆக்கப்பூர்வமான சிந்தனை யாளராகவும் நடைமுறைக்கு இணங்கிய லட்சியவாதியாகவும் அல்லும் பகலும் பல்லாண்டுகள் கிராம முன்னேற்றத்திற்கு அயராது உழைத்தவர் என்ற முறையிலும் வெங்கடரமணியின் தொண்டு மிகப் பெரியது. பன்முகச் சிறப்பும் மதிப்பு வாய்ந்த அவரது சமுதாயப் பணியும் அதற்குரிய அங்கீகாரத்தை இன்னும் பெறவில்லை என்பதைக் குறிப்பிட வேண்டும். நமது காலத்தின் மாபெரும் அறிஞர்களான மதன்மோகன் மாளவியா, சி.ஆர். ரெட்டி, இராஜேந்திர பிரசாத், சி.பி. இராமசுவாமி முதலான வர்கள் பல்லாண்டுகளுக்கு முன்னரே அவரது அருமையினை உணர்ந்திருந்தனர்.

நமது பண்பாட்டின் தூதுவராக அவரைப் புகழ்ந்தும் இருக்கிறார்கள். நமது காலத்தின் மிகச் சில மாசற்ற லட்சியவாதிகளில் வெங்கடரமணி ஒருவர் என்பதை உணர்ந்து அவரை நாம் வணங்கக் கடமைப்பட்டுள்ளோம். மனித வாழ்வில் நிலையற்ற, குறுக்கு வழிகளில் வெற்றி பெறுவது உண்மையான புகழுக்கு வழியன்று. அதைவிட செயற்கரியன செய்ய முயன்று அதில் காணும் தோல்வியே மேலானது என்பதை அவரது வாழ்க்கையும் நம்பிக்கையும் நிரூபிக்கும். வானத்தின் நிலவை நோக்கி, அதனைத் தொட முடியாவிட்டாலும், அதைச் சுட்டிக் காட்டி நிற்கும் ஆட்காட்டி விரலைப் போல, அவரது வாழ்வு, மனிதன் என்பவன், எதையும் இழுத்துச் சேர்த்துக் கொள்ளும் கை போன்றவன் என்பதைவிட எதையும் பார்த்து அறிந்து கொள்ளும் கண்களைப் போன்றவன் என்பதைத் தெளிவுறுத்துகிறது. அவரைப் போன்ற மனிதர்களே உண்மையில் நமது பொது வாழ்க்கைக்குக் கண்களாவர்" என்றும் கூறினார்.

வெங்கடரமணி அச்சமயத்தில் ஆரோக்கியமற்று இருந்தார். உண்மையில், அப்பாராட்டுக் கூட்டத்தில் அவரது பதிலுரையில் "என்னை அழித்து விட்டது" என்று அவர் குறிப்பிட்டார். அவர் சிறிது நேரமே பேசினார். எனினும் அவர் எழுதிய உரை ஒன்று இருந்தது. அது அவரது வாழ்க்கை மற்றும் படைப்புகள் பற்றிய ஆய்வுக்குப் பெரிதும் பயன்படுவது.

தன்னைக் காசநோய் நாசப்படுத்துவதை கவலையுடன் குறிப்பிட்ட வெங்கடரமணி "இந்த ஐந்து ஆண்டு காலமாக குரல் பலவீனமடைந்து பேசவும் மூச்சுவிடவும் துன்பமாக உள்ளது" என்றுகூறினார்.

இந்த விழாவிற்குப் பின்னர் வெங்கடரமணி ஆறு மாதங்களே உயிரோடு இருந்தார். அவர் முதலில் மதனபல்லியிலும் பின்னர் தாம்பரத்திலும் மருத்துவம் செய்து கொண்டார். எனினும் பலனில்லை. அவர் மயிலாப்பூரில் தனது வீட்டில் 1952-ஆம் ஆண்டு பிப்ரவரி திங்களில் மரணமடைந்தார்.

# 2

## ஆக்கூரின் சிறப்பு

*பல ஆண்டுகளுக்கு முன்பு கிராமத்தைப் பற்றி கனவு கண்டு கொண்டிருந்த ஒருவரைப் பற்றி இன்று நாம் ஏன் படித்தறிந்து கொள்ள வேண்டும்? அவர் 1980-ஆம் ஆண்டு சிந்தனை யோட்டத்திற்கு ஏற்றவரா?*

வெங்கடரமணியைப் பிறவி எழுத்தாளர் என்றே கூறலாம். அவருடன் கல்லூரியில் பயின்ற பலர் இந்திய விடுதலைக்காகவும், கிராம சீரமைப்பிற்காகவும் மற்றும் சில உயர்ந்த இலட்சியங் களுக்காகவும் தங்களை முழுதுமாக ஈடுபடுத்திக் கொண்டவர்கள். இறுதியில் அவர்கள் சட்டத்துறையில், பத்திரிகைத் துறையில், அரசுப்பணியில் என பல்வேறு பணிகளில் சேர்ந்து கொண் டார்கள். வெங்கடரமணியும் இதற்கு விதிவிலக்கல்ல. அவர்களைப் போன்றே வெங்கடரமணியும் ஒரு வழக்கறிஞரானார். ஆனால் அவர் ஒரு சம்பிரதாயத்துக்காகத்தான் அந்தப் பணியை செய்து வந்தார். வழக்கறிஞர் மன்றத்தில் தாம் வெற்றிபெற முடியாது என்பதும் அவருக்குத் தெரியும். ஆனால் அவருடைய வழக்கறிஞர் வாழ்விலும், வளர்ச்சியிலும் ஒரு தெளிவற்ற போக்கு இருந்து வந்தது. அதையே அவர் மகிழ்ச்சியாகவும் கருதினார். ஆனால் அதற்காக அவர் கடுமையாக உழைக்கவில்லை.

"பேசும் சொற்றொடர்களின் கவர்ச்சியினாலேயே நான் சட்டக் கல்லூரிக்கும், வழக்கறிஞர் மன்றங்களுக்கும் சென்றேன். வழக்கறிஞர் மன்றங்களிலேயே என் வாழ்நாளை கழித்து மகிழ்ந் தேன்" என்று அவர் குறிப்பிடுகிறார். எதை மிகவும் அனுபவித்து மகிழ்ந்தாரோ அதில் அவர் தனிப்பட்ட அளவில் எந்தவித வெற்றியும் பெறவில்லை எனினும் வழக்குகளை வெட்டியும், ஒட்டியும் பேசுவதில் அவருக்கு ஒரு மகிழ்ச்சி இருந்து வந்தது. வழக்கில் வெற்றி பெறுவது என்பது, எத்தகைய சொல்லாற்றல் படைத்தவராய் இருந்தாலும் கடுமையான உழைப்பைப்

பொறுத்தே அமையும். அந்த வகையிலும் அவர் முன்னேற்றம் பெறவில்லை. சொற் ஜாலங்களில் மகிழ்ந்தாரே தவிர, அதற்காக அவர் கடுமையாக உழைக்கவில்லை. வழக்கறிஞராக வெற்றி பெறும் செயல், சந்தேகம் இல்லாமல், அவருக்கு மகிழ்ச்சி தந்திருக்கும். அதிலும், அவருடைய வாழ்க்கையின் பிற்காலத்தில், அவருடைய நண்பர்கள் வற்புறுத்தி அவருக்கு உதவிகள் புரிந்து வந்தபோது அவ் வெற்றி சந்தோஷகரமானதாக விளங்கியிருக்கும். மற்றவர்கள் இரக்கப்பட்டு செய்யும் அவ் உதவியை அவர் விரும்பவில்லை. அப்போது கூட தன்னுடைய பணியில் முன்னேற வேண்டும் என அவர் உழைக்கவில்லை. தனது "கற்பனை அலங்காரம் மற்றும் அலைபாயும் மனப்பாங்கே" அதற்குக் காரணம் என்று அவர் குறைகூறிக்கொண்டார்.

சுருக்கமாகக் கூறினால் அவர் ஒரு இலட்சியவாதி. சொல்லாற்றல் அவரை கவர்ந்திழுத்தது போலவே எழுத்தாற்றலும் அவரை வசீகரித்தது. நாடு விடுதலை அடையவும், கிராமங்கள் மறுவாழ்வு பெறவும், பேச்சும், எழுத்தும் உறுதுணையாய் அமையும் என அவர் நம்பினார். இந்த நம்பிக்கையும், உறுதியும் அவருடைய பள்ளிப் பருவத்திலேயே அவருக்கிருந்தது. அவர் தொடக்கத்தில் சென்னையில், விக்டோரியா விடுதியில் இருந்த போது கிடைத்த அனுபவங்கள்,அவருக்கு இந்த நம்பிக்கையை இன்னும் உறுதிச் செய்தது. எதுவும் செய்ய முடியாத சூழலில் ஒரு எழுத்தாளன் உருவாகினான்.

வெங்கடரமணி ஒரு அறிவுறுத்துகின்ற இலட்சியவாதியாக இருந்தார். தன்னுடைய மனத்துக்குள்ளேயே போதனையாளனாகவே இருந்த அவர், நாவல்கள் மூலமாக தன்னுடைய நம்பிக்கைகளைப் பரவச் செய்தார். 'தத்துவவாதி' என்ற சொல்லுக்குரிய கருத்திற்கு அவர் ஏற்றவரல்ல. ஆனால் பல நல்ல திட்டங்களையும், நோக்கங்களையும் கொண்டிருந்தார். அவர் பல விருப்பங்களையும் (மிகுதியான வெறுப்புணர்வை எந்த வகையிலும் அவருடைய எழுத்துக்களில் காண முடியாது) நோக்கங்களையும் உடையவராக இருந்தார். இந் நோக்கங்களின் தாக்கங்களாக கந்தன் என்ற தேசபக்தனையும், முருகன் என்ற உழவனையும், கிராமத்தில் பணிபுரியும் ஜடாதரன் என்ற ஆசிரியரையும் தன்னுடைய நாவல்களில் படைத்தார். இந் நாவல் பாத்திரங்களுடன் வெங்கடரமணியும் மிகுதிபாகவோ அல்லது குறைவாகவோ

பங்கெடுத்துக் கொள்கிறார். பிறப்பினாலோ அல்லது பிறந்த இடத்தில் வளர்ந்த சூழ்நிலையாலோ அவர் எழுத்தாளரானார்.

எழுத்துத்துறையில், கலைத்திறன் மிக்க வளர்ச்சி அவரிடத்தில் மிகுதியாக இல்லை. அவருடைய முதல் நூல், அவருடைய இறுதி நூலிலிருந்து எந்த வகையிலும் வேறு பட்டதல்ல. அவருடைய பிரச்சாரமும், அவர் படைக்கும் பாத்திரங்களின் பிரச்சாரமும் ஒரே மாதிரியானவை. எல்லாவற் றையும்விட நாட்டு விடுதலைக்காக பாடுபடுவதைவிட, கிராமப் புணரமைப்பு திட்டங்களை உருவாக்குவதே உண்மையான விடுதலையை அளிக்க வல்லது என்ற கருத்து, அவர் நாவல் எழுதினாலும், சிறுகதை எழுதினாலும், அவற்றை தமிழில் அல்லது ஆங்கிலத்தில் எழுதினாலும், பேச்சாளரைப் போலவோ அல்லது நூலாசிரியரைப் போலவோ எழுதினாலும், அவரின் போ தனையாக அமையும்.

அவர் கூறிய கருத்துக்கள் அக்காலத்திற்கு ஏற்றதாக இருந்தாலும், அவை இன்றைய காலகட்டத்திற்கு ஏற்றதாக அமையுமா என்ற கேள்வி எழலாம். அவர் முழுக்க முழுக்க மகாத்மா காந்தியின் கொள்கைகளைப் பின்பற்றுபவராக விளங்கி னார். இந்திய தேசியவாதி என்ற வகையில் அந்நிய நுகத்தடியை தூக்கி எறிய வேண்டும் என்ற விருப்பமுடையவராக இருப்பதால் அவர் காந்திஜியின் கொள்கைகளினால் ஈர்க்கப்பட்டது இயல்பு தான். அவர் ஒரு கிராமவாசியாக இருந்ததால் இந்திய கிராமங்கள் புத்துயிர் பெற வேண்டும் என்ற கருத்துடைய கொள்கைகளால் ஈர்க்கப்பட்டார்.

1928 ஆம் ஆண்டில் தொடக்கத்தில் 'இந்திய புத்துயிர்ப்பு' எனும் நூலை வெளியிட்டார். "சுயராஜ்ஜியமோ அல்லது டொமினியன் அந்தஸ்து பெற்றாலும் நம் கிராமங்கள் முழுமையான சுயாட்சி பெறவில்லை என்றால், உண்மையான முன்னேற்றத்தினை ஒருபோதும் பெற முடியாது. அத்தகைய கிராமங்கள் தற்பொழுது முன்னணியில் இருந்தாலும் அவைகளின் வாழ்வு சிதைந்து கிடக்கிறது. மீண்டும் நாம் கிராமங்களுக்கு உறுதியான அடித்தளம் அமைக்க வேண்டும்." இக்கருத்து

காந்திஜியின் இதயத்திலிருந்து வந்த போதனையாகவும் கூட இருந்தது.

ஆகையால் வெங்கடரமணி இக்கால சிந்தனைக்கு ஏற்ற கருத்துடையவரா எனக் கேட்பது மகாத்மா காந்தி இன்றைய சிந்தனைக்கு ஏற்ற கருத்துடையவரா என்று கேட்பதைப் போன்றதாகும். இன்றளவில் இந்தியா காந்தியை மறந்துவிட்டது என்பது பொதுவாக ஒரு கேலிக்கூத்தாகும். இந்த வகையில் காந்தி என்ன கூறினாரோ (செயல் வடிவில் பெரும்பாலோர் பின்பற்றி வருகின்றனர்) அது தற்கால இந்திய வாழ்வுக்கு ஏற்றது. அவருடைய போதனைகள் பல்வேறு கோணங்களை உடையது. சிலர் தாழ்த்தப்பட்ட மக்களின் நல்வாழ்விற்காக சமுதாய சீர்திருத்தம் செய்துள்ளனர். ஆனால் இவருடைய பொருளாதார சீர்திருத்தம் கிராம வாழ்வை சீரமைப்பது என்பதை அடிப்படை யாகக் கொண்டது.

இன்றும் பெரும்பாலான இந்தியர்கள் கிராமத்தில் வாழ்ந்து வருகின்றனர். நாட்டின் பல பாகங்களில் கிராமங்கள் இருந்த போதிலும், தமிழ்நாடு சிறந்த கிராம மரபு வாழ்வு உடையது என்பதை கோயிற் கல்வெட்டுக்கள் மூலம் உண்மை என அறியலாம். அத்தகைய கிராமங்கள், சிதைந்து, சீரழிந்து கிடக்கின்றன. நாட்டின் மறுசீரமைப்பு கிராமத்திலிருந்து தொடங்க வேண்டும் என்பதை உணர்ந்து கூறிய காந்திஜியின் கருத்தை வெங்கடரமணியும் பின்பற்றியது இயல்புதான். தோரோ (Thoreau) டால்ஸ்டாய்(Tolstoy) ஆகியோரின் மாணவரைப் போல காந்திஜி நகர வாழ்க்கையைப் பற்றி வெறுப்புணர்வும், கசப்பு ணர்வும் கொண்டிருந்தார். வெங்கடரமணியின் நூல்களில் பிற எழுத்தாளர்களின் தாக்கம் உள்ளதை ஒரு சில குறிப்புகள் உணர்த்துகின்றன. கருத்துகளுக்காக வேறு சிந்தனையாளர் எவரையும் அவர் பின்பற்றவில்லை. பிறப்பிலேயே அவர்களைப் போன்ற சிந்தனையுடையவராக இருந்தார். பிற்காலத்தில் அவருக்கு ஏற்பட்ட அனுபவங்கள் மூலமாக கருத்துகளை உறுதிப்படுத்திக் கொண்டார். அவர் மிகவும் இயல்பானராகவும், கிராம தத்துவ அறிஞராகவும் விளங்கினார். அவர் எதை நம்புகிறாரோ, அதையே மற்றவர்களும் நம்ப வேண்டும் என்ற சிந்தனை உடையவரல்ல.

காந்திஜியும், வெங்கடரமணியும் உண்மையான, பொருள் பொதிந்த நாட்டு விடுதலை பெற கிராம மறுசீரமைப்பு முக்கியமான அடிப்படைச் செயலாகும் என்பதை தங்களுக்கு தெரிந்த வழிகளில் அல்லது புத்தகங்கள் மூலமாக வலியுறுத்தினர். இன்றளவில் ஐந்து ஆண்டு திட்டத்தினை நடைமுறைப் படுத்தியதால் நாடு இயந்திரமயமாகிவிட்டது. 'இயந்திரமயமாக்கு அல்லது அழித்தொழி' என்பது மிக முக்கியமான முழக்கமாகி விட்டது. மேனாட்டு பொருளாதார அறிஞர்கள், வேளாண்மை என்பது பின்தங்கியுள்ளதற்கு அடையாளம் எனக் கூறியுள்ளனர். பொருளாதாரம் மட்டுமல்ல, பண்பாட்டு வகையிலும், பிற வகையிலும் கூட அவ்வாறே உள்ளது. தற்கால வாழ்க்கை முறை இயந்திரத்தை அடிப்படையாகக் கொண்டது. வேளாண்மைத் துறை, 'வேளாண்மை இயந்திரவியலை' தனது பங்காக வழங்கியுள்ளது. ஆனால் உணவுக்கும், மூலப்பொருள் பலவற்றுக்கும் ஆதாரமாக உள்ள அதுவே கீழ்நிலையில் இருப்ப தால் அவற்றைப் படிப்படியாக மேனிலை பெற வழிவகை செய்ய வேண்டும். இவற்றில் நாட்டமின்மையால், நாட்டின் முதன்மை தேவைகள், இரண்டாவது இடத்தில் உள்ளது என்பதை மக்களுக்கு சிறிது சிறிதாக எடுத்துரைக்க வேண்டும்.

வெங்கடரமணியின் இலட்சிய கிராமத்தில் எந்தவித தொழிற் சாலைக்கும் இடமில்லை. அவருடைய 'கிராம மறுசீரமைப்புத் திட்டத்தில்' 'இந்திய புத்துயிர்ப்பை' உருவாக்கியிருந்தார். அத்தகைய வளர்ச்சி தொழிற்சாலைகளின் பெருக்கம் மறைந்து போவதால்தான் உருவாகும் என்பதைத் தெளிவாக்கியிருந்தார். "இது பஞ்சாயத்து அல்லது கிராமச் சபையின் பிரதிநிதிகளுக்கும், செயலாக்கத்திற்கும்" சார்பாக உள்ளது. "அனைத்து வசதிகளும் அறிவியல் வேளாண்மை முன்னேற்றத்திற்காக உள்ளது" கூட்டுறவு பண்டகசாலையின் வேளாண்மை உதவிகளும், விதைகளும் பிற கிராமத் தேவைகளை நிறைவேற்றும் பணிகளும் ஏற்றுமதி, இறக்குமதி என்ற வியாபார நோக்குள்ள கிராம வாழ்விற்கு வழிகாட்டுவதாக அமைகிறது. கிராம நிதி மூலம், ஒரு மருத்துவர் இலவச உதவியை அளிக்க வேண்டும். ஒரு பள்ளியிலோ, ஒரு திரை அரங்கிலோ, கிராம, மாநில, தேசிய, பன்னாட்டு முன்னேற்றத்தை குறித்து அவ்வப்போது சொற்பொழிவுகளை நிகழ்த்த ஏற்பாடு செய்தல் வேண்டும். கிராம நீர்த்தொட்டிகள்,

தெருக்கள் ஆகியவற்றின் சுகாதாரத் தன்மையைக் குறித்து கூறுவது அவசியம்" எனக் கூறுகிறார். ஆனால் அவர் கூறும் கிராம சீரமைப்புத் திட்டத்தில், எந்த இடத்திலும் தொழிற்பள்ளி அல்லது பல்தொழில் நுட்பக் கல்லூரி ஆகியவற்றைப் பற்றி குறிப்பிடவில்லை.

இதனால் வெங்கடரமணி இயந்திரங்களை வெறுத்து ஒதுக்கினார் எனக் கருதக்கூடாது. உணர்வு அடிப்படையில் சிலர் அவ்வாறு கருதினர். இன்றும் இருந்து வருகின்றனர். இயந்திரங் களை பற்றி தற்கால விமரிசகர்கள், இயந்திரங்களினால், மின்சக்தி உற்பத்தியினால், போபால், செர்னோபில் விஷவாயு நிகழ்ச்சிகள் ஏற்படுத்திய விபத்து, நம் அச்சத்தை அதிகமாக்கியுள்ளது என்பது தான் இதன் பலன். ஆனால் முற்காலத்து விமரிசகர்கள் பலர் இயந்திரத்தையும், அதனுடைய வேலைகளையும் வெறுத்தனர். வெங்கடரமணி இயந்திரத்தின் பங்கை வேறு நோக்கில் அணுகி னார். இயந்திரங்கள் கிராமத்தை, அவர் எதிர்பார்த்து கூறியுள்ள அளவிற்கு பாதிக்கவில்லை என்றும் கருதினார்.

இவர் நாகரீக வாழ்க்கையின் அடிப்படை பிரச்சினை களையும், இயந்திரத்தின் வளர்ச்சி, அதன் தாக்கம் எவ்வாறு இன்று நடைமுறையில் உள்ளது என்பதையும் அக்காலத்தில் முழுவதுமாக உணர்ந்த எழுத்தாளர் இல்லை. வெங்கடரமணி உணர்வுப் பூர்வமாகக் கனவு கண்டாரே ஒழிய தற்கால இயந்திர வியல் நாகரீக முறையின் கடினமான தன்மைகளை அறிந்த வரில்லை. அவருடைய காலத்தில் அவ்வாறு சிந்தித்தாலும் அவருடைய கிராமக் கனவின் அடிப்படையை நாம் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இல்லை.

இவர் கிராமத்திலிருந்து மக்கள் நகரத்துக்கு போவதைப் பற்றி குறிப்பிடுகிறார். ஓரளவிற்கு கிராமங்கள் நடைமுறையில் முன்னேற்றம் பெற்று வருகிறது. பம்பாய், சென்னை போன்ற நகரங்களில் வேலை வாய்ப்புத் தரக்கூடிய தொழிற்சாலை களினாலும், நகர வாழ்க்கை மோகத்தினாலும், முக்கியமாகத் திரைப்படங்களினாலும், நகரத்துக்குச் சாதகமாக, மூலப் பொருள்கள் கிடைக்கக் கூடிய கிராமங்களை புறக்கணித்து விட்டனர். நகரங்களுக்கு கூட்டம் கூட்டமாகச் சென்று குடியேறி குடிசைப்பகுதிகளையும், குற்றங்கள், தீய பழக்கங்களுக்குரிய

இடமாகவும், வெறுப்புக்குரிய இடமாகவும் மாற்றிவிட்டார்கள். ஒரு நாட்டின் பெருகி வரும் மக்கள் தொகைக்கு வேண்டிய உணவும், பிற வசதிகளும் செய்யக்கூடிய தகுதிக்கு மேலாக சென்று விட்டபடியால் கிராமங்களிலிருந்து மக்கள் வெளியேறாமல் இருக்க பாதுகாப்பு செய்யப்பட்டது. ஆனால் ஊக்கமும், புதிய எண்ணங்களையும் கொண்ட சிறந்த மக்கள் கிராமத்தைவிட்டு வெளியேறி நகர்ப்புற குடிசைப்பகுதிகளில் தங்கள் வாழ்க்கையை வீணடித்து குழப்பத்தில் வீழ்ந்தனர்.

கிராமங்களில் சில தொழிற்சாலைகளை உருவாக்க பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால் அம்முயற்சிகள் பலனளிக்கவில்லை. மேலும் மழையை நம்பியிருக்கும் வேளாண்மைத் தொழிலும் நாட்டிற்கு தேவையான பொருட் களை நிறைவு செய்யும் வகையில் வளர்ச்சி அடையவில்லை. தொடக்கத்தில், அந்நியச் செலவாணியை பாழாக்கி உணவுப் பொருட்களை இறக்குமதி செய்து கொண்டிருந்த பழைய போக்கை மாற்றி 1980-இல் ஏற்பட்ட பசுமைப் புரட்சியின் மூலம் உணவுப் பொருட்களை ஏற்றுமதி செய்யக்கூடிய அளவிற்கு உண்மையிலேயே உணவு உற்பத்தியை மிகுதியாக்கியது.

உரம் இடுவதிலும் மற்ற சாகுபடி முறைகளை கடைபிடிப்பதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிகள் வேளாண்மை உற்பத்தியை பெருக்குவதிலும், ஓரளவிற்கு வெற்றி பெற்றது. இயந்திரவியலின் காரணமாக, தனது தகுதிக்கு குறைவான வேலை வாய்ப்பையும், நிலவி வந்த வேலையில்லாத் திண்டாட்டத்தையும் கூடுதலாக்கியுள்ளதை குறிப்பாகக் கூறலாம்.

சராசரி இந்திய கிராமங்கள் இன்று மிகவும் கீழ்நிலையிலும், நம்பிக்கையிழந்தும், பல்வேறு துன்பங்கள், சண்டை சச்சரவுகள் நிறைந்ததாக உள்ளது எனக் கூறுவது மிகையாகாது. இச் சூழலில் கிராமங்கள் புத்துயிர் பெறுகின்ற கனவு புரிந்து கொள்ள முடியாதது. ஆனால் இவருடைய சிந்தனை அர்த்தமற்றது அல்லது இன்று முக்கியத்துவம் பெறாதது என்பது பொருள் அல்ல. இவர் (சிறந்த ஒழுக்கத்தை அறிவுறுத்துகின்ற நாவலாசிரியர் அல்லது படைப்பாளர் என்ற நிலையில்) கிராம மறு சீரமைப்பு என்பதை பல்வேறு கோணங்களில் மையப்படுத்தி தனது நாட்டு மக்களுக்கு தன்னுடைய சிந்தனைப் போக்கில் எடுத்துரைத்ததில் எதுவும்

மிகவும் புதிய சிந்தனை ஒன்றும் இல்லை. இவை எல்லாவற்றையும்விட காந்திஜி எதை கூறத்தொடங்கினாரோ அப்பொழுது வெங்கடரமணி அதைப்பற்றி எழுதத் தொடங்கி விட்டார். வெகு காலத்திற்கு முன் கிராமங்களே இந்தியாவாக இருந்திருக்கிறது. கிராம வாழ்க்கை இந்தியர்களின் இரத்தத்தில் கலந்திருந்தது. இவர் பிறவி எழுத்தாளராகத் திகழ்ந்ததால் தன்னுடைய பிறந்த ஊரைப் பற்றி அக்கறை கொண்டு தற்போதைய வசதியின்மைகளையும், அதன் தீர்வுக்கு தேவை என்ன என்பதையும் புரிந்து கொள்வதற்கான இயல்பும் இயற்கை யிலேயே அவருக்கு அமைந்திருந்தது. இந்த இலட்சியத்திற்காக தன் வாழ்வை அர்ப்பணம் செய்தார். ஆகையால் அவர் ஒரு புரட்சிக்காரராக இல்லை. கிராமத்திற்கு தன்னை அர்ப்பணிக் கின்ற பழங்கால மரபை பின்பற்றினார். வெங்கடரமணி எப்போதும் தீவிரச் செயல்கள் புரியும் கலகக்காரர் அல்ல. தன்னுடைய கோட்பாடுகளை நிறைவேற்றுவதில் திட நம்பிக்கை யிருந்தது. அவர் தன் தனி வாழ்க்கையில் கடைபிடித்த சில தன்னடக்கச் செயல்களால், சிறு சிறு மனந்தாங்கல் துன்பங் களைப் பற்றி பெரிதும் கவலை கொள்ளாமல் முழுவதுமாக உயர்ந்த இலட்சியத்தில் ஈடுபாடு கொண்டவராக விளங்கினார். ஆனால் தன் தோற்ற அமைப்பிலும், கொள்கையை பொறுத்த மட்டில் கூட பழமைப் பிடிப்பில் நம்பிக்கை உள்ளவராக இருந்தார்.

வெங்கடரமணி தன்னுடைய கிராமத்தை எழுத்தாளன், கவிஞன் அல்லது உரைநடைக் கவிஞன் என்ற கண்ணோட்டத்தில் நோக்கினார். எதிர்பாராமலோ அல்லது விதிப்படியோ அவரது பிறப்பை எப்படிக் கருதினாலும், தனக்கு உண்மையிலேயே சாதகமாக நாட்டின் பாகங்களின் மத்தியில் தன்னை நிலை நிறுத்திக் கொண்டார்.

தஞ்சை மாவட்ட காவிரிக் கரையில் வாழ்ந்த மனிதன் தனது மனதில் பதிந்த வாழ்க்கையை, தன்னுடைய ஆத்ம உணர்வினால் மட்டுமே நினைவுகொள்ள முடியும். அப்படி இல்லையாயின் கிராமத்தின் இயற்கை எழிலைப் பற்றி அறிந்து கொள்ள முடியாதவனாகி விடுவான். காவிரி கடலில் கலக்குமிடத்தில் உள்ள காவிரிப்பட்டினத்தின் நிலவியல் அமைப்பு, அவருடைய மனதில் நன்றாகப் பதிந்து விட்டது.

'மணற்குன்றின் மேல்' என்ற நூலின் தொடக்கத்தில் தான் நூலினுள் எழுதியுள்ளதைப் பற்றிக் குறிப்பிடுகிறார். "ஆசிரியர் தன் சொந்த ஊரில் மணற்குன்றின் மேல், காவிரி கடலில் கலக்கும் இடமான அவ்விடத்தில் அமர்ந்து நாகரிக வாழ்க்கையைப் பற்றிய சிந்தனையிலும், அதனால் ஏற்படும் துன்பங்களையும், மனிதனின் மறந்துபோன மரபுப் பெருமைகளைப் பற்றியும் ஆழ்ந்து சிந்தனை செய்கிறார்" எனக் குறிப்பிட்டுள்ளார். வெங்கடரமணி கிராமத்தில் இருந்தாலும், சென்னையில் இருந்தாலும், அல்லது நாட்டின் எந்தப் பகுதியில் இருந்தாலும் அம் மணற்குன்றின் மேல் அமர்ந்து எப்பொழுதும் மனிதனுடைய வாழ்க்கையைப் பற்றியும் அவனுடைய பிரச்சினைகளைப் பற்றியும் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தார்.

அக் கவிஞன், ஒரு பொருளாதார அறிஞர் அல்லது சமூகவியல் அறிஞர் எழுதிய ஆய்வேட்டையோ அல்லது திட்டப்பணி அறிக்கை முடிவுகளையோ படித்து விட்டு சிந்தனையில் மூழ்கி விடுவான். கிராமம் பல்வேறு வகையிலும் (இன்றளவும் ஒரு எரிகின்ற பிரச்சினையாகத்தான் உள்ளது) தற்போது மறு சீரமைப்பு பெற்று வருகிறது. இருந்தபோதிலும், நில உரிமை, உற்பத்தி, வேலைவாய்ப்பு, வரிகளும், தீர்வைகளும், நீர்ப்பாசனம், சந்தை நிலவரம், போக்குவரத்து, அரசு கொள்முதல் போன்ற வற்றை பொருளாதார நடவடிக்கைகள் அடிப்படையாகக் கொண்டு அமைய வேண்டும் என்கிறார். வெங்கடரமணி இவற்றில் எதைப் பற்றியும் பல கோணங்களில் அணுகியதில்லை (இவற்றில் சில அவர் காலத்தில் சிக்கலாகவும் இருந்ததில்லை) மனிதனின் மறுவாழ்வு, கிராமங்களின் மறுவாழ்வு, காந்திஜி கூறிவரும் ஆன்ம பலம் ஆகியவற்றைப் பற்றி சிந்தித்தாரே தவிர மிக முக்கிய பிரச்சினைகளைப் பற்றி நாட்டம் செலுத்தவில்லை. கவிஞனின், தத்துவவாதியின் வழிமுறை அது. இந்த ஆசிரியர் போலவே, கிராம சீரமைப்பில் அக்கறை உடைய வாசகர், இவர் எழுத்தில் இலட்சிய வெளிப்பாட்டை காண முடியுமே தவிர, செயலுக்குத் தேவையான ஆலோசனை காண இயலாது. கிராமம் பற்றிய வெங்கடரமணியின் கருத்துக்களில் பொருளாதார அம்சங்கள் பெரிதாக இடம் பெறவில்லை.

இலக்கிய ஈடுபாட்டினால் ஈர்க்கப்பட்டிருந்த அவரை அவ்வழியிலேயே பின்பற்றுவது கடினமான காரியமன்று.

குழந்தைப் பருவத்தில் அவர் வாழ்ந்த இடத்தில் இயற்கையின் அழகை நன்றாக கவனித்து வந்தார். பாயும் காவேரி, தொலை தூர-சுழற் கண்களை உடைய (அவருக்கு மிகவும் பிடித்தமான தொடர்) ஆறு. இடி, கடலின் பெரும் அலை, காற்றில் ஊசலாடும், தென்னங்கீற்றின் சலசலவென்ற ஒலி, வயலில் விளைந்த நெற்பயிர் காற்றில் அசைதல் ஆகியவற்றை கவனிப்பதில் அவர் ஈடுபாடு உடையவராக இருந்தார். ஒரு கவிஞனின் உணர்வுடன் இருந்து வந்தார். அவர் இயற்கையின் ஓசைகளுக்குக் கட்டுப் பட்டார். இயற்கையின் சிறந்த வெளிப்பாடு கிராமமே என்ற முடிவிற்கு வந்தார். சிறிது காலத்திற்கு பின் அவர் நகரத்துக்கு செல்ல வேண்டியதாயிற்று. அறிஞர் வில்லியம் கௌபர் கூறியது இவ்விடத்தில் மிகப் பொருத்தமானது என்று கூற முடியா விட்டாலும் "இறைவன் கிராமத்தை உருவாக்கினான், மனிதன் நகரத்தை உருவாக்கினான், சாத்தான் நாட்டுப்புற நகரத்தை உருவாக்கினான்" என்பதை வெங்கடரமணி ஒப்புக் கொண்டுள் ளார். "மாயவரம் மாநகராட்சியின் திறமையின்மையும், மோசமான நிர்வாகமும்" என்ற தலைப்பில் இவருடைய முதல் கட்டுரை பத்திரிகையில் வெளியிடப்பட்டது. இதில் எழில்மிக்க கிராமத்திற்கும், இழிவு நிலையிலுள்ள நகரத்திற்கும் இடையே உள்ள வேறுபாடுகள் சுட்டிக் காட்டப்படுகின்றன. ஆகவே இந்தியா தன்னை முதலில் விடுவித்துக் கொண்டு, கிராமத்தின் புத்துயிரூட்டத்தால் மறுவாழ்வு பெற வேண்டும் என்கிறார்.

உறுதியாக இது மகிழ்ச்சிக்குரிய இலட்சியமாக இருந்ததா? இது வெறும் கனவு என்பதுதான் உண்மை. ஆனால் வெங்கடரமணி அதை அறியவில்லை. இது ஒருநாள் உண்மையாகும் எனும் சமயவாதிகளின் நம்பிக்கையைப் போல் ஏற்றுக் கொண்டிருந்தார். இது உயர்ந்த இலட்சியம்தான். ஆனால் வெங்கடரமணி தன்னுடைய இலக்கிய அறிவுத் திறனால் இதற் காக சிறப்பான முறையில் ஆதரவளித்து வாதம் செய்கிறார். அவருடைய சமகாலத்து எழுத்தாளர்களான, எஸ்.வி.வி; கே. நாகராஜன் (இவர் 1986-இல் காலமானார்) ஆகிய இரண்டு ஆங்கில நாவலாசிரியர்களும், கிராம மறுவாழ்வினைப் பற்றி மிகுந்த அக்கறை காட்டவில்லை. நாகராஜனின் 'கேதார'மும்; வெங்கடரமணியின் 'ஆக்கூரு'ம் எந்தவிதமான பொதுக் கருத்தையும் மையமாகக் கொண்டதாக இல்லை. தனது

கற்பனையில் உருவான இவ்விடத்தில் அவர் தன்னுடைய பாத்திரத்தை உலவ விடுகிறார். நாகராசனோ அல்லது எஸ்.வி.வி.யோ கிராம முன்னேற்றத்தைக் குறித்து எதுவும் பேசவில்லை. "எஸ்.வி.வி." நகரத்தைப் பற்றி நகைச்சுவையாக குறிப்பிடுபவர். அந்தக் கால கட்டத்தை அப்படியே படம்பிடித்து காட்டுவார். ஆனால் நகரத்து மனிதனின் குறைபாடுகளை சுட்டிக் காட்டுவதில் அவர் குறியாக இருந்தார். வெங்கடரமணியின் படைப்புகளில் கிராமங்களே நடுநாயக பாத்திரம். அவருடைய படைப்புகளில் அது உயிருள்ள மையமாக அமைந்தது. ஆனால் மற்ற இருவருடைய படைப்புகளிலும் கிராமம் சந்தேகத்திற்கு இடமின்றி இருந்தாலும், அவைகளின் தோற்றம் தெளிவற்ற நிலையில் இருந்தது.

இந்தியனுக்கு சிறந்ததும் மிகவும் உயர்வானதாகவும் போற்றப்படுகின்ற இந்திய கிராம வாழ்க்கையே உகந்தது என்பதால் வெங்கடரமணி அத்தகைய வாழ்க்கையை பின்பற்றினார் எனக் கூறுவதே நியாயமானதாகும். நகரத்தின் அவநம்பிக்கை, அங்குள்ள இயந்திரங்கள், அடிமைத்தனமான நிலைகள் எல்லாம் நவீன பொருளாதாரத்தின் விளைவுகள் என்பது இலக்கிய உலகத்தின் நெடுநாளைய பண்பாடாக உள்ளது. இந்த பாரம்பரியத்தையே வெங்கடரமணி பின்பற்றினார். இது அவருடைய உள்ளுணர்வுச் செயலாகும். முதலில் அவர் அதைப்பற்றி மிகையான எண்ணம் கொண்டவராக இல்லை. அது சில காலம் கழித்து வந்த முறையாகும். கிராமத்தில் பிறந்த அவர், தனது குழந்தைப் பருவத்திலும், இளமைப் பருவத்திலும் தன்னைச் சுற்றிலும் உள்ளனவற்றைக் காணும்பொழுது அவற்றை முதலில் விரும்பினார்; அவை பற்றிப் பேசி, வலியுறுத்தினார். பிற்காலத்தில் வளர்ச்சி அடைந்ததும் அவர் ஏன் அவ்வாறு செய்தார் என்பதை ஆராயத் தொடங்கினார். இந்த ஆராய்ச்சியின் பலன்கள் அவர் கிராமத்தின் மீது கொண்ட பற்றுதலை உறுதிப்படுத்தின. அதையே தனது வாழ்நாள் முழுவதும் அவர் கடைப்பிடித்து வந்தார். அவரது கிராமப்பற்று ஒரு பொருளாதார அறிஞருக்கோ அல்லது அரசியல்வாதிக்கோ ஏற்றதன்று. அது இலக்கியவாதிக்கும் எழுத்தாளனுக்கும் உரிய அன்பாகும். அதுவே அவரது வாழ்வின் குறிக்கோளாகும். அதையே அவர் மிகுந்த அக்கறையுடன் கடைப்பிடித்து வந்தார்.

அவர் கிராம முன்னேற்றம் பற்றி தனது நாவல்களில் மட்டுமல்லாது, கட்டுரைகளிலும், துண்டுப் பிரசுரங்களிலும் எழுதி வந்தார். அவர் அவற்றை மிகவும் தீவிர வேக உணர்வுடன் எழுதி இருந்தாலும், கிராமத்தின் பொருளாதார உண்மைகளையும், அங்குள்ள வாழ்க்கை பிரச்சினைகளையும் அவர் சிறிதளவே அறிந்திருந்தார் என்பது தெளிவாக அறிய முடிகிறது. கிராமத்தின் நலிவுகளுக்கு ஏற்ற தீர்வு எதையும் அவர் குறிப்பிட்டுக் காட்ட வில்லை. கிராமங்களின் ஆட்சியை கிராம பஞ்சாயத்து அல்லது கிராமச் சபையின் பொறுப்பில் ஒப்படைக்க வேண்டும் என்று கூறினார். ஆனால் இந்த பஞ்சாயத்துகளில் பலவித பிரிவுகள் தோன்றியபடி இருந்தது. அவர் ஒரு கிராம ஆசிரியரைப்பற்றி கூறி இருப்பது போன்ற நடைமுறைக்கு பயன்தராத கொள்கை களை நாம் அறிந்து கொள்ளலாம். "கிராமத்தின் மறு சீரமைப்புப் பணி பெரும்பாலும் கிராமப் பள்ளி ஆசிரியரை மையமாகக் கொண்டது என்பது எனது நம்பிக்கை" எனக் குறிப்பிடுகிறார். வெங்கடரமணியின் படைப்புகளின் பல கதாநாயகர்கள், ஜடா தாரன் உட்பட, இந்த வகையைச் சார்ந்தவர்கள். ஆனால் இந்தப் பள்ளி ஆசிரியர் நினைத்துப் பார்க்க முடியாத மாறுபட்ட படைப்பாகும். சமூக சேவை ஈடுபாடும், சிறந்ததைத் தேர்ந் தெடுக்கும் குணமும் படைத்த உண்மையான ஆசிரியராக அவர் இருக்க வேண்டும். கிராம சமூகத்தை தனது அறிவுத் திறமையாலும், ஆன்மீக உணர்வினாலும் ஆட்கொள்ளும் சக்தி படைத்தவனாக இருக்க வேண்டும். கிராம நீதிபதியுடன் உறவு கொண்டு அவர் கிராம பஞ்சாயத்து சபைக்கும் கிராம வாழ்க்கைக்கும் உண்மையான வழிகாட்டியாக இருக்க வேண்டும். கிராம முன்னேற்றத்திற்கான சூழலை உருவாக்கி தேசிய, பன்னாட்டு வாழ்க்கையின் நன்மைகளை கிராம வாழ்க்கையை வளப்படுத்த பயன்படுத்த வேண்டும். இந்த உத்தமருக்கு மாதம் ரூ. 30-க்கு மேல் (1929) ஊதியம் கொடுக்கக் கூடாது. இதுபோலவே நீதிபதிக்கும், மருத்துவருக்கும் அளிக்கப்பட வேண்டும்.

வெங்கடரமணியின் வளர்ச்சிக்கான திட்டங்கள் நடை முறைக்கு உகந்தது அல்ல என்ற கூற்றுக்குக் காரணமில்லாமல் இல்லை. இந்தியக் கிராமங்களின் சிக்கல்கள் அன்றும் இன்றும் அவர் கற்பனை செய்ததைவிட மிகவும் கடினமானது.

ஆனால் வெங்கடரமணியின் பரவசப்படுத்தக் கூடிய கூக்குரல்தான் என்ன! தான் சொல்வதில் மிகுந்த ஆர்வமான ஈடுபாடு கொண்ட ஒரு மனிதனிடமிருந்து வந்ததாகும் அது. அவர் பொது அறிவுச் செய்திக்கோ அல்லது பகட்டான ஆரவாரக் கருத்துக்கோ பரிந்து பேசுபவராக இருக்கவில்லை. அவருக்கு கிராமம் உண்மையான குறிக்கோளின் பொருளாக அமைந்தது. கிராமம் மறுமலர்ச்சி அடைய வேண்டுமென்று அவர் வைராக்கிய முள்ள முடிவைக் கொண்டிருந்தார். நாம் ஒரு குறிப்பிட்ட சிக்கலை விடுவிக்க எதிர்பார்க்கும் தீர்வுகள் அவரிடம் இல்லாமல் போனாலும், தான் கூறுவது சிக்கலைத் தீர்க்கும் வழி என்று அவர் உறுதியாக நம்பினார். பொருளாதார அடிப்படையிலான வாழ்க்கையையும், அதன் முன்னேற்றங்களையும் ஆராய்ந்து பார்க்கும் ஆவல் அவரது புலமையின் தத்துவத்தில் நிறைந்து இருந்தது. இந்திய கிராமங்கள் புத்துயிர் பெற்று, இந்தியாவும், மனிதவர்க்கமும் புத்துயிர் பெற வழிகாட்டியாக அமையும் என்பதில் அவர் திட நம்பிக்கைக் கொண்டிருந்தார். இன்றைய நாளில் ஒரு பொருளாதார அறிஞரும், சமூகவியல் அறிஞரும் செய்து கொண்டிருக்கும் செயலை அன்று வெங்கடரமணி என்ற கவிஞர் செய்தார். ஒரு பொருளாதார அறிஞரைக் காட்டிலும் ஒரு கவிஞனின் பார்வை சிறந்ததாகும். அது தீர்க்கதரிசனமாகவும், முன்னோடியாகவும், தெளிவாக ஊடுருவிப் பார்க்கும் தன்மை யுடையதாகவும் இருந்தது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

வெங்கடரமணி இந்திய கிராமத்தின் எதிர்காலப் பொருளா தார வளர்ச்சியில் கவனம் செலுத்தாவிட்டாலும், அதன் வாழ்வையும், துன்பங்களையும், மகிழ்ச்சியையும், அதனுடைய ஆளுமையையும் தன்னுடைய உள்ளுணர்ச்சியால் அறிந்து கொள்ள முடிந்தது. அவர் வெளிப்படையாக அதனுடைய நாடித்துடிப்பை உணர முடிந்தது. ஆகவே 1920-30க்கிடையே வெளியான இந்திய இலக்கியங்களை உருவாக்கிய ஆசிரியர்களில், இந்திய கிராமத்தை ஆராய்ச்சி செய்த விரிவுரையாளர்களில், அவர் தலை சிறந்தவர். இதுபற்றிய விரிவான விளக்கங்களை நான் அடுத்து வரும் 'நாவல்கள்' பகுதியில் எடுத்துக் கொண்டுள்ளேன். அரை நூற் றாண்டுகளுக்கு முன்னால் தமிழகத்திலிருந்த கிராமங்களை வெங்கடரமணியின் படைப்புகளில் படிப்பதற்கு மட்டுமின்றி, அது

உயிர் பொருளாக நாம் உணரும்படி அமைந்துள்ளது என்று மட்டும் குறிப்பிடல் போதுமானது. வெங்கடரமணி கிராமத்தை படம்பிடித்துக் காட்டுவதில் ஒரு உண்மை மாறாத சித்தரிப்பாளர் என்பது அன்றி வேறல்ல. தேசியவாதி கந்தனும் உழவன் முருகனும் வாழ்கின்ற மனிதர்கள். இது போன்று பல கதாபாத்திரங்கள் அவருடைய சிறுகதைகளில் காணக்கிடக்கின்றன. குறிப்பாக ஜடாதரன் போன்றவர்கள் குணத்தால் உயர்வாகச் சொல்லக் கூடிய ஒரு சிறந்த இலட்சியவாதியாக, ஆசைக் கனவு காண்ப வராக, தீர்க்கதரிசியாக இருந்தபோதிலும், இலக்கிய வர்ணனையைப் பொறுத்த மட்டில் அவர் பிரச்சினைக்கு இடமின்றி, உண்மை தவறாத சித்தரிப்பாளராக இருந்தார்.

இது வெங்கடரமணியின் இன்றைய வாசகர்களுக்கு கிடைக்கப் பெற்ற மற்றொரு வெகுமதியாகும். இந்திய எழுத்தாளர்களால் எழுதப்பட்ட ஆங்கில நாவல்களின் அமைப்பு இந்திய நாவல்களைப் போன்றே இருந்தன. மொழி மட்டுமே அந்நிய மொழியே தவிர, இடம், கதாபாத்திரங்கள், தத்துவங்கள், பேச்சுத் தன்மை, மற்றும் எல்லா தன்மைகளும் பிரச்சினைகளுக்கு இடமின்றி இந்திய பண்பாட்டை பிரதிபலித்தன. அவர், நாம் வாழும் இன்றைய இந்தியா மிகவும் மாறுபட்டது என்பதனை தெரிந்தமையால், நமது தந்தை, தாத்தா போன்ற முன்னோர்கள் எவ்வாறு கிராமங்களில் வாழ்ந்தார்கள் என்பதை புரிந்து கொள்ள இன்று நமக்கு உதவி புரிகிறார். இது பொதுவாக இந்திய இலக்கியங்களில் காணப்படும் சாதனைகளிலிருந்து மிகவும் அப்பாற்பட்டது. தாமஸ் ஹார்டியின் 'வெஸ்செக்ஸ்' (Wessex), அந்தோனி ட்ரோல்லோப்ஸின் 'பார்செஸ்டர்' (Barchester) பிரான்ட்ஸின் 'யார்க்ஷயர்'(Yorkshire)பிளாக் மோர்ஸின் 'எக்ஸ்மூர்' (Examoor) என்பவையெல்லாம் நமக்கு ஒரு குறிப்பிட்ட இடத்தை நடுநிலையாகக் கொண்டு எழுதிய கதாசிரியர்களின் போக்கு பழக்கமான, நன்றாக தெரிந்த முறைகளாகிவிட்டது. இங்கே, தனக்கே உரித்தான வழியில், வெங்கடரமணி அதே தன்மையான விளைவை ஏற்படுத்தினார். விரல்விட்டு எண்ணக்கூடிய, வெகு சில இந்திய ஆங்கில எழுத்தாளர்களே இந்திய வாழ்க்கையை பிரதி பலிக்கும் உயர் தரமான படைப்புக்களை வெளியிட்டுள்ளார்கள். இவர்களில் சிலர் தங்களை ஒரு குறிப்பிட்ட இடத்தின் வாயிலாக அறிமுகப்படுத்திக் கொண்டனர். உதாரணமாக, ஒருவர் அந்த

இடத்தின் பெயரைக் கூறியவுடன் தமது மனக்கண்முன் உடனடியாக அந்தக் கதையின் மக்கள், திடீரென்று மனத்தில் ஒளிவெள்ளம் போல் தோன்றுகின்றனர்.

வெங்கடரமணி இதை சாதித்துவிட்டார். அவருடைய தலைசிறந்த இரண்டு நாவல்களும் தஞ்சை மாவட்டத்தில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்தை மையமாகக் கொண்டவை. அவருடைய சிறுகதைகளும், அந்த இடங்களிலிருந்து வெகு தூரம் செல்லவில்லை. சில வேளைகளில் வெங்கடரமணியின் கதைகளில் சென்னை நகரத்திற்கு இடமுண்டு. ஆனால் அது கதையின் மையக் கருத்தை ஒட்டி தேவையான இடங்களில் மட்டுமே அது அமைந்திருக்கும். அவர் தான் பிறந்த கிராமத்தின் மீது மிகுதியான பற்றுடையவராக இருந்தார். அது இன்று நமக்கு மிகுந்த பலனை அளிக்கிறது. நாம் ஐம்பது, அறுபது ஆண்டுகளுக்கு முன்பு அங்கு வாழ்ந்ததைப் போன்ற ஒரு நினைவை எழுப்பி, அது எவ்வாறு தோற்றமளித்தது என்பதை மனக்கண்ணில் படம் பிடிக்க உதவு கிறது. நாம் அங்குள்ள நிலவியல் அமைப்புகளை அறிந்து கொள்ள முடிகிறது. அங்கு வாழும் மக்களை காண முடிகிறது. அவர்களின் பேச்சை கேட்க முடிகிறது. அவர்கள் அங்கிருந்து வாழ்ந்த வாழ்க்கையை நம்மால் கூர்ந்து பார்க்க முடிகின்றது. எல்லா வற்றுக்கும் மேலாக வெங்கடரமணி தனது தெளிவான படைப்பு களையும், நிலவியல் தோற்றங்களையும் நமது மனக்கண்முன் உயிர்பெற்ற உருவங்களாக நடமாடச் செய்யும் திறனை வெகுவாகப் பெற்றுள்ளார்.

கிராமப்புற வாழ்க்கையை உயர்த்திக் காட்டும் பணியில் வெங்கடரமணி நமது இலக்கியங்களில் பொதுவாகக் காண முடியாத, மாபெரும் இலக்கியச் சிறப்பைப் பெற்றுள்ளார். அவருடைய குறிக்கோள் நமது கிராமங்களின் மறுமலர்ச்சியை, முன்னேற்றத்தினை காண விழைந்ததாகும்; ஆயினும் தமது நாடு சுதந்திரம் அடைய வேண்டும் என்ற ஆவலும் உடையவர். அவர் இந்த இரண்டு குறிக்கோள்களையும் இணைத்து தனது நாவல் களில் எழுதியுள்ளார். அவருடைய கதாநாயகன் தன் நாட்டின் சுதந்திரத்திற்காகப் பாடுபடும் நாட்டுப் பற்றாளன். ஆனால் அவன் நகர்ப்புறத்தைச் சார்ந்தவன் அல்ல. அவன் ஒரு கிராமத்தின் மகன். அவன் காவிரிப்பூம்பட்டினத்தின் எல்லைக்குள் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்தவனாக இருப்பான்.

வெங்கடரமணியை நாட்டு விடுதலைக்கு இலக்கியத்தின் மூலம் தொண்டு புரிந்த மாபெரும் மனிதனாகப் புகழ வேண்டுமானால், அதே வேளையில், கிராமத்தின் உண்மையான சித்திரிப்பாள ராகவும், அதன் மீது கொண்ட அன்பை போற்றுபவராகவும் அவர் புகழப்பட வேண்டும். ஆலிவர் கோல்ட் ஸ்மித்திற்கு 'ஆபர்ன்' (Auburn) எப்படியோ அப்படியே வெங்கடரமணிக்கு ஆக்கூர் இருந்தது. கோல்டு ஸ்மித்துக்குப் பிற்பட்ட தலைமுறையினருக்கு ஆபர்ன் பிடித்துவிட்டதைப் போல, வெங்கடரமணியின் தற்கால வாசகர்களுக்கு ஆக்கூர் பிரியமான இடமாக அமையவேண்டும். அதற்காக நாம் இன்று வெங்கடரமணியை படித்தாக வேண்டும்.

# 3

## சிந்தனைகளும் கருத்துகளும்

வெங்கடரமணி இளமைப் பருவத்திலிருந்தே தனது வாழ்வை உயர்வான குறிக்கோள்களுக்காக அர்ப்பணித்தவர். அவர் பள்ளியில் பயிலும் காலம் தொட்டே எழுத்துப்பணியில் ஈடுபட்டார் என்பது வியப்புக்குரியதன்று. ஆனால் 1921-ஆம் ஆண்டு அவருடைய முப்பதாவது வயதில்தான் அவர் எழுதிய முதல் நூலான 'காகித ஓடங்கள்' வெளிவந்தது. அந்நூலில், 'கிழக்கும் மேற்கும்' (East and West) என்ற பத்திரிகையில் வெளியான மூன்று கட்டுரைகளும் இடம் பெற்றிருந்தன.

வெங்கடரமணி நிதானமாக எழுதும் எழுத்தாளர். கட்டுரைகள், புத்தகங்கள் ஆகியவற்றை எழுதி கொடுக்க வேண்டிய காலவரையறைகளுக்கு உட்பட்டு விரைவாக எழுதும் பத்திரிகையாளர் அல்ல அவர். தனது படைப்புகள் சிறப்பான வகையில் அமைய, பலமுறை கூட்டிக் குறைத்து, மாற்றி அமைத்து, அவற்றை மெருகுபடுத்துவார். உயர்ந்த சிந்தனைகளையும், மிகச் சிறந்த இலக்கியத்தையும் தோற்றுவிக்கும் நோக்கத்தோடு அவர் தனது வாழ்நாட்கள் முழுவதும் அர்ப்பணித்தார். அவர் எட்டு நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள் மூன்று நாவல்கள். ஆனால் அவர் பல பத்திரிகைகளுக்கு தனது படைப்புகளை வழங்கியும், இறுதி காலத்தில், தமிழ் பத்திரிகை ஒன்றை தொடங்கி, அதன் ஆசிரியராகவும் பணியாற்றினார். அவர் 1928-ஆம் ஆண்டு ரவீந்திரநாத் தாகூரை 'சாந்தி நிகேதனில்' சந்தித்தார். தாகூர் அவரை தமிழிலேயே எழுதும்படி ஆலோசனை கூறினார். அதன் பிறகு 'தேசபக்தன் கந்தன்' என்ற புகழ் பெற்ற நாவலை தமிழில் எழுதி வெளியிட்டார். மக்களுக்கு கூற வேண்டிய செய்திகள் மிகுதியாக உள்ளது என தனது நண்பர்களிடம் கூறிவந்த அவர், தமிழ் பத்திரிகை 'பாரத மணி'யை மாதம் இருமுறையாகவும், பின்னர் மாதப் பத்திரிகையாகவும் தொடங்கி வெளியிட்டார். அவருடைய நிர்வாகத் திறமையின்மையால், அவர் மேற்கொண்ட

பணியில் வெற்றி பெற முடியாமல், அது அவரை பல இன்னல்களுக்கு ஆளாக்கியது. ஆனால் அதன்பிறகு அவருடைய பொது வாழ்வு முழுவதும் தொடர் துன்பங்கள் நிறைந்ததாக இருந்தது.

வெங்கடரமணி, சோதிடத்தில் மிகுந்த ஈடுபாடு உடைய வராகத் திகழ்ந்தார். ஆனால் இதுமட்டுமன்றி தனது இலட்சியங் களுக்கு அப்பாற்பட்ட காரியங்களிலும் அவருக்கு ஈடுபாடு உண்டு. தனது வாழ்வின் இறுதிக் காலத்தில் கவர்ச்சிகரமான பேச்சு மூலமும், எழுத்து மூலமும் தனது கருத்துகளை எடுத்துரைத்து விட்டதாக உணர்ந்த அவர் தனது இலட்சியங்களை நடை முறைக்குக் கொண்டுவர வேண்டும் என்ற நோக்கத்தில் ஆசிரமங்களை ஏற்படுத்தினார். ஆனால் அவை அவர் எதிர் பார்த்த அளவிற்கு முழுமையான பலன் அளிக்கவில்லை.

அவருடைய இலக்கியப் பணியை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை 'உரைநடைக் கவிதை', 'கதை', 'கிராமத் திட்டங்கள்' என்பதில் அடங்குவனவாகும். 'காகித ஓடங்கள்' (Paper Boats) 'மணற்குன்றின் மேல்' ஆகியவை அவரது அறியாப் பருவத்தின் படைப்புகள் என்பதில் அய்யமில்லை. அறியாப் பருவம் என்பதை போதிய பக்குவம் (inchoate) அடையாத பருவம் என்ற அடிப்படையில் கருதாது, சில விமரிசகர்கள் கூறுவது போல 'இப்பருவம் சிறந்தது எது என்பதை அறியாமலிருந்தாலும் விரைவில் நல்லதை அறிந்து கொள்ளக்கூடிய பருவம்' என்பதால் ஒரு இளைஞனின் உயர்ந்த நோக்கங்களைக் கொண்டது எனலாம். அவருடைய பிற்கால படைப்புகளான, 'சாம்புடன் ஒருநாள்', 'அடுத்த ஏணிப்படி' என்ற படைப்புகளில் அவர் தனது திறமையை நன்கு வெளிப்படுத்தியுள்ளார். 'தேசபக்தன் கந்தன்' அவருடைய மிகச் சிறந்த நாவலாகும். 'முருகன் ஓர் உழவன்' என்ற நாவலில் மாறுபட்ட குறிக்கோளை கையாண்டுள்ளார். அவர் தனது முதல் நாவல் வெளியாவதற்கு முன்பு எழுதிய சிறுகதைகளில் சில 1937-ஆம் ஆண்டு, அவர் இனி ஆங்கிலத்தில் எழுதுவதில்லை என்ற முடிவுக்கு வந்தபோது 'ஜடாதரன் முதலிய கதைகள்' என்ற தலைப்பில் வெளிவந்தன. இந்திய கிராமங்களின் மறுமலர்ச்சியை தனது வாழ்வின் நோக்கமாகக் கொண்ட அவர், தனது 'புத்துயிர் பெற்ற இந்தியா' என்ற நூலில், இக்கொள்கையை நேரடியாக, வலியுறுத்திக் கூறியுள்ளார். இதனிடையே அவர் பல துண்டு

பிரசுரங்களையும், தமது இளமைக் காலப் படைப்புகளில் சிலவற்றையும் மறு பதிப்பு செய்தார்.

இவை அனைத்தையும், எவ்வகையில் எழுதி இருந்தாலும், உரைநடையோ, கவிதையோ, நாவலோ, சிறுகதையோ அல்லது துண்டு பிரசுரங்களோ, வெங்கடரமணி தனது 'இந்திய கிராமங் களின் மறுவாழ்வு' என்ற ஒரே நோக்கத்தில், உண்மை யுள்ளவராகத் திகழ்ந்தார். வெங்கடரமணியை போன்று இந்திய கிராமங்களின் மீது கொண்ட பற்றினை ஒரே நோக்கமாகக் கடைபிடித்த வேறு ஒரு எழுத்தாளரை நாம் கற்பனை செய்வது கூடக் கடினமாகும்.

'காகித ஓடங்கள்' என்ற நூல் மட்டும் இந்த நோக்கத்திலிருந்து சற்று அப்பாற்பட்டது. இதில் அடங்கிய பத்துக் கட்டுரைகளில் 'இந்திய கிராமம்' இடம் பெற்ற இடம் மிக மிகக் குறைவு. ஆனால் இந்த உணர்வு அந்நூல் முழுதும் மேலோங்கியுள்ளது. கிராமங் களின் நல்வாழ்வே தனது வாழ்வின் முக்கியப்பணி என்ற எண்ணங் கொண்ட ஒரு எழுத்தாளரின் படைப்புகளுக்கு முன்னோடி யாகவும், சிறந்த அறிமுகமாகவும் இந்நூல் அமைந்துள்ளது. அன்னிபெசன்ட் அம்மையார் இந்நூலின் முன்னுரையில் "இச்சிறு நூல் நம்மை கிராமத்தில் வாழ வைத்து, அதன் வாழ்வில் நம்மை பங்கு கொள்ளச் செய்கிறது" எனக் குறிப்பிட்டுள்ளார்.

இந்நூலில் தோன்றிய பல குணச் சித்திரங்கள் மீண்டும் அவர் பிற்காலத்தில் எழுதிய நாவல்களில் காட்டப்பட்டுள்ளன. இது ஒன்றும் வியப்புக்குரியதன்று. ஏனெனில் அவை பல்வேறு நிலை யிலுள்ள இந்தியக் கிராமங்களைப் பற்றி கூறுவதாகும். 'எனது பாட்டி' 'எனது அடுத்த வீட்டுக்காரர்' ஆகிய நூல்கள் 'தேசபக்தன் கந்தன்' என்ற நூலுக்கு முன்னோடியாகும். இத்தகைய கதா பாத்திரங்கள் தன்னிச்சையாக அவருடைய எழுதுகோல் முனைக்கு மீண்டும், மீண்டும் வருவது, வெங்கடரமணி, அக்கொள்கையின் தீவிரத்தன்மையை உணர்ந்தாற்போல் காட்டுகிறது.

வெங்கடரமணியின் கவித் திறனும், படம்பிடித்துக் காட்டும் திறனும், அவருடைய முதல் படைப்பிலேயே முத்திரை பதித்து விட்டது. அவர் தனது 'ஓடங்கள்' என்ற நூலில் 'அதன் சுமை' 'கடற்பயணம்' ஆகியவற்றைப்பற்றி (உருவக அணியுடன்)

விளக்குகிறார். இக்கடினமான பயிற்சியில் அவருடைய மொழிப்புலமை குறிப்பிடத்தக்கது.

இந்நூலில் காணும் பத்துக் கட்டுரைகளில் 'இந்திய பிச்சைக்காரன்', 'மீனவன்' என்ற தலைப்புகளில் உள்ளவை, இளம் எழுத்தாளர்கள் தங்களது ஆர்வம் மிக்க படைப்புகளை வெளியிடும் கல்லூரி வெளியீடுகளில் இடம் பெறுவதற்கு ஏற்றவை யாகும். இந்நூலின் முதல் கட்டுரையில், அவருடைய கூர்ந்து நோக்கும் திறம் குறிப்பிடத்தக்கதாகும். வெங்கடரமணி கிராமச் சீர்திருத்தத்தின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டு அதற்காகவே பணியாற்றினாலும், அவர் தமது இளமைப் பருவத்தில் இந்தியாவின் மற்ற வாழ்க்கை நெறிகளையும் கவனித்து ஆராயும் நோக்கமும் கொண்டிருந்தார். யாசிக்கும் தொழிலில் கூட 'கற்பிக்கும் மதிப்பு உண்டு' என்ற விசித்திரமான கருத்துடைய வராக இருந்தார் அவர்.

"இது இதயத்திற்கு புத்துணர்வு உண்டாக்கும். இது வலுவற்ற உணர்ச்சிகளுக்கு ஊட்டச்சத்தாகும். இது பொதுநல உணர்வுகளை வளர்ப்பதாகும். இது இனிய நினைவுகளுக்கு அன்பான பாதுகாப் பாளனாகும். இது மனிதனை மாண்புடையவனாக்குகிறது. இது மனித இதயத்தை கூர்மையாக்கும் சாணை தீட்டுகின்ற கல் மட்டுமல்லாமல், இதயத்தை பண்படுத்துகின்ற உரைகல்லும் ஆகும். நமது உணர்வுகள், விழிப்புணர்வு பெறவில்லை எனில் தன்னிலைக்கு மீளும் ஆற்றலை இழப்பது போலாகிவிடும்."

தர்மம் செய்வது மேலை நாட்டினருக்கு சுயச்சார்பு உடையதில்லை. நமது நாட்டில் ஒவ்வொருவருக்கும் மிகமிகத் தன் உணர்வோடு கூடியது அது. பிரிவுகளையுடைய வலிமை மிக்க யாசகர்கள்" அவருடைய கிராமத்திலோ அல்லது மாயவரத்திலோ வெங்கடரமணி சந்தித்திருக்க வேண்டும். சமூகத்தை உற்று நோக்கும் அவருடைய ஆற்றலுக்கு அவருடைய எழுத்தில் ஆதாரம் உண்டு. அவரது புனைகதைகளில் அவை முக்கிய அம்சமாக வெளிப்பட்டுள்ளன.

வெங்கடரமணி நல்ல நோக்கத்திற்காக தன்னை முழுவதுமாக அர்ப்பணிக்கக்கூடியவர். ஆனால் புறப்பகட்டை விரும்புபவர் அல்ல. அவர் காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியாரைப்

பற்றி சிறு நூல் ஒன்றை எழுதினார். மேலும், தமிழில் அவர் எழுதிய நூல்களில், அவர் தனது மதத்தின் மீது கொண்டுள்ள பற்றுதலுக்கு ஆதாரங்கள் உண்டு. "இந்துக் கோயில் இந்திய கிராமத்தின் சமய வாழ்க்கையை எடுத்துக் காட்டும் சின்னமாக விளங்குகின்றன. அது ஒரு இந்துவுக்கு உண்மையாக உள்ள அனைத்துத் தன்மைகளையும் ஊக்குவிக்கும் சக்தி ஆகும். அதுவே அவரது நம்பிக்கைகளின் கனவாகவும் கனவுகளின் நம்பிக்கை யாகவும் அமைந்தது."

யாத்திரை செய்வது, மதத்துடன் ஒன்றிய செயலாகும். "அவர் நமது இனத்தின் புனிதச் சின்னமாவார். ஒரு இலட்சியத்தை அடைய அவர் ஒரு படிக்கல்லாகவும், செயலாய்வாகவும் இருந்தார். இது மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஒரு பேரரசை உருவாக்கிய அலெக்சாண்டரின் வெற்றியை போன்றது. அவரது வாழ்வு இராமேஸ்வரம் முதல் காசி வரையிலும், பின் காசி முதல் இராமேஸ்வரம் வரையும் தொடர்ந்து பயணத்திலேயே கழிந்தது."

வெங்கடரமணி 'கிராமத்து கிரிக்கெட்' என எழுதியுள்ளதைக் காணும் பொழுது, வியப்பாகத்தான் உள்ளது. ஏனெனில் கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு நகரங்களில் கூட அதைப்பற்றி சிறிதளவே அறிந்திருந்தனர். அவர் 'கிரிக்கெட்' எனக் கூறியது, ஒரு மரக்கொம்பையும், சில கந்தல்துணிகள் சுற்றிய பாக்குக் கொட்டையும் ஆகும். அது உண்மையில், தமிழ் நாட்டு கிராமங்களில் விரும்பி விளையாடிய 'கள்ளித் தண்டு' என்பதாகும். இதையே வெங்கடரமணி கிரிக்கெட் என்று அழைத்தார். ஆனால் அதிலும் அவர் ஒரு தத்துவ உண்மையை கண்டறிந்தார். இந்திய கிராமக் கிரிக்கெட் கூட வாழ்க்கையின் ஒரு பகுதியாகும்.

வெங்கடரமணியின் இலக்கியத் திறனின் வளர்ச்சியை நோக்கும்பொழுது இந்நூலிலுள்ள இரண்டு படைப்புகள் மீது கவனம் செலுத்துவது சிறந்ததாகும். "எனது அண்டை வீட்டுக் காரர் ஒரு காலத்தில் உதவிப் பதிவாளராக பணியாற்றியவர்" எனத் தொடங்கும் தொடர் எழுத்தாளரை ஒரு நகைச்சுவை உணர்வுடையவராக காட்டுகிறது. சாதாரண ஒரு பணியாளரை, இவ்வித ஆடம்பரமும், அதிகாரமும் உடையவராக சித்தரிப்பது நகைச்சுவை உணர்வுடன் அவ்வாறு விளக்குகிறார் என்பதைக் காட்டும்.

'எனது அண்டை வீட்டுக்காரர்' தனது பதினெட்டாவது வயதில் இளங்கலை பட்டதாரியாகி, தனது மரியாதையை இழக்குமுன் கம்பீரமாக பதினைந்து ரூபாய் மாத வருமானம் கிடைக்கும் அரசு பணியில் சேர்ந்தார். அவர் உயர் பதவி வகிக்கும் 'துரை'யின் மேற்பார்வையில் பணியாளராக இருந்தார். அவர் பின்னர் மிகுந்த அதிகாரம் பெற்ற உதவி தாசில்தாரராகப் பணியாற்றினார்.

ஆனால் அவரது மனைவி சண்டைக்காரி. அவருடைய உரிமைகளைப் பறித்து, அவரை பட்டினி போடும் அளவுக்கு நடந்து கொண்டாள். இறுதியாக அவர் அவளைவிட்டு ஓடி, சன்னியாசியாக மாறிவிட்டார். தனது தாயாரின் இறுதிச் சடங்குகளை நிறைவேற்ற தக்க தருணத்தில் திரும்பி வந்தார். "எனது அண்டை வீட்டுக்காரர் காவி உடை அணிந்த ஒரு சன்னியாசி. அவர் தனது மனைவி திருமதி. பிச்சையிடமிருந்தும், அவளுடைய உறவினர்களிடமிருந்தும் விடுதலை பெற்று இமயமலை ஹரித்துவாரில் உலக மக்கள் நன்மைக்காக தன்னை அர்ப்பணம் செய்துள்ளார்."

உண்மையில் இதில் 'கதை' என்ற அளவில் எதுவுமில்லை; ஒரு சாதாரண அரசு பணியாளர். அவன் மனைவி ஒரு அடங்காப் பிடாரி. அவளிடமிருந்து தப்பிப்பதற்காக அவன் வீட்டைவிட்டு ஓடினான். இருந்தபோதிலும் துன்புறுத்தப்பட்ட ஒரு மனிதனது உள்ளத்தின் தன்மைகளை அறிந்து கொள்வதற்குரிய, ஆர்வம் நிறைந்திருக்கிறது. இது மனைவியினால் துன்புறுத்தப்பட்ட கணவனின் உள்ளத்தை அலசிப் பார்க்கும் பிராய்டின் உளவியல் போன்றதன்று. இருந்தபோதிலும் அங்கே ஒரு மனிதனின் உள்ளப் போராட்டங்களையும், அவனுடைய உணர்ச்சிகளையும் எடுத்துக்காட்டும் கருவியாக அமைந்துள்ளது. உண்மையில் வழக்க மாக நிகழ்ச்சிகளை தொகுத்துக் கொடுக்கும் குறிப்பாளராகவும், மன எழுச்சியைக் காட்டுபவருமான வெங்கடரமணி இது போன்ற ஒரு சில சமயங்களில் மனிதனின், மனநிலைகளை புரிந்துகொள்ளும் வகையில், அவன் உள்ளத்தை தொட்டு ஆராயும் முயற்சியில் ஈடுபட்டார். இதுபோன்ற நாவலாசிரியர்கள் கையாளும் உத்திகளை அவர் தனது இறுதிகால படைப்புகளில் கையாண்டார்.

வாழ்க்கையை உற்று நோக்கும் போக்கை வெங்கடரமணியின் 'எனது சிறிய அருணாலம் (My Little Arunalam) என்ற படைப்பில் தெளிவாகக் காணலாம். இது தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த விவசாயக் கூலிக்காரரைப் பற்றி கூறுவது. அவனைப் பற்றி இப்படி சாதாரணமாகச் சொல்வது இந்த மண்ணின் உப்பான ஒரு இனத்தைச் சேர்ந்த ஒரு மனிதனுக்கும், அவன் மகனுக்கும் அநீதி இழைப்பதாகும். அவர் காலத்தில் வெங்கடரமணி அவனை இவ்வாறு வர்ணித்துக் கூறியது அவருடைய வாசகர்களில் பலருக்கு ஒரு விநோதமாகத் தோன்றியிருக்கும்.

"பழம்பெருமை வாய்ந்த நம் நாட்டிற்கு அன்பு, உழைப்பு ஆகியவற்றின் நற்செய்தியாக விளங்குகிறது அவன் வாழ்வு. அவன் மாபெரும் அவதாரங்கள் போல, மண்ணும் கடலும் அலையின் சுருள்கள் சந்திக்கும் விளிம்பில் துயில்கிறான். அவன் இப்பரந்த உலகத்தில் தனித்து நிற்பவன். செரிபெரஸ் (Cereberus) போல் தன்னைச் சுற்றியுள்ள நிலங்களை பார்ப்பதில் சலிப்பு அடையாதவன். அவர் வானத்தில் நட்புடன் கண்சிமிட்டிக் கொண்டிருக்கும் காலபுருட நட்சத்திரத்துடன் ஒன்றியிருக்கிறான் போலும். பூமி தன்னை தினமும் சுற்றும் வட்டம் போல உழைப்பு என்ற நிலையான சுற்றுப்பாதையில் அவன் வாழ்க்கையின் போக்கு அடங்கின."

உண்மையான தேசபக்தரான அவருக்கு, அக்காலத்தில் சில வகுப்பினர்கள் மீது சமுதாயம் கடைப்பிடித்து வந்த வேற்றுமை களைக் கண்டு, சகித்துக் கொள்ளும் தன்மை இல்லை. தாழ்த்தப் பட்ட மக்கள் 'இந்த நாட்டு மண்ணின் உப்பு' என்பதை மற்ற தேசபக்தர்கள் உணராத உண்மையை அவர் உணர்ந்தார். வெங்கடரமணியின் படைப்புகளில் இரக்கம் கொள்ளும்படியான விதத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் திரும்பத் திரும்ப வந்தனர்.

இறுதியாக உள்ளது 'எனது பாட்டி' என்பது. இது வெங்கடரமணியின் நாவல்களில் அடிக்கடி சந்திக்கும் மற்றொரு கருணை நிறைந்த சித்திரிப்பு. தமிழக கிராம மக்களின் சமூகவியலை கூர்ந்து நோக்கும் பார்வையாளர்களின் கவனத்தை இது கட்டாயம் ஈர்க்கும். பாட்டி ஒரு கூட்டுக் குடும்பத்தின் தலைவி. அக்குடும்பத்தை கவனித்து, ஆட்சி நடத்தி வருகிறாள். "இந்துக் கூட்டுக் குடும்பம் உலகின் சிறந்த மக்களாட்சி

முறையாகும். அது மிக உயர்ந்த த முறையில் நிர்வகிக்கப்படுகிறது. அதனுடைய முன்னோரது இல்லம் மக்களவைப் பழக்க வழக்கங்களையும், பரம்பரை வழக்கங்களையும் போற்றி வந்தது." பாட்டியின் ஒரு பேரன் தீவிரவாதியாக இருந்தான். ஆனால் அவன் பாட்டியின் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ற வகையில் வளைந்து கொடுக்கும் போக்கையும், பணிசெய்யும் திறமையையும், விடா முயற்சியையும், சக்தியையும் உணர்ந்து பணிந்து சென்றான். பாட்டி தற்காலத்தில் மறைந்துவரும் இனத்தைச் சார்ந்தவள். ஆனால் சில தலைமுறைகளுக்குப் பிறகும் அவள் தன் போக்கிலிருந்து மாறாமல் அவ்வாறே நடந்து கொண்டாள். வெங்கடரமணியின், வாசகர்கள் பலர் அப்பொழுதும், இப்பொழுதும் கூட பாட்டியின் சித்திரம் மறக்க முடியாத ஒரு பாத்திரம் என்பதை உணர்கிறார்கள். தனது இளம் பருவத்தின் முதல் படைப்பிலேயே கூட சிறந்த குணசித்திரப் பாத்திரங்களை உருவாக்கி வெங்கடரமணி தான் ஒரு திறமைவாய்ந்த சித்தரிப்பாளர் என்பதை காட்டுகிறார்.

'காகித ஓடத்'தில் விவரிக்கப்பட்டுள்ள வேறுபட்ட குணச் சித்திரங்களின் தொகுப்பு கல்லூரிப் பருவத்திலிருந்து தொலை தூரம் பயணம் செய்யாத ஒரு இளம் எழுத்தாளனின் படைப்பாக இருக்கலாம். ஆயினும், அது போதுமான அளவு பக்குவம் பெற்ற ஒருவரின் நோக்கை புலப்படுத்துகிறது. வெங்கடரமணியின் முதல் படைப்பான அது, பிள்ளைகளில் தோன்றியிருந்த "தேசபக்தன் கந்தன்" என்ற படைப்புக்கு முன்னோடியாக அமைந்திருந்தது என்று தாராளமாய் கூறலாம்.

அவரது அடுத்த படைப்பான 'மணற்குன்றின் மேல்', 1923-இல் வெளிவந்தது. இது மாறுபட்ட நுட்பமான எழுத்துக்கலையைச் சார்ந்ததாகும். ஆசிரியர் இன்னும் அவருடைய கிராமத்திலேயே இருந்தார். உண்மையில் அவர் சென்னைக்கு சிலமுறை வந்தாரெனினும், தனது படைப்பு வாழ்வு முழுவதிலும் அவர் கிராமத்தை விட்டு நீங்கவேயில்லை. ஆனால் இந்த முறை அவர் வேறுபட்ட நடையில் மாறுபட்ட பொருள் குறித்து பேசுகிறார்.

ஆசிரியர் சிந்தனையில் ஆழ்ந்து காவியம் படைக்கும் மனநிலையிலிருந்தார். அவருக்கு எதிரிலிருந்த கடலையும், அருகில் ஓடிய நதியையும், தனது படைப்பின் அனைத்து

உயிரினங்களையும் மனக் கண்ணில் கொண்டு தனது கிராமத்தில் மணற்குன்றின் மீது சாய்ந்திருந்தார். அந்த மாலை வெளிச்சம், இந்திய நாளின் மாயசக்தி வாய்ந்த பகுதியாகும். பலவகையான சிந்தனைகள் ஆசிரியரின் மனதில் அலைபாய்ந்து கொண்டிருந்தன. அவர் தனக்கே உரித்தான முறையில் சொல்வடிவம் கொடுத்துக் கொண்டிருந்தார்.

"கதிரவன் மிதந்து கொண்டிருக்கும் மேகக்கூட்டங்களின் பின்னே மறைகிறான். கடலே தனது பரிசுத்தமான இளந் தென்றலை மூச்சாக விட்டுக் கொண்டிருக்கிறது. மாலைநேரம் மகிழ்ச்சி நிறைந்திருந்தது. ...என்னால் அடைய முடியாத பொருட் களுக்காக ஏங்கி இளைத்த நான் ஏகாந்தமாக மணற்குன்றின் மேல் அமர்ந்திருக்கிறேன்." அப்பொருள்கள் என்ன என்று விரிவாகக் கூறப்படவில்லை என்றாலும் சிந்தனையிலாழ்ந்த ஆசிரியரை மனித இனத்தின் துன்பமான ஓசை ஆட்டுவித்தது என்பது உறுதி. அவர் பாடுகிறார்.

"அந்தோ! வாழ்க்கை என்பது என்ன?
"மழை நாளில் தோன்றும் நீர்க்குமிழியா?
"அருவி நீரினால் ஏற்படும் நுரையா?
"நிலவில் தோன்றும் மேகமா?
அல்லது சூரியனில் தோன்றும் நீராவியா?
"சிறு மகிழ்ச்சிக்காக கடலில் ஓங்கி
எழுந்து படியும் அலையா?
"அல்லது ஒரே நாளில் வாடி வதங்கும் மலரா?"
"அல்லது என்னால் திரும்பி அடைய
முடியாத எனது குழந்தை பருவமா?"

இங்கு அவர் தன் மீது பரிதாபம் கொள்ளவில்லை. ஆசிரியர் சமுதாயப் பிரக்ஞை உடையவர். "உலகில் பணக்காரர்கள் என்றும் பணக்காரர்களாகவும், ஏழைகள் என்றும் ஏழைகளாகவும் இருக்கின்றனர். தெய்வீக ஒளியை அடைவதில் இரு பிரிவினரும் மிகவும் ஏழைகளே! வாழ்க்கை என்னும் ஆடையில் கிழிசலும், பெரிய கட்டடத்தில் ஏற்பட்ட விரிசலைப் போன்ற ஒரு பயங்கர மான தாழ்வு நாகரீக மனிதனின் ஆளுமையில் ஏற்பட்டுள்ளது. தனி மனிதனின் மகத்துவம் சமுதாயத்தில் ஏற்பட்ட குழப்பங்களாக தன்நிலையை இழந்துவிட்டது."

மனிதன் 'கடவுளின் மிகச் சிறந்த வேலைப்பாடு', பரந்த நோக்குள்ள வாழ்க்கையின் சாரம். கு[illegible] சிறந்த முறையில் வடிவமைக்கப்பட்டு, வெந்து தணிந்[illegible]ம். "இந்த உருவக அணிகளுக்கு மாறுபட்டு அவனுக்கு[illegible]ந்தில் இருக்கின்றான். அவன் எதைத் தவறென்று கருதுவது? இது இயந்திர மயமாக்கப்பட்ட சமுதாயம். வெங்கடரமணியின் சிந்தனைகளில் ஆதரவு இல்லாமல் கைவிடப்பட்ட நோக்கமான இது பிற்கால படைப்புகளில் அடிக்கடி இடம் பெறவில்லை. மிகுதியாக அவர் கிராமத்தைப் பற்றி புகழ்பாடுவதிலேயே கவனம் செலுத்தினார். நகர்ப்புற வாழ்க்கையின் விமரிசனங்கள் அவருடைய படைப்புகளில் மேலெழுந்த வாரியாகத்தான் இருந்தன. நகர வாழ்க்கையின் தீமைகளைப் பற்றி கூறாமல் நன்மைகளைப் புகழ்ந்தார் அவர்.

இந்நூலில் முதன்முறையாக அவருடைய படம்பிடித்துக் காட்டும் மொழியில் கேட்கிறார்: "ஒரு துண்டு இரும்புக்காகவோ அல்லது ஒரு தங்கத் தட்டுக்காகவோ மனிதன் தன் தன்மையை இழக்கலாமா?" அவருடைய படைப்புகள், போபால் நச்சுவாயு நிகழ்ச்சி, செர்னோபில் விபத்து ஆகியவற்றுக்கு முன்பு எழுதப்பட்டவை. வெங்கடரமணி இத்தகைய தொழில் மையங்களை அறியாதவர். அவர் நினைத்ததைவிட அறிவியல் இன்னும் மிகுதியான பொருளுடையது. ஆனால் அக்காலத்தில் ஏற்பட்ட சிறுதொழில் மயமே அவரை பயமுறுத்தவும், மன வேதனை அடையவும் செய்தது.

"ஓ! எங்கும் இயந்திரவியல் மயம்! என்ன! உன்னுடைய உயிரற்ற இதயத் துடிப்பு. இதயத்திற்கு உன் துடிப்பினால் செலுத்தப்பட வேண்டிய குருதியை, வெளியேற்றும் தன்மையுடையதாக இருக்கிறதே. நீ மனிதனை ஒரு செக்குடன் இணைத்து விட்டால் அவன் சுற்றி, சுற்றி வந்து கொண்டே இருப்பான். அவனது பாதங்கள் புண்ணாகி, நடக்கும் சக்தியை இழந்து விட்டன. கடவுளால் கொடுக்கப்பட்ட சக்தி எப்படியெல்லாம் வீணாகிறது. அந்த மனிதன், பரிணாமத்தின் சிறந்த ஆற்றல் மிக்கவன் என்றாலும், தன்னால் உருவாக்கப்பட்ட அடிமைத்தனத்திற்கு தன்னையே அடிமையாக்கிக் கொண்டவன். நீ உனக்காகப் பணியும்படி உயர்த்திய செங்கோல் உன்னை அடிமையாக்கிவிட்டது. இதுவே உனது வலிமையின் ஊழ்வினை!"

மற்றொரு குறிப்பில் ஆன்மாவை நாசம் செய்யும் பொருளியல் அறிவியலை [illegible]த்துரைக்கும் பகுதி இடம் பெறுகிறது.

இருந்த [illegible]திலும் இந்த தீமைகளுக்கெல்லாம் மருந்து உண்டு என்பது தெளிவாலதே "வசந்த கால வனத்திற்கு திரும்பிப்போ, உன்னுடைய கிராமத்திற்கு திரும்பிச் செல், காடுகளுக்கும், பள்ளத்தாக்கிற்கும், மலை உச்சிக்கும் போ. நீ அங்கே எவ்வளவு அமைதியுடனும் நல்லெண்ணத்துடன் நல்ல முறையில் உழைக்க முடியும் என்பதை உணர்வாய். ஏகாந்த நிலையில், இயற்கையுடன் இணைந்து துன்புறும் மனிதனுக்காக புத்தர் போதிமரத்தினடியில் அடைந்த உண்மையறிதலை நீயும் கற்றுக் கொள்வாய்." காவிரிப் படுகையில் உள்ள மணற்குன்றில் அருகிலிருந்த வெங்கட ரமணியின் இறுதிச் சிந்தனை, "கிழக்கிற்கும் மேற்கிற்கும் பிறந்த ஒரு அற்புத மனிதனின் எண்ணம் ஆகும். ஒரு முத்துத்துளி போல் இளங்காலை சூரிய ஒளியில் அவன் நடனமிட்டு மின்ன வேண்டும்." மேலும் "இரவு நேரங்களில் விழும் மென்பனித்துளி போல அமைதி இந்த பூமியில் இறங்கட்டும்."

ரவீந்திரநாத் தாகூரைத் தவிர, அவர் காலத்தில் வாழ்ந்த திறமை மிக்க ஐரோப்பிய விமரிசகர்களால் வெகுவாக வியந்து பாராட்டப்பட்ட இந்திய எழுத்தாளர் வெங்கடரமணிதான். இந்த உண்மை பொதுவாக எவருக்கும் தெரியவில்லை. வெங்கடரமணி மேல்நாட்டு சிறந்த ஆசிரியர்களுடன் கொண்ட கடிதத் தொடர்புகளின் பெரிய சேகரிப்பு ஒன்று வைத்திருந்தார். அதன் சிறப்பை உணராத ஒருவரால் அவருடைய காவிரிப்பூம்பட்டினம் வீட்டில் அது நாசமாக்கப்பட்டது என்பது தெரியவந்தது. ஆங்கில இந்திய இலக்கியத்திற்கும், வெங்கட ரமணியைப் பற்றி ஆய்வு செய்யும் மாணாக்கர்களுக்கும், அது மிகவும் விலைமதிக்க முடியாததாக இருந்திருக்கும். ஆனால் அவருடைய 'காகித ஓடம்', 'மணற்குன்றின் மேல்', மேலும் 'தேசபக்தன் கந்தன்' ஆகிய படைப்புகள் பல ஆங்கில எழுத்தாளர்களால் வியந்து பாராட்டப்பட்டுள்ளன என்பதற்குப் போதிய ஆதாரங்கள் உள்ளன. இதற்காக நமது அறிந்து கொள்ளும் தன்மையை ஒதுக்கிவிட்டு, மற்றவர்கள் மீது கொண்டுள்ள நம்பிக்கையின் பேரால், ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயமில்லை. ஆனால் ஈ.வி. லூகாஸ் கில்பர்ட் மூர்ரே, லார்டு ஹால்டேன் போன்ற எழுத்தாளர்கள் வெங்கடரமணியைப்

புகழ்ந்துள்ளார்கள் என்றால் அவர்கள் கூறியதை நாம் மீண்டும் எடுத்துரைப்பதில் எவ்வித தவறுமில்லை.

இதைப் போன்றே சிறந்த விமரிசகர்களும், 'டைம்ஸ் இலக்கிய ஏடும்' வெங்கடரமணியின் சிறந்த எண்ணங்களையும், அழகுற கையாண்டுள்ள எழுத்துத் திறமையையும் புகழ்வதைக் காணலாம். இந்து கிராம வாழ்க்கையை விவரித்தல் அடிசனுடைய உரை நடைக்கு ஒப்பாகும்' என்பது அவருடைய நூலில் ஒன்றை விமரிசத்த ஒருவரின் கூற்றாகும். லூகாஸ் 'காகித ஓடம்' பற்றி எழுதும்பொழுது 'அலமாரியில் அடங்கியுள்ள அதிக ஆடம்பர நூல்களைவிட இது இந்தியாவைப் பற்றி மிகுதியாகக் கூறுகிறது" என்கிறார். மேலும் "மணற் குன்றின் மேல்" அவரது தனி நபருக்குரிய தன்மையையும் ஆன்மீக சுபாவத்தையும் வெளிப்படுத்துகிறது.

வெங்கடரமணி முதல் உலகப் போருக்குப் பின் எழுதிய படைப்புகள், மேலை நாட்டிலும், கீழை நாட்டிலும் வாழ்ந்த ஒரு பகுதி மக்களின் நம்பிக்கைகளையும் அமைதியை விரும்புகின்ற ஆவலையும் பிரதிபலித்தன என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. வெங்கடரமணியின் இந்திய கிராமம் பற்றிய விவரிப்பு அன்றையத் தேவையை பூர்த்தி செய்தது. அவர் மனக்கிளர்ச்சியை ஊட்டும் எழுத்தாளரோ அல்லது அர்த்தமற்ற, தெளிவற்ற கனவுகள் காணுபவரோ அல்ல. ஆனால் அவர் வசனகவிதை படைக்கும் சிற்பி. 'இலட்சியவாதி' என்ற சொல்லின் இலக்கணத் திற்கு மிகவும் பொருத்தமானவர். அவர் உண்மை நேருக்கு நேர் பார்க்கக் கூடியவர். சிலவற்றை அவர் வெறுத்த போதிலும், மனித இனம் நல்ல தன்மை உடையது, இயற்கை அழகுடையது என்பதை நன்கு அறிந்தவர். இந்த சிந்தனைகளை அவர் மனத்தைக் கவரக்கூடிய உரைநடையில் விவரித்துள்ளார். சில சமயங்களில் வெங்கடரமணியே அதை "கட்டுப்பாடு அற்ற கவிதை' எனக் கூறியுள்ளார். இலக்கண முறைப்படி பார்த்தால் அது சரியல்ல. ஆனால் 'வசன கவிதை' என்ற பரந்த பொருளுடன் பார்த்தால் அது உண்மையே. கவிஞர் உரைநடை எழுதும்பொழுது, அவ்வுரைநடையும் கவிதையாகும்.

இதுபோன்ற அமைப்புடைய மற்றொரு நூல் 'சாம்புடன் ஒருநாள்'. ஆசிரியர் ஒரு பள்ளி மாணவனுடன் உரையாடி

மென்மையான இளமைப் பருவத்தின் தத்துவத்தை விளக்குகிறார். இத் தத்துவ ஞானம் ஒரே கருத்துடையதாகவும், முழுமை உடையதாகவும் இருக்கிறது. இந் நூலின் நடை மகிழ்ச்சிக்குரிய வகையில் எளிதாகவும், சரளமாகவும் உள்ளது. வெங்கடரமணி எப்பொழுதும் வாழ்க்கை, இறப்பு இவற்றின் பிரச்சினைகளை மிகுதியாக எடுத்துரைப்பது வழக்கம். மேலும் இங்கே அவர் சரள மான தெளிவான நடையில் அவற்றை எடுத்துரைக்கிறார். காலப் போக்கில் இவ்வாறு எழுதும் பாணி அவருக்கு மற்றொரு இயல்பா னதாகவே அமைந்துவிட்டது.

'புத்துயிர் பெற்ற இந்தியா' என்ற நூலில் வெங்கடரமணி தெளிவாகவும், கதை பாணியற்ற சொற்களால் கிராமத்து உயர்வின் தத்துவத்தை நன்றாகவும் விவரித்துள்ளார். இந்த நூல் அக்டோபர் 1928-இல் வெளிவந்தது. அதன் இரண்டாம் பதிப்பு டிசம்பர் 1929-இல் வெளியானது. 1932-இல் பிப்ரவரி மாதம், இதிலிருந்து ஒரு அத்தியாயத்தை மட்டும் மறுவெளியீடாக பதிப்பித்தார். 'இந்தியாவின் கிராமம்' என்ற தலைப்பில் (ஒரு பத்தாண்டு திட்டம்) மார்ச் 1936-இல் அவர் திருத்தி அமைத்து விரிவுபடுத்தி வெளியிட்டார்.

வெங்கடரமணியின் வாக்குப்படி 'புத்துயிர் பெற்ற இந்தியா'வும் 'அடுத்த ஏணிப்படி'யும் ஒரு பொதுக் கருவில் பிறந்தவை. "நான் இந்த இரட்டைக் குழந்தைகளை ஒரே தொட்டிலில் இட்டேன். இவற்றிற்கிடையே மிகவும் மெல்லிய எடைக்குறைவான இறகு போன்ற காகிதத்தை வைத்திருந்தேன். இந்த மக்கள் கூட்டம் நிறைந்த உலகில் அவைகள் தொட்டிலை விட்டு வெளிவந்து தனித்தனியே தங்களுக்குரிய பாதையில் செல்ல நேரம் வந்தது. நான் இந்த வேளையில் என்னை விட்டு பிரியும் முதல் குழந்தை விடைபெறும் பொழுது பரிசளித்து, மேலும் இல்லத்தில் நெய்த ஆடைகள் பலவற்றை அணிவித்து அதை வாழ்த்தினேன்". இவ்வாறு வெங்கடரமணிக்கு உரித்தான பாணியில் உருவக அணி வழியில் (இதில் மிகைப்பட விரிவு படுத்தப்பட்டுள்ளது) தமது 'புத்துயிர் பெற்ற இந்தியா என்ற நூலின் இரண்டாவது பதிப்பில்' திருத்தி அமைக்கப்பட்டு, விரிவுபடுத்தப்பட்டுள்ளது' என்பதை கூறும் வகையில் அமைத்துள்ளார்.

இந்த நூல் வெளிப்படுத்துகிற வாதம் தெளிவாக உள்ளது. ஆனால், மிகுந்த நம்பிக்கையோடு காணப்படும் அது புத்தகம் வெளிவந்து பல ஆண்டுகள் கழிந்தும் நிறைவேற்றப்படாமலும் போய்விட்டது. "இந்த பெரும்போர் (முதல் உலகப் போர்) இவ் உலகத்தை மறுபிறப்பிற்குரிய கடுமையான பிரசவ வேதனையில் மூழ்கடித்தது. இந்த குழப்பம் உலகத்தை அழிக்கக்கூடியதாக அமையவில்லை. "இது நிரந்தரமான மதிப்புகளையும், புதிய மதமும் தத்துவ ஞானமும் உடைய அமைதியும், அழகும் நிறைந்த வாழ்க்கையை அடைய தாயன்பின் மகிழ்ச்சியையும் உருவாக்கும் உணர்ச்சியும் கொண்ட புத்துயிர் தந்து செழிப்பாக விளையும் சக்தியாகும். இருபத்தைந்து நூற்றாண்டுகளாக மனிதன் செய்த முயற்சிகளில் சாராம்சம் ஒன்று சேர்ந்து புத்துயிர் பெறும் எனக் காத்திருந்தது. (தற்செயலாக மார்ச், 1913-இல் தமது கட்டுரை ஒன்றில் உலகப் போர் உண்டாகும் என்று முன்கூட்டி வெங்கடரமணி அறிவித்துள்ளார்.) ஒரு இரண்டாவது பெரிய போர் ஏற்படுமானால் அது ஒரு உலகளாவிய பெருந் தீயாகும். அதனால் ஏற்படும் விளைவு என்ன? பெரும் குழப்பமா? அல்லது பொற்காலமா? இதற்கு விடை இந்தியா, சைனா, அமெரிக்க அய்க்கிய நாடுகள், இங்கிலாந்து, மக்களின் பலம், மனப்பாங்கு, பரந்த பார்வை, இலட்சியம், உணர்ச்சிகள் ஆகியவற்றைச் சார்ந்ததாகும்.

இந்தியாவை பொருத்தமட்டில், அதனுடைய 'புத்துயிர் இயக்கம் இரண்டு அடிப்படைக் காரணங்களால் தோன்றிற்று. கல்வி அறிவு பெற்ற வகுப்பினர் தமது தாய்நாடு உலகின் பல நாடுகளால் கௌரவப்படுத்தப்பட வேண்டும் என்ற ஏக்கம் விடுதலைக்கான தீவிரமான ஆவலைத் தூண்டியது. மேலும் எளிய மக்களிடைய தாண்டவமாடிய பசி, பட்டினி உள்ளத்தில் ஆழமான அதிருப்தி முடுக்கி விட்டது. எங்கும் பரவியிருந்த கடுமையான பஞ்சத்தின் காரணமாக ஏற்பட்ட சுதந்திர வேட்கை, அரசியலில் சூறாவளியை ஏற்படுத்த அடிப்படையாக அமைந்தது.

இந்திய கிராம மக்களிடையே மிகக் கொடுமையான பஞ்சம் நிலவியது. "கிராமங்களில் விளைந்த உணவுப் பொருட்கள் அங்கே இருந்த மக்கள் உயிர்வாழ்வதற்கு போதுமானதாக இருந்தாலும் அவை அதிகமாக அரசாங்கத்திற்கும், நகரங்களில் நாகரீக வாழ்க்கையின் நெருக்கடியை சமாளிப்பதற்கும் எடுத்துச்

செல்லப்பட்டன. ஆனால் கிராமங்களில் விவசாய உற்பத்திக்கான சக்தியோ அல்லது வசதிகளோ இல்லை. அதனால் எங்கும் வறுமை, பிணி, அதிருப்தி பரவியதுதான் முடிவான பலனாக அமைந்தது. எவ்வாறு இவற்றை போக்குவது? அரசியல் தத்துவத்தின்படி சுதந்திர இந்தியா, மாநில சுயாட்சி பெற்ற ஐக்கிய (கூட்டு) அரசு ஆகும். இந்தியா, ஒரு வலுவான மத்திய அரசைக் கொண்டதால் ஒரே நாடாக இருந்து வருகிறது என்ற முக்கியமான வரலாற்று உண்மையின் முக்கியத்துவத்தை வெங்கடரமணி தெளிவாக அறிந்து கொள்ளவில்லை. ஆனால் அவர் 'வலிமையான மத்திய அரசு' என்பதற்கும் 'அனைத்து அதிகாரங்களையுடைய மத்திய அரசு' என்பதற்கும் உள்ள வேற்றுமையை எடுத்துக் காட்டுகிறார். "நமது நாட்டின் உயிர் நாடியான எல்லா இழைகளும் வியர்த்து நனைந்த கைகளில் உள்ளது என்ற விநோதமான உருவக அணியில் எடுத்துரைக்கிறார்.

அடுத்த மிக முக்கியமான நிவாரணம் கிராமத்தின் மறுவாழ்வாகும். இது அந்த நூலின் மிக முக்கியமான அடிப்படைக் கருத்தாக அமைந்துள்ளது. "இதுவே நாம் வெற்றிகர மாக நிறைவேற்றக் கூடிய தலைசிறந்த காரியங்களுக்கு முன்னோடி யாக அமையும்." அவருடைய இலட்சிய கண்ணோட்டத்தின்படி, வெங்கடரமணி நம்புவது, "இந்திய கிராமத்தின் உரத்த குரலும், உலகத்திற்கான நற்செய்தியும் என்னவென்றால் ஒரே வகையான தொழிலுக்கு சமமான ஊதியம், அவன் சாதாரண கூலித் தொழிலாளியாக இருந்தாலும், உயர்ந்த பதவி வகிக்கும் அரசு அதிகாரியாக இருந்தாலும், சுமை தூக்குபவராக இருந்தாலும், பசி எல்லோருக்கும் சமம். தினமும் ஒவ்வொருவருக்கும் இரண்டுபடி நெல் தேவையாகும்" என்பதாகும்.

வெங்கடரமணி எழுத்துப் பணியில் ஈடுபட்டிருந்த பொழுது இந்தியாவின் மிக முக்கிய பிரச்சினைகள் என்ன? முதலாவது, விவசாய கடன் சுமை. உணவுத் தேவைக்கு அடுத்து மனிதன் என்றுமே கடன் வாங்கும் பிராணியாக இருக்கிறான்." "எளிய வாழ்க்கையே உயர்ந்த இலட்சியம் ஆகும். நம் நாட்டில் தயாரிக்கப்படாத விளையாட்டுப் பொருள்களைக் கூட மனம் நாடாது." நான்கு விழுக்காடு வட்டிக்கு கடன் தரும் கூட்டுறவு வங்கியும், நில அடமான வங்கியும் வைத்திருப்பது நம் நாட்டின் மிக கீழ்த்தரமான இலட்சியத்தை காட்டுவதாகும்.

"எல்லோருக்கும் கல்வி என்பதே நமது அடுத்த முக்கிய பிரச்சினையாகும். வெங்கடரமணிக்கு, அவர் காலத்தில் இருந்த நவீன முறை கல்வி போதனையை சகித்துக் கொள்ள முடியவில்லை. உண்மைக் கல்வி என்பது 'அடர்ந்த நிழலிலுள்ள ஆலமரத்தின் அடியில் அல்லது மாந்தோப்பில் மணல் மேடுகள் கொண்ட நீர்நிலையின் பக்கத்தில், எங்கும் தென்றல் வீசும் சூழ்நிலையில்" போதனை செய்வதாகும்.

மேலும் சிறு நிலங்களை சட்டப்படியும், பொதுமக்களின் கருத்தின் படியும் மக்களுக்கு நிரந்தரமாக சொந்தமாக்க வேண்டும். சிறு நிலங்கள் ஒவ்வொன்றும் மூன்று ஏக்கர் பரப்புடையதாக இருக்க வேண்டும். அவை பிறருக்கு கொடுக்க முடியாததாக, பிறருக்கு மாற்ற முடியாததாக, வரிவிலக்கு உடையதாக இருத்தல் வேண்டும். இத்தகைய முறை, ஒரு சிலர் கையில் மிகுதியான நிலங்கள் சேர்வதையும், அதனால் நிலத்தை உழுபவர்கள் நகரங்களுக்கு குடிபெயர்ந்து மிக மோசமான குடிசைப் பகுதிகளில் வாழ்வதையும் தடுக்கும். ஆனால் இவற்றையெல்லாம் விட மிகப் பெரிய பிரச்சினை ஒன்று உள்ளது. "இந்திய வாழ்க்கையையும், ஒழுக்கத்தையும் நமது கலாச்சாரத்திற்கு மாற்றியும், அமைதியான தத்துவ ஞானத்தின் மாயைகளிலிருந்து விடுபட்டு, சுறுசுறுப்பாக வாழவும், புனிதத் தன்மையைப் பற்றி கனவு நிலையிலிருந்து அன்றாட வாழ்க்கையில் அதை நடைமுறைக்கு கொண்டு வரும் செயலும் இன்றியமையாதவை என்று வெங்கடரமணி உறுதியாகக் கூறுகிறார். இந்தியர்கள் ' தாழ்வு மனப்பான்மை'யினால் தங்களைத் தாழ்த்திக் கொண்டு, அந்நிய நாட்டாரை அதிக அளவுக்கு போற்றுகின்றனர். "நமது சக்திகளின் மீது நமக்கே உண்டான ஒரு அவநம்பிக்கையால் எழுகிற நமது தாழ்வு மனப்பான்மை, நம் ஒவ்வொரு செயலையும் கெடுப்பதுடன், நமது முயற்சிகளையும் முடக்கம் செய்கிறது."

இந்தியர்கள் தங்கள் மீதும், தங்களுக்கு அருகில் உள்ளவர்கள் மீதும் நம்பிக்கை கொள்ள கற்றுக் கொள்ள வேண்டு. அதற்குப் பிறகே சமூக நலத் தொண்டும், சமூக நீதியும், "புத்துயிர் பெறும் இந்தியாவின் நாதங்களாகும்." "திறந்த மனப்பான்மையுடனும், பரந்த மனதுடனும் செயல்படுங்கள். இந்த உலகம் முழுவதும் உங்கள் குடும்பம் என்று ஆகும்படி பாடுபடுங்கள். இந்த "உயர்ந்த

நோக்குடைய தர்மம்" பின்பற்றப்படுமானால் "ஒவ்வொரு தனி மனிதனின் பிரச்சினைகளுக்கும் தீர்வு காணும் நிலை ஏற்படும்."

வெங்கடரமணி 'இந்திய கிராமம்' என்ற துண்டு பிரசுரம் மூலம் கிராமத்திற்கான தமது திட்டங்களை விவரித்துள்ளார். அது பத்து ஆண்டு திட்டத்தின் மூலம் மறுவாழ்வு அளிக்க வழி வகுத்துள்ளது. "பல நோக்கு அங்காடி, விற்பனை நிலையங்கள், வங்கிகள்" ஏற்படுத்த வேண்டும் என்பதை இத்திட்டம் வலியுறுத்துகிறது. அந்த விற்பனை நிலையங்களில், விவசாயக் கருவிகள், விதைகள், உரங்கள் ஆகியவற்றை கூடுமானவரை குறைந்த விலையில் விற்க வேண்டும். அங்கு கிராம நல மருந்தகம், இயற்கைச் சூழலில் அமைந்த திறந்த பள்ளி அமைய வேண்டும். குடிநீர் சுகாதார முறையில் வழங்க வேண்டும். விவசாயக் கடன் மீதான வட்டி விழுக்காடு மிகக் குறைவாக இருக்க வேண்டும். விவசாயக் கடன் உதவிகள் மீண்டும் செயல்படவேண்டும். மின்சாரம் குறைந்த கட்டணத்தில் கிராமங்களுக்கு வழங்கப்பட வேண்டும். "நீராவி சக்தி நாகரீக வாழ்வை கடினமாக, இழிந்த நிலைக்கு மாற்றிவிட்டது. மின்சார சக்தி அதை நிச்சயமாக அழுகுபடுத்தாமலும், நல்ல முறையில் நகர்ப்புறங்களை கிராமச் சூழ்நிலையிலும், கிராமங்கள் நகர்புறச் சூழ்நிலையிலும் மாற்றி விடும். கிராமங்களின் வாழ்க்கையை மாசுபடுத்தாமலும், அதன் தனித்தன்மையை பாழ்படுத்தாமல் அறிவியலினால் கிடைக்கப் பெற்ற நன்மைகளை நமது கிராமங்கள் பெற வேண்டும்".

வெங்கடரமணி மேலும் "சிதறுண்டு, நலிவடைந்து பரந்து கிடக்கும் நமது ஏழு இலட்சம் கிராமங்களை சரியாக நில அளவை செய்து, சீரமைப்பு செய்து அதை மிக அழகான நிலப்பரப்பு களாக்க வேண்டும். மேலும் ஒரு கிராமத்தின் ஜனத்தொகையை உயர்த்த அளவு, குறைந்த அளவு வரம்பு விதித்து, மக்கள் புதிய நிலப்பரப்புகளுக்கு குடி பெயர்ந்து வாழ அனுமதியும், சுதந்திரமும் கொடுக்க வேண்டும்" என்று கருத்து தெரிவிக்கிறார்.

இது தனது வாழ்நாள் முழுவதும் கிராமத்தின் உயர்வுக் காகவும், அதன் மகிழ்ச்சிக்காகவும், வளத்திற்காகவும், உழைத்த வெங்கடரமணியின் இறுதியான நோக்கமாகும். இதுவே அவருடைய முயற்சிகளின் கனவுகளின் உச்ச கட்டமாக இருந்தது.

# 4

## நாவல்கள்

வெங்கடரமணி எழுதிய நாவல்கள் இரண்டு. 'முருகன் ஓர் உழவன்' 1927ஆம் ஆண்டு வெளியாயிற்று. அதற்கு ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு 'தேசபக்தன் கந்தன்' என்கிற நாவலை வெளியிட்டார். இவ்விரண்டு நாவல்களுமே அவரைப் புகழின் உச்சிக்கு இட்டுச் சென்றன. வெங்கடரமணி ஓர் உயர்ந்த நாவலாசிரியர் என்பதை இந் நாவல்கள் உலகுக்கு உணர்த்தின. அவர் கல்லூரி நாட்களில் எழுதிய சிறு கட்டுரைகளும், சிறுகதைகளும் இவ்வாறு அவர் நல்ல நாவலாசிரியராகப் பரிண மிப்பார் என்பதை முன் கூட்டியே தீர்மானமாகத் தெரிவிப்பதாக அமைந்தன. இதர எழுத்தாளர்களைப் போல அவரும் கனவுலகில் வாழ்ந்தவர்தான். இருந்தாலும் இலக்கியம் காரணமாக கற்பனையின் முழுத் திறனைப் பயன்படுத்தும்போது, தன் பார்வையை தெளிவான யதார்த்த நிலையிலிருந்து பிறழாமல் கவனித்துக் கொண்டார். தான் உண்மை என நம்பியவற்றை எடுத்து உணர்த்த நாவல் என்னும் கருவி அவருக்குப் பயன்பட்டது. இன்றைக்கும் இலக்கியம் பிரசாரத்துக்கு உபயோகமாவதைப் பார்ப்பவர்கள் நாம். அரசியல்வாதியான ஆபிரஹாம் லிங்கனின் பொறி பறக்கும் சொற்பொழிவுகளை விட, திருமதி பீச்செர் ஸ்டோவி 'அங்க்கிள் டாம்ஸ் காபின்' என்னும் நூல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் நீக்ரோக்களை அடிமைத் தளையிலிருந்து விடுவிக்க வெகுவாக உதவியது. அதே போல இந்தியரான வெங்கடரமணியின் இரண்டு நாவல்களும்-குறிப்பாக 'தேசபக்தன் கந்தன்' நாட்டில் இந்த ஆசிரியர் வாழ்ந்த பகுதியில் விடுதலைப் போராட்டத்துக்கான ஊக்கத்தைத் தருவனவாக அமைந்தன.

மேலும் இந்த இரு நாவல்களில் முருக'னை விட 'கந்த'னில் வெங்கடரமணியின் திறன் மிகுதியாக வெளிப்படுகிறது. இந்த இரண்டு நாவல்களையும் அவர் எழுதி இருக்காவிடில், அவர் இன்று நம் கவனத்தில் இருந்திருக்க மாட்டார். சாதாரணமாக

புதுக்கவிதை எனப்படும் மரபு மீறிய கவிதைகளை மரபுக் கவிஞர்களும், பண்டிதர்களும் ஒப்புக் கொள்வதில்லை. அதே போல, கிராமங்களின் மறுவாழ்வுக்கான திட்டங்கள் தன்னிடம் இருக்கின்றன என்று சொல்பவர்களின் பேச்சையும் எவரும் காது கொடுத்துக் கேட்பதில்லை. அன்றைய ஐ.சி.எஸ். அதிகாரிகள் தேசப்பணி செய்ததை வெங்கடரமணி சொல்கிறார். ஒரு வெள்ளைக்காரக் கலெக்டரும், அவருக்குத் தாளம் போடும் இந்திய அதிகாரிகளும், கான் பகதூர்களும், ராவ் பகதூர்களும், முண்டி அடித்து முன்னேறும் சட்ட அறிஞரும், எளிமையான இலட்சிய வாதியும் இவர்களைப் போன்ற வேறு பலரும் வடிவமைக்கப்பட்ட வகையில் நமது கவனத்தை வெகுவாகக் கவர்கிறார்கள். இது அவருடைய எழுத்தாற்றலுக்குள்ள சிறப்பு. வெங்கடரமணியின் நாவல்களில் வரும் இந்த நபர்கள் கற்பனையால் உருவாக்கப் பட்டிருந்தாலும், கந்தன் காவிய நாயகனாக உயரும் பாங்கு மெச்சத்தக்கது. உண்மையில் மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் தீவிர விடுதலைப் போராட்டத்துக்காக வரிந்து கட்டிக் கொண்டு எழுந்த 1920, 1930 ஆண்டு கால கட்டத்தில், போராட்டத்தின் மகிமையை உணர்த்தும் வகையில் இங்கிலீஷில் எழுதப்பட்ட இந்திய நாவலாசிரியர்களின் நாவல்கள் வேறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. பிற்பாடு பால் ஸ்காட், ஜான் மாஸ்ட்டர்ஸ் ஆகியோர் இந்திய விடுதலைப் போராட்டம் குறித்து நாவல்கள் எழுதி இருக்கிறார்கள். இவர்களுடைய நாவல்களுடன் 'தேசபக்தன் கந்தன்'ஐ ஒப்பிட்டுப் பார்த்து, இந்திய, ஆங்கிலேய ஆசிரியர்களிடையே தோன்றிய கருத்துக்களைப் புரிந்து கொண்டால் போதும், 'கந்தன்' எந்த அளவுக்கு உயர்ந்து நிற்கிறது என்பது தெரியவரும்.

வெங்கடரமணியின் இரு நாவல்களை ஒன்றுடன் மற்றதை ஒப்பிட்டு நோக்கத் தேவை இல்லை. இருந்தாலும் கதை சொல்லும் திறமையில் அவர் எப்படி முன்னேற்றம் அடைந்திருக் கிறார் என்பதைப் புரிந்து கொள்ள மட்டும் அத்தகைய ஒப்பிடுதல் அவசியமாக இருக்கலாம். இரண்டு நாவல்களிலும் மையக்கருத்து ஒன்றுதான். முதலாவது கிராம மறுவாழ்வு பற்றியது. மற்றது விடுதலைப் போராட்டம் குறித்து எழுதப்பட்டது. ஆனால் கதை சொல்லும் பாணியில், உத்தியைக் கையாண்ட வகையில் இரண்டும் வேறுபட்டு நிற்கின்றன. 'முருகன் ஓர் உழவன்'னில் கதை

நிகழ்ச்சிகளைவிட கருத்துகள் அதிகம். 'தேசபக்தன்'னில் கருத்துக் களைவிட நிகழ்ச்சிகள் மிகுதி. சொல்லப் போனால், முருகனைப் படைக்கும்போது ஆசிரியர் விவரங்களைத் தெரிவிக்கும் விதத்தில் உணர்வுடன் செயல்பட்டிருக்கிறார். இந்நாவல்களில் வரும் அவருடைய கருத்துக்கள் அவர் கல்லூரியில் பயின்ற நாட்களில் உதித்தவை. ஆனால் காலப் போக்கில் அக்கருத்துகளில் வெகுவாக முன்னேற்றம் இருந்ததாகத் தெரியவில்லை. இருந்தாலும் அவரது இரண்டாவது நாவலில் கருத்துத் தெளிவும், சொல்லும் உத்தியில் மாற்றமும் தெரியவருகிறது.

இந்த இரண்டு நாவல்களிலிருந்து நமக்குப் புலனாவது என்ன வெனில், இவை எழுதப்பட்ட ஐந்து ஆண்டுகால இடைவெளியில் நாவலாசிரியர் தனது இலட்சிய வாதத்தில் மேலும் வளர்ச்சி பெற்றிருக்கிறார். கருத்து வேறுபாட்டுக்கு இடமில்லாத விதத்தில் கந்தன் தன் பெயர் கொண்ட நாவலில் நாயகனாக அமைந்து விடுகிறான். ஆனால் முருகன் அப்படிப் பரிணமிக்கவில்லை. 'முருகன் ஓர் உழவன்' நாவலில் வரும் முருகன் கந்தனைப் போல ஒரு நேர்மையாளன்தானே என வினவலாம். தொடக்கத்தில் கந்தன் உயர்ந்த மனிதனாகவே வெளிப்படுகிறான். ஆனால் நாவல் சூடு பிடித்து விரையும் போது, தெய்வ நிந்தனை, கள்ளுக் கடை குத்தகை எடுப்பது ஆகிய தவறான வழிகளில் சென்று பின் அவன் மீள்கிறான். ஆனால் முதல் நாவலில் வரும் ராமச்சந்திரனைப் பொருத்தமட்டில், உலகெங்கும் விரவிக் கிடக்கும் பிறவிகளில் ஒன்றான நாக்குத் துடித்த மாமியார்ப் பிடாரியின் பிடியில் அவன் அகப்பட்டிருந்தாலும், நாவல் முழுதிலும் அவனை நேர்மை யாளனாகவே பார்க்க முடிகிறது.

ஒப்பிடும்போது 'முருகன் ஓர் உழவன்' நாவல் சற்று முதிர்ச்சி அடையாத படைப்பு எனக் கருதப்படலாம். இருந்தாலும், இந்நாவலும் தரமானதுதான். தெரிந்தமட்டில், இந்த நாவல் எழுதப்பட்ட காலகட்டத்தில் ஆங்கிலத்தில் இதுபோன்றதொரு நாவல் ஒரு இந்தியரால் எழுதப்பட்டதில்லை என்று தீர்மான மாகச் சொல்லலாம். ருட்யார்ட் கிப்ளிங், திருமதி எஃப், பென்னி போன்ற ஆங்கிலேய எழுத்தாளர்களின் பாரத நாட்டின் பின்னணியைக் கொண்ட கதைகள் அவர்களுடைய பச்சாதாபத் துடன்தான் வெளியாயின. இந்த ஆங்கில எழுத்தாளர்களில் எட்வர்ட் தாம்ஸன் என்பவரை பரிவுடன் நாம் ஒதுக்கி விடலாம்.

இ.எம். ஃபாஸ்ட்டர் அடக்கத்துடன் எழுதுபவர். ஃப்ளோரா ஆன்னிஸ்டீல், மாட் டைவர் ஆகியோர் விஷயத் தெளிவு அற்றவர்கள். இந்த ஒரு தரப்புச் சூழ்நிலையில்தான் 'முருகன் ஓர் உழவன்' வெளிவந்தது. வெளிவந்த காலத்தில் நாவல் இந்திய தேசிய எழுச்சியின் மழலைப் பருவத்தை எடுத்துக் காட்டுவதாக அமைந்தது. தேசிய எழுச்சியை அது தவறான கோணத்திலோ அல்லது வக்கிரமாகவோ எடுத்து இயம்பவில்லை.

ஆனால் அன்றைய நாட்களில் 'முருகன் ஓர் உழவன்' வெறும் புனை கதையாக இருந்தது இல்லை. உண்மையை அடித்தளமாகக் கொண்ட கதை அது. இயல்பான வகையில் நாவல் வளர்ச்சி பெற்றது. அதன்பாத்திரங்கள் உயிருடன் நடமாடுபவர்கள். சொல்லப் போனால், அவருக்குத் தெரிந்த ஒரு சட்ட அறிஞரை வெங்கடரமணி தன் நாவலில் படம் பிடித்துக் காட்ட முயன்றிருக்கிறார். சாதாரணமாக அவர் கேலி, நையாண்டிகளில் கலந்து களிப்பவர் அல்ல. ஆனாலும் நகைச்சுவையை ஒதுக்குபவரும் அல்ல. உண்மையில் நாவல் என்பது கதையாக எழுதப்படுவதே தவிர, உபதேசத்துக்காக அல்ல. ஆகவே, நகைச்சுவை இயல்பாகவே நாவலில் வந்தாக வேண்டும். நாவலாசிரியர் தன் எண்ணத்தைத் தெரிவிக்கிறார். இது இது இப்படி நடைபெறுவது நல்லது என்று சொல்கிறார். ஆசிரியர் தன் எண்ணமும், கருத்தும் வாசகனை அடைய வேண்டும் என நினைக்கிறார் என்பது நாவலைப் படிக்கும் வாசகனுக்குத் தெரியும்.

கிராமப்புற வாழ்க்கையின் உன்னதத்தை சித்தரிக்காவிடில், வெங்கடரமணி வெங்கடரமணியாக இருந்திருக்கமாட்டார். இரு நாவல்களிலும் சென்னையின் வாழ்க்கை நிலை விவரிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் 'முருகன்'னை விட 'கந்தன்'னில்தான் விவரம் அதிகம். தெரிவிக்கப்படும் விவரங்கள் மட்டும் வேறு பட்டவை. நகர வாழ்க்கை மனிதனின் தரத்தை உயர்த்துவதாக இல்லை. ஏமாற்றம் அளிப்பதாகவே இருக்கிறது. ஆனால் கிராமப்புற வாழ்க்கை சிறந்தது. இந்திய ஒருமைப்பாட்டை உணர்த்துவது. மரபு வழி வந்தது. பண்பாடு மிக்கது. அடிப்படை யான ஆரோக்கியம் கொண்டது. வெங்கடரமணி இவ்வாறுதான் கருதுகிறார்.

மேலும் அவரிடம் அழுத்தமாகச் சொல்ல வேண்டிய கருத்துகள் இருக்கின்றன. கிராமங்களில் வாழும் உழவர்கள் நல்லது, கெட்டது தெரியாமல், கவலைப்படாமல் வாழ்கிறார்கள். அவர்களுடைய பலவீனம் அவர்களுக்குத் தெரிவதில்லை. கெட்ட சகவாசத்தாலும், குடியினாலும் அவர்கள் அழிந்து கொண்டிருக்கிறார்கள். நிலத்துக்கு உரியவரான பண்ணையார் கிராமத்தில் தங்குவதில்லை. தங்கி பயிர்த் தொழிலைக் கவனிப்பதில்லை. நகரத்தில் குடியேறி, அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்து, அதன் மூலமாகப் பெறும் ஊதியத்தை உயர்வாகக் கருதுகிறார். இதனால் அவருக்கு மட்டும் அல்லாது, அவரைச் சார்ந்துள்ள சமுதாயத்துக்கும் கேடு விளைகிறது. சாதாரணமாக, வஞ்சகத்தாலும், சவடால் பேச்சாலும் சேர்க்கப்படும் செல்வம் விரைவில் அழிகிறது. சம்பந்தப்பட்டவரையும் அழித்துவிடுகிறது.

'முருகன் ஓர் உழவன்' என்னும் நாவலின் கதை ஆலவந்தி என்கிற கிராமத்தைப் பின்புலமாகக் கொண்டு சொல்லப் படுகிறது. சென்னை மாநகரமும் கதையில் வருகிறது. கதை முழுதிலும் காவிரி ஆற்றின் ஓட்டத்தை உணரலாம். கேதாரி, ராமச்சந்திரன் என்ற பாத்திரங்கள் தமக்கு உற்ற வகையில் கல்லூரி நாட்களை மகிழ்ச்சியுடன் கழிக்கிறார்கள். நகர வாழ்க்கை, புதிய சூழ்நிலை, முன்பின் கண்டிராத மனிதர்கள் என்று வரும்போது, உணர்ச்சிக் கொந்தளிப்பில் அகப்பட்டு அவர்கள் திணறுவது நாவலில் விவரிக்கப்படுகிறது. பாத்திரப் படைப்பில் இந்நாவல் வெகுவாக உயர்ந்து நிற்கிறது. இருந் தாலும், கதையைப் பின்னிச் செல்வதிலும், அழுத்தமாகக் கருத்துக்களைச் சொல்வதிலும் 'தேசபக்தன் கந்தன்' கம்பீரம் பெறுகிறது. நுட்பமாகக் கதைகளை அணுகும் வாசகர் முதல் நாவலிலிருந்து மற்றது கதை சொல்லும் பாங்கில் எப்படி முன்னேற்றம் அடைந்து இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வார்.

நாவலின் தலைப்பில் பெயரைக் கொண்டிருந்தாலும், முருகன் மட்டுமே முதல் நாவலின் கதாநாயகனாக இல்லை. ஆனால் அடுத்த நாவலில்கந்தன் மட்டும் ஐயத்துக்கு இடமில்லாத வகையில் கதாநாயகன். முதல் நாவலில் முருகன் அளவுக்கு ராமச்சந்திரனும் கேதாரியும் குறிப்பிடும் படியாக இருக்கிறார்கள். மூவருமே ஆலவந்தி கிராமத்தில் வசிப்பவர்கள்தான். புத்திசாலி

எனக் கருதப்படும் கேதாரி சட்ட அறிஞராகி, சென்னையில் தொழில் நடத்துகிறான். கேதாரியின் வகுப்பு நண்பனான ராமச்சந்திரன் பரீட்சையில் தோல்வி கண்டு, கிராமத்திலேயே கிடக்கிறான். அவனுடைய மாமனார் அவனைத் தார்குச்சி போட்டுத் துளைத்தெடுக்க, அவன் அருகிலுள்ள நகரத்தில் ஒரு வேலையில் அமர்கிறான்.

இவர்கள் போன்று, கந்தனும், நேர்மையாளனாகத்தான் திகழ்ந்தான். ஆனால் கெட்ட சகவாசம் அவனைப் பாழ்படுத்து கிறது. 'தொப்பை' என்பவனின் சொல் கேட்டு இந்த முந்நாள் கிராமப்புற நேர்மையாளன் ஒரு கள்ளுக்கடையைக் குத்தகை எடுக்கிறான்.

ஆலவந்தியை விட்டுச் செல்லும்போது மூதாதையரிடமிருந்து பரம்பரையாக வந்த விளைச்சல் நிலங்களை ராமச்சந்திரன் விற்க நேரிடுகிறது. எளிமையாக வாழ அவன் முயற்சிக்கிறான். 'சர்வோதயா' பாணியில் மூன்று ஏகரா நிலத்தை உழுது பயிரிட்டு வாழ ஒரு நபரால் முடியும் என்று வருங்கால சமுதாய அமைப்பில் நம்பிக்கையுடன் இருக்கிறான். யதார்த்த சமாசாரங்களில் அறிவாற்றல் கொண்டு விளங்கும் கேதாரி தன் தொழிலில் முன்னேறுகிறான். ஆனால் அவனுக்கு மேலாக உள்ள (ஸீனியர் வக்கீல்) மார்க்கண்டம் என்பவரின் பொறாமைக்கு அவன் ஆளாக நேரிடுகிறது.

இதற்கு இடையே, முருகனும் அவனைச் சார்ந்தவர்களும், தொப்பையும் தஞ்சாவூர் மாவட்டத்தில் கிளர்ச்சியைக் கிளப்பு கிறார்கள். அவர்கள் நீதி மன்றத்துக்கு வர நேரிடுகிறது. முருகனுக்கு எதிராக வழக்கைப் பரிசீலனை செய்யும் பொறுப்பு ராமச்சந்திரன், அவனுடைய கூட்டாளிகள் மீது சுமத்தப்படுகிறது. கேதாரியும், மார்க்கண்டமும் எதிர் வழக்காட அமர்த்தப் படுகிறார்கள். இப்படியாக, ஆலவந்தி கிராமத்தைச் சேர்ந்த வர்கள் மனம் ஏற்காத வகையில் கசப்பு உணர்வுடன் நீதி மன்றத்தில் கூடுகின்றனர்.

இந்த நாவலைப் பொறுத்தமட்டில், கருத்துகளைவிட நிகழ்ச்சிகள் மிகுதியாக இருக்கின்றன. காரணம், ராமச்சந்திரன் தன்னை நேர்மையாளனாகக் கருதுவதால்தான் என்பதை

நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். உண்மையில் கிராமப்புற சீரமைப்பு பற்றிய அவனுடைய கருத்துக்கள் அனைத்தும் ஆசிரியருடையவை. அக்கருத்துகளின் படைப்பாளி அவர். 'தேசபக்தன் கந்தன்' நாவலில் தான் சொல்ல வந்த இக்கருத்துக்களை மிக அழகாக, தெளிவாக, கலாபூர்வமாகத் தெரிவிக்கிறார். தொடக்கத்தில் இந்த 'சர்வோதயா' கருத்துக்கள் பின்னணியில்தான் இருக்கின்றன. நாவல் உச்சகட்டத்தை அடைந்து கம்பீர நடை போடும்போது, இக்கருத்துகளே நாவலின் சிறப்பான கதாபாத்திரமாகிவிடுவது நாவலின் சிகரம்.

நாவல் முடிவில் முக்கிய கதாபாத்திரங்களான ராமச்சந்திரன், கேதாரி, கந்தன் ஆகியோரும், தொப்பையும் கூட ஒரு மாதிரியான 'சர்வோதயா' திட்டத்தின் கீழ் ஒன்றுபடுகின்றனர். அங்கே ஒவ்வொருவரும் மூன்று ஏகரா நிலம் பெற்று, உழுது பயிரிட்டு மனநிறைவுடன் வாழ்கின்றனர்.

ஆலவந்தி கிராமத்தில் முருகன் தன் கையகல நிலத்தின் மீது அளவற்றபற்று வைத்திருக்கிறான். பிற்பகுதியில் ராமச்சந்திர னால் வெகுமதியாக அளிக்கப்பட்ட அவனுடைய தென்னந் தோப்பு விலை பேசப்படுகிறது. இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கதாநாயகன் என்கிற நிலையிலிருந்து முருகன் விடுபடுகிறான். அந்த கௌரவத்தை ராமச்சந்திரன், கேதாரி ஆகியோருடன் மட்டுமல்லாது, 'சர்வோதய'க் கருத்துகளுடனும் அவன் பங்கிட்டுக் கொள்ள நேர்கிறது.

நேர்மையான வாழ்க்கைக்கான கருத்துக்களை வலியுறுத்தி இந்நாவல் சொல்வதாக இருந்தாலும், அக்கருத்துக்களை உப தேசிக்கவும், கிராம வாழ்க்கையின் உன்னதத்தையும், கிராமத்தின் பொருளாதார நிலையையும் சொல்ல மட்டுமே நாவல் எழுதப்படவில்லை என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். அப்படி வெங்கடரமணி கருதி இருந்தால், அவர் அச் செயலை 'தேச பக்தன் கந்தன்' நாவலில் மிகத் திறன்பட செய்திருக்க முடியும். தன்னுடைய முதல் நாவலில் பாத்திரப் படைப்பையும், கருத்துக் களையும் சிறப்பாகக் கலந்தே தருகிறார். இதனால் நாவல் தொய்வு பெறுவதில்லை. 1927ஆம் ஆண்டில் இந் நாவல் வெளியானபோது, காந்தீயத் தத்துவங்கள் நாட்டில் எங்கும் பரவத் தொடங்கி இருந்தன. 'கிராமத்து தேச பக்தன்' என்ற சொல்

வெகுவாக அச்சமயம் பேசப்பட்டது. அத்தகைய காந்தியத் தத்துவங்களை பிரசாரம் செய்யவே வெங்கடரமணி நாவல் எழுதினார் என்ற எண்ணமும் பலருக்கு உண்டு. ஆனால் இந் நாவல் கையில் எடுத்தவுடன் மனதைக் கவர்வதாக இல்லை. பாத்திரங்களிடையே ஏற்றமும், தாழ்வும் காணோம். இருந்தாலும் இந்நாவல் தரம் மிக்கதுதான். 'தேசபக்தன் கந்தன்' என்ற நாவல் எழுதப்படுவதற்கு இது முன்னோடியாக இருந்தது எனக் கருதலாம். ஓர் ஆசிரியரின் முதல் நாவல் என்ற விதத்தில் 'முருகன் ஓர் உழவனு'க்கு உயர்ந்த இடம் உண்டு.

வெங்கடரமணி என்கிற சாதாரண மனிதனை நாம் சற்று மறப்போம். வெங்கடரமணி என்ற நாவலாசிரியரை நாம் எடுத்துக் கொண்டோமானால், கேதாரி, மார்க்கண்டன் ஆகியோரை விவரிப்பதில் எந்த அளவுக்கு ஆசிரியருக்கு யதார்த்த நோக்கு அல்லது உலகம் தழுவிய அறிவாற்றல் இருந்திருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம். அன்றைய சென்னை மாநகரின் சட்டத்துறையில் இருந்த ஊழல் நாவலில் தெளிவாகப் பிரதி பலிக்கிறது. இத்தகைய ஊழல் வெங்கடரமணிக்குத் தெரியாது இருக்க நியாயமில்லை. இந்த விவரங்கள் குறித்து ஏற்கெனவே முந்தைய பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த யதார்த்தப் பார்வை வெங்கடரமணியின் மேதா விலாசத்தைக் காட்டுகிறது. ஆனால் ஏனோ அவர் இந்தத் திறனை வளர்த்துக் கொள்ளவில்லை. ஒளிப்பிழம்பு(இல்யுமினேஷன்) என்னும் அவரது சிறுகதையில் அவர் சென்னை சட்டத்துறைக்கு திரும்பியதைக் குறித்துச் சொல்கிறார். இது பற்றிய விவரம் பின்னால் காண்க. அப்படி சென்னைக்குத் திரும்பிய விவரங் களைச் சொல்லும்போது, எழுத்தில் சொற்கள் கடுமையாகவே விழுந்திருக்கின்றன. தன்னை மறந்து உணர்ச்சி வசப்பட்டிருக் கிறார். இப்படி உணர்ச்சிவசப்படுதல் அவரது மேதாவிலாசத்தின் குறைபாடு எனச் சொல்லிவிட முடியாது. சட்டத்துறையில் அவருடன் பழகியவர்களும், 'திரிவேணி' ஏடு வெளிவரும் அலுவல கத்தில் சந்திக்கும் நண்பர்களும் உரையாடலில் அவருக்கு இருந்த தேர்ச்சியை வெகுவாகப் புகழ்ந்து சொல்லியதை கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த உரையாடல்கள் குறித்து ஏற்கெனவே முந்தைய பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. சென்னை சட்டத்துறை குறித்து அவர் அத்தனை கடுமையாகக்

குறிப்பிடுகிறார் என்றால், சட்டத்துறையில் அவர் கண்ட தோல்வியால் ஏற்பட்ட பழிவாங்குதல் என்ற உணர்வு காரணமாக இருக்கலாம். அல்லது வேறு காரணம் ஏதாவது இருந்திருக்குமோ? தெரியவில்லை. ஏதோ, சட்டத்துறை வெங்கடரமணியின் எழுத்துக் களை வெகுவாக பாதித்து இருக்கிறது என்பது மட்டும் புரிகிறது. அவருடைய எழுத்துக்களை மதிப்பிடும்போது இந்த விவரங் களைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இருந்தாலும், சட்டத்துறை பற்றி கேலி செய்ய வேண்டும் என்ற நோக்கமோ, கடுமையான சொற்களைப் பயன்படுத்தித் தாக்க வேண்டும் என்ற எண்ணமோ நாவலின் குறிக்கோள் அல்ல. 'தேசபக்தன் கந்தன்' என்ற நாவல் தேசிய எழுச்சி குறித்து எவ்விதம் சொல்கிறதோ, அதேபோல 'முருகன் ஓர் உழவன்' 'சமுதாய சீர்திருத்தக் கருத்துகளைச் சொல்கிறது. விடுதலைப் போராட்டம் குறித்து நாவலில் வரும் பாத்திரங்களுக்கு அதிக அக்கறை இருப்பதாகவும் தெரியவில்லை. ஆனால் பக்கத்துக்கு பக்கம் மகாத்மா காந்தி தெரிகிறார். அவருடைய அரசியல் போராட்டங்களுக்காக அவர் நாவலில் இடம் பெறவில்லை. மாறாக, அன்னாரின் கருத்துகளின் தாக்கமே தெரிகிறது. சொல்வ தாயின், வெங்கடரமணியின் இரண்டு நாவல்களுமே தனித் தன்மை கொண்டிருந்தாலும், ஒன்றை ஒன்று உயர்த்துபவையாக அமைந்துள்ளன. 'முருகன் ஓர் உழவன்' காந்தியக் கருத்துகளை எடுத்துச் சொல்கிறது என்றால், 'தேசபக்தன் கந்தன்' மகாத்மா வினுடைய அரசியல் இயக்கத்தைக் குறித்து விவரிக்கிறது.

வெங்கடரமணி எழுதியவற்றுள் மிகச் சிறந்தது இந்த இரண்டாவது நாவல்தான். 'இந்திய நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்ட விளம்பரம் பெறாத தொண்டர்களுக்கு' அது சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. வெங்கட ரமணியில் எழுத்துக்களில் அடிக்கடி தலைகாட்டும் ஆக்கூர் என்கிற கிராமத்தின் கள்ளுக்கடையிலிருந்து நாவல் தொடங்கு கிறது. ஆக்கூர் ஓர் அழகிய இடம். அது மாயவரம்–தரங்கம்பாடி ரயில் நிலையங்களுக்கு இடையே உள்ளது.

தரங்கம்பாடி கிழக்கடற்கரையில் இருக்கிறது. கடற்கரை ராணி என்று செல்லமாக அழைக்கப்படும் ஊர் இது. ஆங்கிலத்தில்

இவ்வூரை 'டிராங்குபார்' என அழைக்கிறார்கள். சில நூற்றாண்டு களுக்கு முன் இது டென்மார்க்கின் ஆதிக்கத்தில் இருந்தது. அங்கே ஒரு கோட்டையும் உண்டு. எழுதும் வேகத்தில் வெங்கடரமணி தரங்கம்பாடியை நாவலுள் இழுத்துப் போடுகிறார். ஆனால் அந்த ஊர் குறித்து புகழ்ந்து இரண்டு சொற்கள் கூறவில்லை. ஆனாலும் அவர் இந்தப் பகுதியிலிருந்து வந்த உயர்ந்த தேசபக்தர்.

கதை கந்தனைச் சுற்றிப் படர்ந்து விரிகிறது. அவன் இந்த கிழக் கடற்கரை பகுதியைச் சேர்ந்தவன். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் பட்டப்படிப்பு பெற்று, இந்தியன் சிவில் சர்வீஸ் எனப்படும் ஐ.சி.எஸ்.ஸிலும் தேர்ச்சி பெறுகிறான். ஆனால் காதலில் தோல்வி கண்டு, விரக்தியுடன் ஜிலு ஜிலு என்றிருக்கும் அரசாங்க உத்தியோகத்தை உதறித் தள்ளி, மக்களுக்கு சேவை செய்கிறேன் பேர்வழி என்று தமிழகத்திலேயே இருந்து விடுகிறான்.

அந்தக் காலத்தில் மக்கள் சேவை என்பது காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து பணியாற்றுவதுதான். இதில் எவருக்குமே ஐயம் இருக்க முடியாது. மக்கள் சேவை என்பது நாட்டுப் பணி. நாட்டுப் பணி என்பது அரசியல் விடுதலைக்காகப் பாடுபடுவது மட்டுமல்ல; சமுதாய விழிப்பை ஏற்படுத்துவதும், வாழ்க்கையில் முன்னேறு வதற்கான வழிமுறைகளைக் காண்பதும் நாட்டுப் பணியில் அடங்கி இருந்தன.கதையில் இன்னொரு ஐ.சி.எஸ். அதிகாரி வருகிறார். அவர் பெயர் ரங்கன். அதாவது, ஆர்.எஸ்.ரங்கசாமி. கதை தொடங்கும்போது இவர் தஞ்சை மாவட்டத்துக்கு மாற்றலாகி வர இருக்கிறார்.

மூன்றாவது நாயகன் பத்மநாபன். சீர்காழியைச் சேர்ந்த மாணவர் இவர். விடுதலைப் போரில் கலந்து கொள்ள இவர் வீட்டை விட்டு ஓடுகிறார்.

தரங்கம்பாடியில் நாவலின் உச்சகட்டம் நிகழ்கிறது. தேசிய வாதிகள் பெரியதொரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்கிறார்கள். மாவட்ட அதிகாரிகளால் கூட்டத்துக்குத் தடை போடப்படுகிறது. ஆனாலும் கூட்டம் நடைபெறுகிறது. போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்கின்றனர். கந்தன் கொல்லப்படுகிறான்.

தடையோ அல்லது தடை இல்லையோ, தஞ்சை மாவட்டத்திலுள்ள எல்லா இன மக்களும் கவலைப்படாமல் கூட்டம் நடக்கும் இடத்தை நோக்கி வந்து, கூட்டத்தில் கலந்து கொள்கின்றனர் என்றும், அவர்கள் எவ்வளவு உணர்ச்சிப் பெருக்குடன் இருந்தனர் என்றும் நிகழ்ச்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்த ஒருவர் கூறுகிறார்.

மேலும் அவர், "மக்கள் உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருக்கிறார்கள். திரி பற்ற ஒரு சிறு பொறி போதும். என் வாழ்நாட்களில் எத்தனையோ கூட்டங்களைக் கண்டிருக்கிறேன். நாட்டுப்புற வெகுளித்தனத்துடன் ஆற்றல்மிக்க ஒரு கூட்டத்தினரை இப்போதுதான் பார்க்கிறேன். கூட்டத்தின் தலை வாயில்கள் போலீஸ் அரணால் மூடப்பட்டிருக்கின்றன. இருந்தாலும் மைதானத்துள் கூட்டம் பெருகிக் கொண்டிருக்கிறது. பெண்களும், சிறுவர்களும் கூட சுற்றி வளைத்து சந்து பொந்து வழியாக வந்து கூட்டத்தில் கலந்து கொள்கின்றனர். நான்மாடக்கூடம் போன்ற தரங்கம்பாடி நகரத்துள் மக்கள் குழுமுவதை யாரால்தான் தடுத்து நிறுத்த முடியும்?"

முன்னாள் ஐ.சி.எஸ். அதிகாரியான ரங்கன் பொதுக்கூட்டத்தில் பேச இருக்கிறார். கந்தனைப் போல இவரும் பதவியிலிருந்து விலகியவர்தான். அந்தப் பக்கத்தைச் சேர்ந்தவர் தனவந்தர் சொக்கலிங்க முதலியார். விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொள்ளும் ஆர்வத்தில் இவரும் தன் கவலையற்ற வாழ்க்கையையும், சுக சௌகர்யங்களையும் துறந்தவர். பொதுக் கூட்டத்தைக் கூட்டத் துணிந்தவர்களில் இவரும் ஒருவர்.

"தடியடி நடைபெற்றது. ஒரு நுனியில் பூண் போடப்பட்டிருந்த தடியின் முழுவீச்சுடன் ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை தடியடிப் பிரயோகம் நடந்தது. கூட்டம் கலையவில்லை. துப்பாக்கியால் சுட்டது போலீஸ். மழை நாட்களில் பூமியைத் துளைத்துக்கொண்டு வெறும் வெளியே சிறகடித்து ஈசல்கள் பறப்பதைப் பார்த்திருக்கிறோம். அப்படிப் பறக்கும் ஈசல்கள் போல துப்பாக்கிக் குண்டுகள் பறந்தன. விண்ணை எட்டியது கதறல்." நாவலின் முக்கிய கதாபாத்திரங்கள் அனைவரும் காயமடைந்தனர். கந்தன் களபலியானான். விரைவில் சுதந்திரம் கிட்டும் என்கிற நம்பிக்கையை உதடுகள் உச்சரிக்க,

அவன் இறக்கிறான். 'சிறு அலைகள் மேவ முடிவற்ற கடல் நீர் அவன் கண்களின் எதிரே தோன்ற' கந்தனின் மரணத்தை தழுவும் நிகழ்ச்சியை விவரிக்கும் வெங்கடரமணியின் ஆற்றல் பிரமிக்க வைப்பதாக இருக்கிறது.

இதன்பின் எவ்வித கோலாகலமும், ஆர்ப்பாட்டமும் இன்றி நாவல்முடிவை எட்டுகிறது. கடைசிக் கட்டம் நடக்கும் இடம் சென்னையில் 'ஸ்வராஜ்யா' ஏட்டின் ஆசிரியக்குழுவின் அறை. 'தரங்கம்பாடி கலக வழக்கு' நடைபெற்று, அதில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் தண்டனை பெற்ற செய்தி வருகிறது. எல்லா முக்கிய பாத்திரங்களும், மேலும் பலரும் கடுங்காவல் தண்டனை பெறுகிறார்கள். வேலூர் சிறைச்சாலையில் அடைக்கப்பட்ட பத்மநாபனின் விரக்தி மனப்பான்மை புலம்பலுடன் நாவல் முடிகிறது.

போராடும் தேச பக்தர்களின் பார்வைக்காகவே எழுதப்பட்ட நாவலின் சாராம்சம் இதுதான். நாடுகள் எங்கிலும் இலக்கியம் என்பது விடுதலைப் போராட்டங்களின் உன்னதத்தைச் சித்தரிக்க உதவுகின்றன. உதாரணமாக, ப்ரௌனிங்க்ஸ் போன்ற ஆங்கிலேயக் கவிஞர்கள் இத்தாலிய ரிஸோர்ஜிமென்டோ குறித்து வற்புறுத்தி இருக்கிறார்கள். இந்தியத் துணைக் கண்டத்திலும், தமிழ் நாட்டிலும் அக்காலங்களில் இலக்கியம் மூலமாக விடுதலைப் போராட்ட வரலாறு ஊக்கம் அளிக்கும் வகையில் வலிமையுடன் இடர்ப்பாடின்றி எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. சுப்பிரமணிய பாரதியாரின் அனல் பறக்கும் கவிதைகளும், நாமக்கல் ராமலிங்கம் அவர்களின் குரல் ஏற்ற இறக்கத்திற்கு உகந்த பாடல்களும் எழுச்சி அளித்தன. இவர்களது கவிதைகளையும், பாடல்களையும் கேட்ட துடிப்புள்ள மக்கள் தடியடிகளையும், துப்பாக்கிக் குண்டுகளையும் ஏற்கத் தயங்கவில்லை. அந்த கவிஞர்கள் அளவுக்கு வெங்கட ரமணியும் தன் நாவல் மூலம் நாட்டுப் பற்றை ஊக்குவித்து இருக்கிறார். அவரது நாவல் சாதாரணமாகப் படித்துவிட்டு ஒதுக்கக்கூடியது அல்ல. தாய் நாட்டின் விடுதலைக்கான ஆதாரங்களைத் தாங்கிய மாபெரும் அறிக்கையாக இந்த நாவல் அமைந்துள்ளது.

1932-ஆம் ஆண்டு இந்த நாவல் வெளியாகியது. காந்தியடி களின் தலைமையின் கீழ் தேசியப் போராட்டம் உச்சத்தில் இருந்த

நேரம் அது. காந்தியடிகளைக் குறித்து நாவலில் எங்கும் எதுவும் சொல்லப்படாத போதிலும் (சொல்லி இருக்கலாம்), அவரது கருத்துகள் மூலம் அவர் நாவலில் இடம் பெற்று விடுகிறார். அவரது கருத்துகளையும், விருப்பங்களையும் நாவலின் நாயகர்கள் செயல்படுத்துகிறார்கள். கந்தன் ஒரு தேசபக்தன் மட்டுமல்ல, சமூக சீர்திருத்தவாதியும்தான். குடிப்பழக்கம் ஒழிய வேண்டும் என்பதில் அவன் வெகு தீவிரமாக இருந்தான். அவனுடைய ஆதர்சத்தலைவர் சொன்னதுபோல, அரசியல் விடுதலை மட்டும் போதாது என்பது அவனுக்குத் தெரியும். சமுதாய விழிப்புணர்வும், திணித்துக் கொண்ட வேண்டாத கட்டுப்பாடுகளைக் களைந் தெரியும் திராணியும் தேசிய மறுவாழ்வுக்கு மிக அவசியம் என்பதையும் அவன் உணர்ந்திருந்தான்.

நாவலில் நிகழ்ச்சிகளும் உயிரோட்டமும் இருக்கின்றன. விடுதலைப் போராட்டத்துக்கான உற்சாகம் பக்கத்துக்குப் பக்கம் நிரம்பி வழிகிறது. தரங்கம்பாடியில் நடைபெற்ற போலீஸாரின் தடியடி, துப்பாக்கிப் பிரயோகம், கைது செய்து அச்சுறுத்தல் ஆகிய கடைசி கட்ட பலாத்காரக் காட்சிகளைத் தவிர, மற்றபடி நாவல் முழுதும் அமைதியான நிகழ்ச்சிகளே காணப்படுகின்றன. ஆண்கள், பெண்கள் என்று அனைவருடைய மனதிலும், இதயத்திலும் விடுதலைப் போருக்கான ஆவேசம் நிறைந்திருக் கிறது. அமைதிக்குப் பங்கம் விளைவிப்பதான இன்னொரு பயங்கர நிகழ்ச்சியும் கதையில் வருகிறது. ஓர் இரவில் சொக்கலிங்க முதலியாரின் தானியக் கிடங்கில் தீ வைக்கப்படுகிறது. ஆனால் இந்த நிகழ்ச்சி அவ்வப்போது கிராமங்களில் நடைபெறும் சாதாரண சச்சரவு போன்றதுதான்.

நாவலின் உயிர் நாடி என்பது நாட்டுப்பற்றுடையவர்களின் நனவோட்டம்தான். இதில் வரும் ஆண்களும், பெண்களும் பிறந்த சூழ்நிலையாலும், வளர்ந்த பின்னணியாலும் ஒருவருக்கொருவர் மிகவும் முரண்பட்டவர்கள். இந்த முரண்பாட்டைச் சிந்தித்துப் பார்த்தால்தான் புரிந்து கொள்ளமுடியும். கந்தனும், ரங்கனும் ஐ.சி.எஸ். அதிகாரிகளாக இருந்தவர்கள். வாழ்ந்து கெட்ட உள்ளூர் பிரமுகர் சொக்கலிங்க முதலியார். இளைஞர் தலைவன் என்று இன்று அழைக்கப்படுவதான பதவியில் அன்று இருந்தவர் பத்ம நாபன். மகளிரும் உள்ளனர். அம்மகளிரில் ஒருத்தி பம்பாயிலிருந்து வந்தவர். இவர்களைத் தவிர நாவலில் பண்ணையாட்கள்

வருகின்றனர். ஆக்கூர் கள்ளுக்கடையில் நடைபெறும் பேச்சு, எதிர்பார்ப்பது போல ஆவேசம் கொண்டதாகவும் ஓங்கிய குரல்களுடன் இருந்தாலும், வன்முறையைத் தூண்டுவதற்கான சூழ்நிலையை உண்டாக்குவதாக இல்லை. அஹிம்சை குறித்தும் நாவலில் எங்குமே பேசப்படவில்லை. வெங்கடரமணி படைத்துள்ள பாத்திரங்கள் போராட்ட தீரர்களானாலும், வன்முறையில் ஈடுபடும் முரடர்கள் அல்ல. இருந்தாலும் இவற்றை நாவலில் கொண்டு வரும் வண்ணமே வெங்கடரமணியின் திறமைக்குச் சான்று.

மனிதர்களின் மனப்பாங்கைக் குறித்து விரிவாகச் சொல்வதை விட, அவர்களது இயல்பைப் படமாக எடுத்துக் காட்டுவதில் வெங்கடரமணி வெற்றி பெற்றிருக்கிறார். அவர் காலத்திய மற்ற எழுத்தாளர்களைப் போல அவராலும் இயற்கைக் காட்சிகளை வர்ணித்துச் சொல்லி இருக்க முடியும். அவர் வெகுவாகப் பற்றுக் கொண்டிருந்த தஞ்சை நகரையும், காவிரிப்பட்டினக் கடற்கரை யையும் படம் வரைந்து காட்டினாற்போல வர்ணிப்பதில் வேறு எந்த ஒரு தேர்ந்த எழுத்தாளருக்கும் ஈடு கொடுப்பவர்தான். அப்படி படம் பிடித்த மாதிரி எழுதும்போது, மனிதனுக்குள் ஏற்படும் மாற்றங்களும், வளர்ச்சியும் அவருக்கு மகிழ்ச்சியை அளிப்பனவாக இல்லை. சொக்கலிங்க முதலியார் என்கிற பாத்திரத்திடம்தான் நாவல் செல்லச் செல்ல வளர்ச்சி தெரிகிறது. சுகமான வாழ்க்கையே குறிக்கோள் என்று நம்பிய இளைஞரான முதலியார் மனமாற்றம் பெற்று, உடல், பொருள், ஆவி ஆகிய அனைத்தையும் நாட்டுக்கு அர்ப்பணிக்கும் தேச பக்தராக மாறுகிறார்.

இப்படி அவர் மாறியதற்கு கந்தன் மட்டும் காரணம் அல்ல; நாடெங்கும் தீ போல பரவி வந்த தேசிய உணர்வும் காரணம். இப்படிச் சொல்லும்போது, மற்ற பாத்திரங்கள் வளர்ச்சி பெறாமல் மாற்றமின்றி இருக்கிறார்களா என்றால், இல்லை. ஆனால் முதல் பக்கத்தில் அவர்கள் எப்படி உருவகப்படுத்தப் பட்டார்களோ, அதே போலத்தான் கடைசிப் பக்கத்திலும் சொல்லப்பட்டிருக்கிறார்கள். ஆக்ரோஷமான விளைவுகள் ஏற்படும்போது அறிவுள்ள ஆண்களும் பெண்களும் வெகுவேகமாக மாறுதல் அடைகிறார்கள். சுற்றி இருப்பவர்களையும் சூழலையும் மாற்றுகிறார்கள். தன்னுடைய மனமாற்றத்தின் விளைவால்

உந்தப்பட்டு ரங்கன் உயர்ந்த உத்தியோகத்தை உதறித் தள்ளு கிறார். ஆனால் நாவலின் பிரதான பாத்திரமான கந்தனைப் பொறுத்தமட்டில், மாற்றங்கள் எதுவும் இல்லை.

தேசபக்தர்களில் மிகச் சிறந்தவராக நாவலில் சொல்லப் படுபவர் யார் என்றால், சீர்காழியிலிருந்து வரும் பத்மநாபன் தான். இவருடைய மூத்த சகோதரர் ரகு. ஆசிரியரின் இளமைக் காலத்தை ஓரளவு பிரதிபலிப்பவர் இந்த ரகு. அன்றைய அதிகார வர்க்கத்தின் உயர் பதவியான இந்தியன் சிவில் சர்வீஸ்ஸில் புக வெங்கடரமணி முயற்சிக்கவில்லை. உண்மைதான். (அவர் காலத்தில் இளைஞர்களுக்கு ஐ.சி.எஸ். பதவி என்பது பிரதான விருப்பமாக இருந்தது. இன்றையஇந்தியன் அட்மினிஸ்ட்ரேடிவ் சர்வீஸ் என்பது அந்த ஐ.சி.எஸ்.ஸின் தொடர்ச்சிதான்). அவருக்கு பத்திரிகை சம்பந்தமான திட்டங்களும், நோக்கங்களும் இருந்த காரணத்தால், அவர் அப் பெரிய பதவிக்கு ஆசைப்படவில்லை. பின்னால் அவர் சட்டத்துறையில் புகுந்தார். நாவலில் வரும் ரகு "சத்தமிடாமல் பத்திரிகைக்கு எழுதத் தொடங்கிவிடுகிறான்" என்ற வாசகத்தைக் காண்கிறோம். மேலும் "அதிர்ஷ்டவசமாக இந்தத் தொழிலுக்கு எவ்வித மூலதனமும் தேவையில்லை. பத்து பைசா மசி, வெள்ளைத் தாள்கள், பத்திரமாக அனுப்ப, திரும்பி வர எடைக்குத் தக்க தபால் கட்டணம் இவ்வளவு தான் செலவு. ரகு மூன்று டஜன் கட்டுரைகள் எழுதினான். அவனுடைய கற்பனை வளம் உச்சத்தில் இருக்கையில் எழுதப்பட்ட கட்டுரைகள் அவை. லண்டன், நியூயார்க், கலிஃபோர்னியா என்று உலகத்தின் மூலை முடுக்கெல்லாம் சென்றுவிட்டு அக்கட்டுரைகள் திரும்பின. அவற்றை உள்நாட்டுப் பத்திரிகைகளுக்கு அனுப்பிவைத்தபோது, மூன்றே மூன்று கட்டுரைகள் மட்டும் பிரசுரமாயின."

'ஜடாதரன்' என்ற ஒரு சிறுகதையை வெங்கடரமணி எழுதி இருக்கிறார். கதையில் வரும் ஜடாதரன் பாத்திரமும் ஆசிரியரின் ஒரு பகுதியைப் பிரதிபலிக்கிறது. அது மட்டுமல்ல. நம் அனைவருள்ளும் இருக்கிற எழுத்தார்வத்தையும் இந்த ஜடாதரன் பிரதிபலிக்கிறார். "ஒரு வார்த்தைக்கு ஒரு ஷில்லிங் தருகிறார்கள் என்று மிக அழகான கட்டுரையின் கையெழுத்துப் பிரதியை இரண்டு மாதங்களுக்கு முன்பாக நீல நிற சமுத்திரங்களுக்கு அப்பால் அனுப்பிவைத்தேன் ... மேலும் அச்சடித்த வார்த்தைகள்

மூலமாக வரும் புகழ். இந்த புகழ்ச்சிக்கான ஆசை என் ரத்தத்தை நஞ்சாக்கி இருக்கிறது."

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பாக வரையப்பட்ட தேசாபிமான மாணவனின் மொத்த உருவம்தான் பத்மநாபன். இளைஞர்களால் போற்றப்பட வேண்டியவர். "கலகக்காரனாகவே பிறந்தவன். மரக்கட்டையான பள்ளிப் படிப்பும், காலத்தின் தேவையும் அவனுள் சட்டென்று பற்றும்படியான ஜ்வாலையை மூட்டின." பள்ளியில் பயிலுகையில் பொதுக்கூட்டங்களுக்குத் தவறாது சென்றார். அந்த ஊர்வழியாகப் போகும் ரயிலில் எந்த ஒரு தேசத்தலைவர் சென்றாலும், இரவு பகல் பாராது ரயில் நிலையத்தில் காத்திருந்து, அத் தலைவரை சந்தித்து, மாலை போட்டு மரியாதை செய்யும் முழுநேரத் தொண்டனாக அவர் இருந்தார். ஒரு பொதுக் கூட்டத்தில் அவர் ஆங்கிலத்தில் பேச்சைத் தொடங்கி, தமிழுக்குத் தாவி, முடிவில் அரைகுறை ஹிந்திக்கு வந்தார். இருந்தாலும் பேச்சு புரியும்படியாக இருந்தது. அந்தக் கூட்டத்தின்போது அவர் பள்ளி இறுதி வகுப்புத் "தேர்வு நிலைப் பரீட்சை"யில் தோல்வி அடைந்த செய்தி வருகிறது.

நாட்டுக்கு உழைப்பதற்காக பத்மநாபன் வீட்டை விட்டு ஓட முடிவு செய்கிறார். நாவலில் இந்த கம்பீரமான பாத்திரத்தை உருவாக்கியதில் வெங்கடரமணி மிக உயர்ந்து நிற்கிறார். அவரும் பள்ளி நாட்களில் மாணவர் தலைவராக இருந்தவர்தான். நாடு தன் இயல்பில் கொந்தளித்துக் கொண்டிருக்கும் கால கட்டத்தில், எதிர்பாராத ஒரு தோல்வி ஓர் இளைஞனை பாதித்து எப்படிப் பட்ட முடிவுக்கு அவனைக் கொண்டு செல்லும் என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

பத்பநாபன் முதலில் கொள்ளிடம் ஆற்றில் முழுகிச் சாக முடிவு செய்கிறான். பிறகு ரயில் தண்டவாளங்களிடையே படுத்து, போட்மெயில் மேலேறச் சாவது என்பதாகக் தீர்மானிக்கிறான். கடைசியில் "சிலோன் போட்மெயிலைப் பிடித்து, கொழும்பு சென்று, அங்கிருந்து ஆஸ்திரேலியா போகும் கப்பல் ஒன்றில் ஏறி, நிலக்கரிக் கிடங்கில் மறைந்து கிடந்து, வெளிநாட்டில் காலம் தள்ள முடிவு மேற்கொள்கிறான். லார்ட் ரீடிங் என்று அழைக்கப்பட்ட வைஸ்ராய் தன் இளம் வயதில் கப்பலில் வேலை செய்தவர்தான். அவரைப் போல உயர்ந்து வைஸ்ராய் ஆக அவன் இந்தியா

திரும்பாவிட்டாலும், ஏராளமான செல்வங்களுடன், கல்வி கற்று உயர்ந்து, புது வாழ்க்கை அமைப்புக்கான திட்டங்களுடன் இந்திய இளைஞர்களுக்கு ஒரு முன்னோடியாகவாது திரும்புவான் அல்லவா?" உண்மையில் அப்படி எங்கும் பத்மநாபன் சென்று விடவில்லை. இந்நாட்டிலேயே இருந்தான். இருந்து கந்தன் என்கிற தேசத் தொண்டனுக்குத் தொண்டனாகச் செயல்பட்டான்.

உரம்மிக்க மற்றொரு பாத்திரம் இந்த ஆர்.எஸ். ரங்கசாமி, ஐ.சி.எஸ். என்பவர். ரங்கன் எனச் சுருக்கமாக அழைக்கப்படுபவர். நாவலில் அவர் அசாதாரண முறையில் வாசகர்களுக்கு அறிமுகப் படுத்தப்படுகிறார். தஞ்சை மாவட்டத்துக்கு அவர் மாற்றலாகிட, போட்மெயிலில் பயணம் செய்கிறார். அவருடன் நட்பு கொண்ட ராஜேஸ்வரி என்ற அம்மையாரும் பயணம் செய்தாக வேண்டும். ரங்கனிடம் முதல் வகுப்புக்கான பயணச் சீட்டு இருக்கிறது. ஆனால் ராஜேஸ்வரி மூன்றாம் வகுப்பில்தான் செல்ல வேண்டும் என்கிறாள். அன்றைய 'மூன்றாம் வகுப்பு என்பது மாட்டுக் கொட்டி போன்றது. சேறும் சகதியுமாகக் கிடக்கும். எச்சில் துப்பல் காணப்படும்' என்று அவர் சொல்லியும், ராஜேஸ்வரி மூன்றாம் வகுப்பில் பயணம் செய்ய வேண்டும் என்று பிடிவாதம் செய்கிறாள். மறுக்க முடியாமல் ரங்கன் அவளுடன் மூன்றாம் வகுப்பில் வருகிறார்.

"ரயிலில் இந்த மூன்றாம் வகுப்பு என்பது தொல்பொருள் காட்சிசாலை, மிருகக்காட்சிசாலை ஆகிய இரண்டும் கலந்த கண்காட்சி. படுக்கைகள், பெட்டிகள், பைகள் என்று அனைத்து வகைகளும் இங்கே உள்ளன. பைகளில் சாதாரண சணல் நூலால் செய்யப்பட்டவையிலிருந்து, சமீபத்தில் வாங்கப்பட்ட முதலைத் தோல் பை வரை காணலாம். அந்த முதலைத் தோல் பை அதனுடைய சொந்தக்காரரர் எந்த அளவுக்கு உயிர் இனங்களின் மீது அனுதாபம் கொண்டிருக்கிறார் என்பதைத் தெளிவாக உணர்த்துவதாகவும் இருக்கும்." ரங்கனுக்கு அந்த மூன்றாம் வகுப்பு இருக்கையில் இருப்புக் கொள்ளவில்லை. ஆனால் ராஜேஸ்வரி இமைகளை விரித்து அனைத்தையும் அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். ஒரு குழந்தையின் எளிமையான வியப்பு அது. அந்த மூன்றாம் வகுப்பின் காட்சியும், ஏழ்மையின் வெவ்வேறு அம்சங்களும் ஓர் உன்னிப்பான பார்வையாளனின் ஆர்வத்தை அவளிடம் ஊட்டின."

குப்பைத் தொட்டி போன்ற அந்த மூன்றாம் வகுப்பின் நிலை ரங்கனிடம் சித்தாந்த மனப்பான்மையை ஏற்படுத்துகிறது. "இந்த நிமிஷம், இந்தக் கணம் இந்திய நாடு பற்றியும், இதன் மக்கள் குறித்தும் என்னுள் மிக மோசமான அபிப்ராயத்தை ஏற்படுத்துகிறது. நமது புராதன காலமும், பெருமையும், நாகரிகச் சிறப்பும், அறிவாற்றலும் வெறும் சவுடாலாகவே தெரிகிறது. நம் நாட்டு மக்களை எண்ணி நான் கவலை அடைகிறேன். உலக முழுதும் நாகரிக வளர்ச்சியிலும், சுக சௌகர்யங்களிலும் மக்கள் முன்னேற்றம் பெறும்போது, நாம் முன்னேறாமல் இருக்கிறோம். கடந்த ஐம்பது ஆண்டுகால ரயில் பயணம் நம்மிடம் எந்த மாற்றத்தையும் உண்டாக்கவில்லை. எதையும் தெரிந்து கொள்ள நாம் விரும்புவது இல்லை; எதையும் மறப்பதாகவும் இல்லை. ஒரு துளி அம்சம்கூட நாம் மேம்படவில்லை. பார், இது மூட்டைகளை ஏற்றிச் செல்லும் வண்டி போல இருக்கிறது. இதில் பயணம் செய்பவர்களும் திருடர் கூட்டம்போலக் காணப்படுகிறார்கள்" என்கிறார் ரங்கன் ராஜேஸ்வரியிடம்.

போட்மெயில் எனப்படும் ரயிலும் ஒருவிதமான கதா பாத்திரமாக நாவலில் வருகிறது. பயணிகள் இதில் சென்னை யிலிருந்து ராமேஸ்வரம் சென்று, அங்கிருந்து தோணியில் ஸ்ரீலங்காவின் மன்னார் நகர் அடைந்து, கொழும்பு நகர் போக உதவுகிறது. இந்த ரயில் வண்டி ரம்மியமானது. திருச்சியிலிருக்கும் ரயில்வே தேவதைகளின் முழுமையான கடைக்கண் பார்வைக்கு உட்பட்டது. அவர்களுடைய அன்புக்கு உரியது. சுமார் இரண்டாயிரம் மைல்கள் இந்த ரயில்கள் ஓட, ஆயிரம் ஆயிரம் சக்கரங்கள் சுழல, வழிநெடுக பிரேக்குகள் கிரீச், கிரீச் என்று ஓசைகள் எழுப்ப, இவற்றில் இந்த போட்மெயிலைத்தான் அந்த ரயில்வே அதிகாரிகளும், ஊழியர்களும் சிறப்பாக மதிக்கிறார்கள்.

இந்த அதிசய ரயில் வண்டி கொள்ளிடம் ஆற்றை நெருங்கியபோது, ரங்கன் சிறிது உணர்ச்சி வசப்பட்டார். "நாம் இப்போது புகழ் பெற்ற கொள்ளிடம் ஆற்றை நெருங்கிக் கொண்டிருக்கிறோம்." என்று ராஜேஸ்வரியிடம் தெரிவித்தார். "இது காவிரி ஆற்றின் கிளை. பார், தாயை விட மகள் எந்த அளவுக்குப் பணக்காரியாகவும், வயது ஆனவளாகவும் தெரிகிறாள் என்பதைப் புரிந்து கொள்வாய்." இந்த இடத்தில் வெங்கடரமணி உற்சாகம் மிகுந்தவராகத் தெரிகிறார். நில இயல் குறித்து

அவருடைய அறிவாற்றல் வெளிப்படுகிறது. சீர்காழி அருகே கொள்ளிடம் அகண்டதாகக் காணப்பட்டாலும், காவிரியில் வெள்ளம் பெருகும்போதுதான் இந்த ஆற்றில் நீர் ஓடத் தொடங்கும். ஆனால் உணர்ச்சிப் பெருக்கத்தை ரங்கனால் தவிர்க்க முடியவில்லை. "அதோ பார், இக்கரையிலிருந்து அக்கரை வரை இந்த நிலவு பொழியும் நேரத்தில் ஒரு மைல் அகலத்துக்கு மணல் பரந்து கிடக்கும் அழகைப் பார்!" என்கிறார் ராஜேஸ்வரியிடம்.

ஓர் அரை நூற்றாண்டுக்கு முன்பாக ரயில்களின் பயனையும், அவற்றால் ஏற்பட்ட சமுதாய மாற்றத்தையும் உணர்ந்த நாட்டு மக்கள், இதனால் ரயில்கள் பெற்ற மதிப்பையும் மரியாதையையும் எந்த அளவு உணர்ந்து உவகை கொண்டார்கள் என்பதை இப்போது சொல்வது கடினம். இந்தக் காலத்திய போயிங் விமானத்துக்கும், விண்வெளிக்கலமான 'டிஸ்கவரி'க்கும் கிட்டியுள்ள மதிப்பு அக்காலத்தில் ரயில்களுக்கும் கிடைத்தன. மக்கள் மத்தியில் அவற்றுக்கு வெகுவாக மகிமை இருந்தது. அந்த ரயில்களில் ஒன்று இந்த போட்மெயில். இந்த மெயில் கடந்து செல்லும் ஊர்களை விட்டுத் தள்ளி இருக்கும் கிளை நிலையங்களில் நிற்கும் பாஸஞ்சர் ரயில்கள் கூட அன்றைக்கு அதிசயமாகத்தான் கருதப்பட்டன. கிராமத்தில் பிறந்து வளர்ந்தவரான வெங்கடரமணியும், ரயில்களின் பெருமையை உணர்ந்து இருந்தார். அதனால்தான் ஒதுக்குப்புறமாக இருந்த ஆக்கூர் ரயில் நிலையத்தையும் அவரால் அழகாகப் படம் பிடித்துக் காட்ட முடிகிறது.

"புது மாதிரியாக நிர்மாணிக்கப்பட்ட ஆக்கூரின் இந்த ரயில் நிலையம் மிக அழகானது. அடர்ந்த தோப்பு நிழலில் ஒரு மாமரக் கிளையில் பறவை ஒன்று அமர்ந்து இருக்கும் ரீதியில், வளைந்து வரும் இந்த தண்டவாளங்களின் அருகே சிறிய இத நிலையம் அமைந்திருக்கிறது. சுற்றுப்புறம் செழிப்பான நிலம். அருகில் கடல் இருந்தாலும், செடிகளும், கொடிகளும், மரங்களும் செழுமையாக வளர்ந்து பசேலென காணப்படுகின்றன. வானை அளக்கும் கம்பீர மான தென்னை மரங்கள். பசுமையான, சாலை ஓர ராட்சஸ புளிய மரங்கள். கிளைகள் விரித்து படர்ந்து வளர்ந்துள்ள மாமரங்கள். இம்மரங்கள் சூரிய ஒளியை நிலத்தில் விழவொட்டாமல் செய்து, நிழல் தருகின்றன. ஆக்கூரில் வாழ்க்கையைக் கழிப்பது என்பது இனிமையானது.நீண்டு, பாம்பு போல வளைந்து வரும் இந்த ரயில்

பாதை இவ்வூருக்கு புது மெருகைத் தருகிறது." (ஆக்கூரில் இப்போதும் ரயில் நிலையம் உள்ளது. ஆனால் சமீபத்தில்தான் அது 'நிற்கும் இடம்' ஆக ஆகி இருக்கிறது)

வெங்கடரமணியின் நாவல் பரிணாம வளர்ச்சி பெற இந்த ஆக்கூர் என்ற ஊரும் வெகுவாக உதவுகிறது. மதுபானம் அருந்திவிட்டு வேலைக்கு வரும் பாயின்ட்ஸ் மன்னுடைய கவனக் குறைவால் இவ்வூர் ரயில் நிலையத்தில் இரு ரயில்கள் மோதிக் கொள்கின்றன.

கதையின் உச்ச கட்டத்தை தரங்கம்பாடியில் நடத்திக் காட்ட வெங்கடரமணி தன் திறன் முழுதையும் பயன்படுத்தி இருக்கிறார். தேசியவாதிகள், அரசாங்க அடக்குமுறை சக்திகள் ஆகிய இரு எதிர் அணியினர் இந்த உச்சகட்டத்தை உருவாக்க உதவு கிறார்கள். ஒற்றர்களும், கலகத்தைத் தூண்டும் கைப்பாவைகளும் கதையில் வருகிறார்கள்.

கதையில் கருத்துத்தான் முக்கியம் எனக் கருதுபவர் வெங்கடரமணி. இருந்தாலும் அவருக்கும் நகைச்சுவை உணர்வு உண்டு. சட்டம் ஒழுங்கை பராமரிப்பவர்கள் கான்பஹதூர்கள், ராவ் பஹதூர்கள் ஆகியோரிடம் இந்த நகைச்சுவை உணர்வை லேசாகக் காட்டுகிறார். இந்த வகையில் "எஸ்.வி.வி" என்ற எழுத்தாளர் திறன்படவே நகைச்சுவையைக் கையாண்டிருக் கிறார். என்றாலும், நகைச்சுவை உணர்வை முழுமையாக வளர்த்துக் கொள்ளாத வெங்கடரமணி தன் எழுத்துக்களில் வாசகர்களைக் கொஞ்சம் சிரிக்க வைக்க முயன்றிருக்கிறார்.

தரங்கம்பாடியில் நடந்த துப்பாக்கிச் சூட்டுடன் கதை முடிவடையவில்லை. இந்த ஊரில்தான் கந்தன் கொல்லப் படுகிறான். மற்றவர் மீது சதி வழக்குக் குற்றம் சுமத்தப்படுகிறது. இந்த விவரம் கதையை உச்சகட்டத்திலிருந்து கீழிறக்கி விடுகிறது. இருந்தாலும் முந்நாள் ஐ.சி.எஸ். அதிகாரி ஒருவர் வழக்கில் சம்பந்தப்பட்டு, அவர் கடுங்காவல் தண்டனை பெறும் சமாசாரம் நாவல் உலகில் புதிது. 'ஓம் சாந்தி' என்று வேத ஆகமங்களில் உலக அமைதி குறித்துச் சொல்லப்படும் தத்துவார்த்த முடிவை ஆசிரியர் ஏற்றுக் கொள்கிறார். கண்ணன் உபதேசித்த கீதையில் கூறப்படும் இந்த அமைதி எல்லையை அறிவாளிகள் உணர்ந்திருக்கிறார்கள்.

"இந்த பூமியில் நமது பொறுப்பு என்னவெனில், கடமையை செம்மையாகச் செய்வதுதான். அறக் கோட்பாடுகளின்படி அக்கடமைகளை நான் சீராக ஆற்றியாக வேண்டும்." இதுதான் நாவலின் உண்மையான உச்சகட்ட நிலை. ஏனெனில் இங்கு கதை ஒரு சித்தாந்தத்தைத் தொடுகிறது. தேசியப் போரில் ஈடுபடும் கந்தன் என்ற தேசபக்தனும், அவனுடைய கூட்டாளிகளும் இவ்விதமானதொரு சித்தாந்தப் பாதைக்கு கதையின் முடிவைக் கொண்டு செல்கிறார்கள்.

ஆசிரியராக இருந்து அவரே கதையைச் சொல்லாமல் நாவலை அதன் போக்கில் விட்டு கதையைத் தானே அமைத்துக் கொள்வதில் வெங்கடரமணி கருத்து கொண்டிருக்கிறார். படிப் பினை எதையும் அவர் சொல்லவில்லை. அதேபோல கதா பாத்திரங்களையும் உபதேசம் செய்யவைக்கவில்லை. அவருடைய குறிகோள் வெளித் தெரியும்படியாகவே இருக்கிறது. அவர் ஒரு தேசியவாதி. நற்குணம் அனைத்தும் சேர்ந்த கோபுரங்களாக தேசியவாதிகளைச் சித்தரிக்க அவர் முனைந்திருக்கிறார். ஆனால் ஒரு கலை, அது அடக்கத்துடன், வெளியே காட்டிக் கொள்ளாத போதுதான் கலை என்ற பரிணாமம் பெறுகிறது. வெங்கடரமணி இதை உணர்ந்திருக்கிறார். 1927ஆம் ஆண்டுவெளிவந்த அவரு டைய 'முருகன் ஓர் உழவன்' என்ற நாவலில் பெற்ற அனுபவம் காரணமாக இப்படி கலாபூர்வமான எழுத்து அவருக்குக் கைவந்திருக்கலாம்.

சில சிறுகதைகளையும் வெங்கடரமணி எழுதி இருக்கிறார். 'ஜடாதரன்' என்ற பெயரில் இச் சிறுகதைகளின் தொகுதி வெளிவந்திருக்கிறது. ஜடாதரன் என்னும் சிறுகதை 1939ஆம் ஆண்டு வெளிவந்தது. அவர் எழுதிய வேறு சிறுகதைகள் அதற்கு முன்பாகவே வெளிவந்திருக்கின்றன. இக் கதைகள் சிலவற்றில் அனுபவமின்மை தெளிவாகத் தெரிகிறது. இப்படியான சிறு கதைகள் இருப்பது பல வாசகர்களுக்குத் தெரியாது போகலாம். இந்த சிறுகதைகளில் சில ஆசிரியரின் இரண்டு நாவல்களும் வெளியாவதற்கு முன்பே எழுதப்பட்டவை. அந்தக் கதைகளை நாவல்களின் சில உதிரி அத்தியாயங்கள் என வாசகர்கள் கருத இடம் உண்டு. சொல்வதானால் 'மோதல்' (கொலிஷன்) என்னும் சிறுகதை வெகுவாக 'தேச பக்தன் கந்தன்' நாவலில் வரும் ஓர் அத்தியாயத்தைப் போலவே இருக்கிறது. இக் கதையில்

ஒதுக்குப்புறமான ஒரு நிலையத்தில் இரு ரயில் வண்டிகள் மோதிக் கொள்கின்றன. இத்தகைய மோதல் குடித்துவிட்டு வேலைக்கு வந்த ஒரு பாயின்ட்ஸ் மன்னால் நிகழ்கிறது.

ஆனால் நாவலில் சம்பந்தப்பட்ட அத்தியாயத்துக்கும், சிறுகதைக்கும் வேறுபாடு இருக்கிறது. நாவலில் சுந்தரம் என்ற ஸ்டேஷன் மாஸ்டர் விபத்துக்குப் பிறகு வேலை நீக்கம் செய்யப் படுகிறார். வேலை நீக்கம் செய்யப்பட்ட ஸ்டேஷன் மாஸ்டர் தேசத் தொண்டராகிறார். சிறு கதையில் வரும் ராமானுஜம் என்ற ஸ்டேஷன் மாஸ்டர் பள்ளி ஆசிரியராகிறார். இருவருமே தங்கள் தங்கள் புதுப்பணியில் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

இந்தக் கதைகள் வெங்கடரமணியின் இலக்கிய மனப் பாங்கையும், திறமையையும் தெளிவாக வெளிப்படுத்துகின்றன. தெளிந்த சிந்தனையுள்ள மனிதர் அவர். தேசிய விழிப்புணர்வும், கிராம மறுமலர்ச்சியும் அவரது இரு குறிக்கோள்கள். தேசிய மணம் காற்றில் கமழ்ந்து கொண்டிருந்த நேரம் அது. அந்த சமயம் அவர் பள்ளியிலும் கல்லூரியிலும் படித்துக் கொண்டிருந்தார். கிராமத்தின் சுற்றுப் புறங்கள், சூழ்நிலைகள், அவற்றின் ஒழுக்கம் வாழ்க்கையை எப்படி அர்த்தமுள்ளதாக ஆக்குகின்றன என்பதை உணர்த்தின. அவருடைய சிறு சிறு கருத்துச் சிந்தனைகள் சிறு வயதிலேயே அவரிடம் தோன்றியவை. இளைஞனாக அவர் வளர்ந்த சமயம் சிந்தனையில் வசப்பட்ட கருக்கள் அவருடைய கற்பனையை வயப்படுத்திக் கொண்டன. உண்மையில் இந்த சிந்தனைக் கருக்கள் அவரை ஆட்டிப் படைத்தன எனச் சொல்ல லாம். இக் கருக்களைக் கொண்டு அவர் சிறுகதைகள் எழுதி அவை பிரசுரிக்கப்பட்டு வெளிவந்தபோது, வெங்கடரமணி என்கிற ஆசிரியர் முழுமையாக உருவானார். சொல்வதானால், வரும் ஆண்டுகளில் அவரிடம் வளர்ச்சி இருந்திருக்கவில்லை அவருடைய இயல்பையும், அவரைச் சுற்றி இருந்த மற்றவர்களின் இயல்பு களைப் புரிந்து கொள்ளும் அவரது திறனையும் எண்ணிப் பார்த்து, அவருக்கு இருந்த நோய்த் தொல்லையால் அவருடைய கற்பனைத் திறன் பாதிக்கப்படும் என எதிர்பார்த்தவர்களுக்கு, அப்படி எதுவும் நேராதது அதிசயமான சமாசாரம். அவருடைய கதைகளிலும் உடல் ஊனத்தாலோ, மற்ற உபாதைகளாலோ இன்னலுறுபவர் குறித்து விவரங்கள் கிடையாது. க்ஷய நோயால் அவர் அவதிப்பட்டார். அக் காலத்தில் அந்நோய்க்கான

சிறப்பான மருத்துவம் இல்லை. ஒரு சிடுசிடுப்பு, அலட்டல் இன்றி அவர் நிமிர்ந்து நின்று தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார். அவருடைய சிறுகதைகளை வெறும் கதைகளாக எடுத்துக் கொள்ள முடியாது. அவைவாழ்க்கைச் சித்திரங்கள். அவருடைய அனுபவங்களின் படப்பிடிப்புகள். அக் கதைகளில் நிகழ்ச்சிகள் அதிகம் இல்லைதான். இளம் வயதில் அவர் படைத்த அந்தப் பாத்திரங்கள் சாதாரண மனிதர்கள் அல்ல; குணவிசேஷம் கொண்டவர்கள்; சிறந்த இயல்பினர்.

அன்றைய 'சென்னை மாகாண அரசாங்கத்தின் உப்பு, மதுபான வரித்துறையில் சப்-இன்ஸ்பெக்டர் ஆகப் பணிபுரிந்த சி.சுப்பிரமணிய சாஸ்திரி என்ற பாத்திரத்தை எடுத்துக் கொள் வோம். ஓர் ஐந்து ஆண்டுகாலம் கடப்பா, கர்நூல் ஆகிய மலேரிய நோய் பரவிய மாவட்டங்களில் 'தண்டனையாகப் பணியாற்றிய பிறகு செழிப்பான ஆரணிப் பகுதியின் சாலவேடு ரேஞ்சுக்கு இந்த சுப்பிரமணியம் மாற்றப்படுகிறார். "சிம்மக்குரலோன் அவர். ஒரு சட்ட நிபுணராக ஆவதற்கு அந்த ஒரு தகுதியே போதும் என வெகுவாக அவர் நம்பி இருந்தார்" ஆனால் பி.ஏ. முதல் ஆண்டுத் தேர்விலேயே அவர் தோல்வி கண்டதால், பி.ஏ.பி.எல். பட்டம் பெறுவது என்பது கானல் நீராயிற்று.

பனைமரங்கள் நிறைந்த இடம் சாலவேடு. "கிராமணிகள் இப் பனை மரங்களிலிருந்து கள் இறக்குவார்கள். ஒரு மரத்துக்கு ரூபாய் மூன்று என்று அரசாங்கத்துக்கு அவர்கள் குத்தகை தந்தாக வேண்டும். சப்-இன்ஸ்பெக்டருக்கு ஓர் அணா கப்பம். அதில் அவருடைய ஆறு சேவகர்களுக்கும் கால் பங்கு உரிமை. கட்டெறும்புகள் ஒரு ரொட்டித் துண்டின் மென்மையான பகுதியை எப்படித் துளைத்துத் தின்று விடுகின்றனவோ, அதே போல இந்த சேவகர்கள் கள் இறக்கும் கிராமணிகளின் உள்ளத்தைத் துளைத்து நொந்துபோகும்படி செய்து விடுகிறார்கள்.

ஆனால் இந்த சுப்பிரமணியம் ஊழல் பேர்வழி அல்ல. அவருடைய அடங்காப்பிடாரியான மனைவிதான் லஞ்சம் வாங்கும்படி அவரைத் தூண்டிக் கொண்டே இருப்பவள். ஒரு சமயம் இந்தத் துறையின் உதவி ஆணையருக்கு அவருடைய 'காம்ப் கிளார்க்' மூலமாக நெய் டின்கள் அனுப்பாமல் இருந்து

விட்டார். அப்படி நெய் டின்களை அனுப்பி இருந்தால், அவர் ஏராளமாகப் பணம் பண்ணி இருக்க முடியும். அந்தப் பணத்தைக் கொண்டு மகளின் திருமணத்தை முடித்திருக்கலாம். ஆனால் சமூகத்தின் குற்றச் சாட்டுக்கு ஆளாக நேரிடும் என்பதற்காக அவர் மகளின் 'பால்ய விவாகத்துக்கு' இணங்கவில்லை.

இருந்தாலும், அடங்காப்பிடாரியான மனைவியின் ஆதிக்கத்தில் அவர் இருந்த காரணத்தால், மாப்பிள்ளையைத் தேடிச் செல்கிறார். வெங்கடரமணிக்கு சோதிடத்தில் விருப்பம் உண்டு. ஆனால் கதையில் சோதிடம் குறித்து அவருடைய வார்த்தைகள் மிக வேடிக்கையானவை. இதிலிருந்து சோதிடத்தை அவர் முழுமையாக நம்பவில்லை எனத் தெரிகிறது. "ஒரே பலனை இரு சோதிடர்கள் சொல்வதில்லை. சோதிடத்துக்கே உரிய புரிபடாத பல சொற்களை வானில் இருக்கும் அத்தனை நட்சத்திரங்களும் பேசும்போது, இரு சோதிடர்கள் எப்படி ஒத்துப் போக முடியும்? கேவலம், தன் வயிற்றால் ஊர்ந்து நகரும் ஏழை மனிதப் புழுவுக்கு எந்த ஒரு நட்சத்திரமும் தன்னுடைய அந்தரங்கமான கதையைச் சொல்லத் தயாராக இல்லை."

முடிவில், மாப்பிள்ளை தேடும் படலத்தில் சுப்பிரமணியம் தோல்வி அடைகிறார். இந்த அவருடைய தோல்வி அவருடைய சகோதரருக்கும், சகோதரரின் மனைவிக்கும் மனக் களிப்பைத் தருகிறது. இன்னல்களுக்கெல்லாம் முடிசூடுவது போல, மாற்றல் உத்திரவு வருகிறது. "மலேரியா நோய் பரவிய ஊர் அது. கொல்லும் கொசுக்களின் உற்பத்தி இடம். சென்னை அரசாங் கத்தின் உப்புமதுபான, கலால் துறையில் பணிபுரியும் சப்-இன்ஸ் பெக்டர்கள் வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு, நாட்களை எங்கே கழித்தால் என்ன என்ற விரக்தியுடன் இருந்தாலும், கொசுக்களின் சுவர்க்கமான அந்த ஊரின் பெயரைக் கேட்டதும் உடலிலுள்ள முதுகுத் தண்டு சில்லிட்டுப் போவார்கள்."

இன்று படித்துப் பார்க்கும்போது, வெங்கடரமணியின் இன்னொரு சிறுகதையான 'முறிந்த கை' (எஃப்ராக்ச்சர்டு ஆர்ம்) விநோதமானதாக இருக்கிறது. இக்கதை ஒரு கிராமப்பள்ளியின் ஆசிரியர் பற்றியது. ஆசிரியருக்கு ஏற்படும் மனமாற்றத்தை தெரிவிப்பதாக உள்ளது கதை. வெங்கடரமணியின் மற்ற பாத்திரங்களைப் போல, கிருஷ்ணசாமிக்கும் ஐ.சி.எஸ். பரீட்சை

தேறி, பெரிய பதவி வகிக்க வேண்டும் என்பது ஆசை. ஆனால், இன்டர்மீடியட் வகுப்பில் தேர்ச்சி பெறுவதற்கு முன்பாகவே, இவருக்குத் திருமணம் நடைபெற்று விடுகிறது. திருமணம் அவருடைய எதிர்கால நம்பிக்கையை நொறுக்கிவிடுகிறது.

ஒரு தொடக்கப் பள்ளியின் ஆசிரியராகப் பொறுப்பேற்று, மாதம் பனிரெண்டு ரூபாய் பெற்றுக்கொண்டு அமர்கிறார் கிருஷ்ணசாமி. மாமியாருக்கு மாமியாரின் சுடுசொற்களைக் கேட்டு, வருந்தியபடி இருக்கிறாள் அவருடைய இளம் மனைவி. வகுப்பில் கண்டிப்புக்குப் பேர் போனவர் அவர். அதனால் மாணவர்கள் கிளர்ச்சி செய்கின்றனர். வேலை போகிறது. சென்னையில் ஓர் அதிகாரியிடம் கார் டிரைவராக வேலை பார்க்கிறார். சாலை விபத்து நேரிடுகிறது. அவருடைய கை எலும்பு முறிவடைகிறது. குணம் அடைய படுத்துக் கிடக்கும் போது, மனைவி கொடுமைக்கு ஆளான நிகழ்ச்சிகள் கவனத்துக்கு வருகின்றன. மனைவி மீது பச்சாதாபம், இரக்கம் பிறக்கிறது. மீண்டும் கிராமத்துக்குச் செல்ல முடிவு செய்கிறார். அங்கே பள்ளி ஆசிரியராக வெற்றிகரமான வாழ்க்கை தொடங்குகிறது.

'ஒளிப்பிழம்பு' (இல்யூமினேஷன்) என்ற கதையில் காவிரி ஆற்றின் கரைகளைவிட்டு சற்று வெளியேறி உலாவுகிறார் வெங்கடரமணி. உலாவும் ஸ்தலம் சென்னையில் மைலாப்பூர். சுந்தரம் ஓர் இளம் சட்ட அறிஞர். அவர் மைலாப்பூரில் வசித்தபடி வளமையான வாழ்வைக் கனவு காண்கிறார். இந்தக் கதையில் நிகழ்ச்சிகள் எதுவும் சிறப்பாக இல்லை. கதையின் தொடக்கத்தில், தன்னிடம் ஏராளமான வழக்குகள் வர வேண்டும் என்று சுந்தரம் எதிர்பார்க்கிறார். கதை முடிவிலும் வழக்குகளை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார். எதையுமே தத்துவார்த்தமாக எடுத்துக் கொள் பவர் அவர். அவரைப் போலவே அவரது மனைவி சுந்தரியும் குணவதி. எதையும் சீர்தூக்கிப் பார்த்து ஏற்பவள். இருப்பதைக் கொண்டு நிறைவு பெறுபவள். இளம் வயதில் வெங்கடரமணி மைலாப்பூரில் வாழ்ந்த காலத்தில் அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த வற்றைக் கதை பிரதிபலிக்கிறது என்று கொள்ளலாம்.

வெங்கடரமணியின் இன்னொரு பகுதியை ஒரு கதை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. ஜடாதரன் என்பது கதை

தலைப்பு. இத்தலைப்பே சிறுகதைத் தொகுதிக்கும் தரப் பட்டிருக்கிறது.

ஜடாதரன் திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர். அதாவது, ஆசிரியரின் வீட்டு வாயில் திண்ணைதான் கிராமத்தில் சிறுவர்கள் படிக்கும் பள்ளி. ஜடாதரனின் பாட்டனார் வயதான ஒரு தீவிர சோதிடர். தன் சோதிடத்தின் தீய பலன்கள் கண்டு தானே பயப்படுபவர். "பிருஹத் ஜாதகத்தை மனப்பாடம் பண்ணிவிட்டு, சோதிடத்தை அவர் முழுநேரத் தொழிலாகக் கொண்டிருந்த காலத்தில் அவருடைய புகழ் நாலா பக்கமும் பரவியது. நல்ல நாள், சுபமுகூர்த்தம்ஆகியவற்றைக் குறித்துக் கொடுத்து, நல்ல பெயர் வாங்கினார். ஆனால் அவர் ஜாதகங்களைக் கணித்து, தீய பலன்களைச் சொல்லும் போது, அவை மக்களை அச்சுறுத்தின."

ஜடாதரன் பிறந்தான். பேரன் பிறந்த வேளையைக் கணித்து, பாட்டனார் ஆரூடம் பார்த்தார். லக்னங்களும், ராசிகளும், கிரகங்களும் மோசமான பலன்களைச் சொல்லின. விதியை யாரால் வெல்ல முடியும்? குழந்தை பிறந்த பதினொன்றாம் நாள் ஹோமம் வளர்த்து, மந்திரங்களை உச்சரித்தபோது, சோதிடர் மரணம் அடைகிறார்.

குழந்தை ஜடாதரன் வளர்கிறான். படித்து பட்டம் பெறுகிறான். எத்தகைய பட்டங்கள்! மூன்று பாடங்களில் முதல் வகுப்பு. ஆங்கிலத்திலும், கணக்கிலும் மாகாணத்திலேயே முதல் மாணவனாகத் தேர்ச்சி பெறுகிறான். "சென்னை அரசாங்கத்தின் செயலகத்தில் நல்லதொரு வேலை கிடைக்கிறது." ஆனால் அவன் அதை உதறித் தள்ளுகிறான். ஐம்பது ஆண்டுகாலம் திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியராகப் பணியாற்றிய பிறகு, சந்நியாசி ஆகி, இறக்கிறான்.

அதே கதையில் இன்னொரு நிகழ்ச்சி. ஜடாதரன் பள்ளியில் படிக்கும் போதே, அவனுக்குத் திருமணம் முடிக்க அவனுடைய தாய் விரும்புகிறாள். அவன் ஒப்பவில்லை. திருமணம் நிச்சயிக்க நாள் குறித்த போது, அந்த நன்னாளில் அவன் திண்ணைப் பள்ளிக் கூடத்தைத் தொடங்குகிறான். பள்ளியில் படிக்கும் மாணவர்களின் அன்புக்கும் பாத்திரமாகிறான், இரண்டு தலைமுறைகள்

அவனுடைய ஆசிரியப் பணி தொடர்வதாக நமக்குத் தெரிய வருகிறது.

இச் சிறுகதைகளில் அதிகமாக கதைக்கான சம்பவங்கள் இல்லை. இங்கே பல கதைகளைப் பற்றி நான் விவரம் கொடுக்க வில்லை. சொல்லப் போனால், இக்கதைகள் சிறுகதை என்னும் இலக்கணத்துள் அடங்குவதாகவும் இல்லை. சிறுகதை என்றால் நிகழ்ச்சிகள் இருக்கும். பாத்திரங்கள் வடிவம் பெறுவார்கள். வெங்கடரமணியின் சிறு கதைகள் தரும் மன நிறைவு தனித்தன்மை வாய்ந்தது. சூழ்நிலையை விவரித்துக் கண்கள் முன்னே எழச் செய்வது போன்ற பிரமையை அவை உண்டாக்குகின்றன. பாத்திரங்களும் மறக்க இயலாதபடி ஆகிவிடுகிறார்கள். கலால் துறை சப்-இன்ஸ்பெக்டரைத் தவிர, நிலங்கள் பலவற்றுக்கு உரிமை யாளரான பண்ணையார் வருகிறார். "அவருடைய பெருமை எல்லாம் தன் தமிழ் கையெழுத்தை ஆங்கில கையெழுத்தாக எடுத்துக் கொள்கிறார்கள் என்பதுதான்.".

இந்த நூலின் பக்கங்களின் ஊடே காவிரித்தாய் பெருகி ஓடுகிறாள். 'ஒளிப்பிழம்பு' என்ற கதையைத் தவிர, மற்ற கதைகள் அனைத்திலும் காட்சிகள் காவிரிப் படுகைகளில் தான் விரிகின்றன. அந்தக் காட்சிகளை விட்டு தன் இரு நாவல்களிலும் வெங்கடரமணி விலகவே இல்லை. பரமத்தி, ஆக்கூர், காகலானி அல்லது பெயர் குறிப்பிடப்படாத ஏதோ ஒரு சிறு கிராமம் என கதைகளில் வருமே தவிர, இவை யாவும் காவிரி ஆற்றை ஒட்டிய பிரதேசங்கள்தான். காட்சிகளைத் திரும்பத் திரும்ப வெங்கட ரமணி விவரிக்கும்போது, அந்தப் பகுதியில் வாழ்ந்தவர்களுக்கும், இன்று வசிப்பவர்களுக்கும் காட்சிகள் அறிமுகமானவையாக இருக்கின்றன. நாவல்களில் காணும் காவிரி ஆற்றின் பிரத்யட்சம் சிறு கதைகளிலும் காணப்படுகிறது.

# 5

## தமிழ் எழுத்தாளர்

வெங்கடரமணி ஆங்கிலத்தின்தான் தமது பெரும் பான்மையான கதை, கட்டுரைகளை எழுதினார். இருந்தாலும் அவரைவிட மேலான இந்திய மக்களுக்கு என்று எழுதிய எழுத்தாளர் இல்லை. இந்திய பண்பாட்டுச் சிந்தனைகளே அவரிடம் வேர்விட்டிருந்தன. அவருடைய காலத்தில் சிந்திக்கத் தெரிந்த பாரத நாட்டு இளைஞர்கள் தங்களுடைய சிந்தனை முழுவதையும் கொட்டி எழுதுவதற்கு ஆதாரமான ஆங்கில மொழியையே தேர்ந்தெடுத்தனர். தாய்மொழியில் அவர்கள் எழுதி இருப்பார்களாகில், அந்த எழுத்து குறுகிய வட்டத்துக்குள்ளாகவே இருந்திருக்கும். ஆங்கிலத்தில் எழுதியதால், அவர்களுடைய கருத்துகள் பரந்த அளவில் வாசகர்களை அடைந்தன. இவ்விதம் ஆங்கில மொழியைக் கைக்கொண்டதால், அவர்களுடைய தேசிய உணர்வு மழுங்கிவிட்டதாகவோ, அவர்கள் இந்தியர் என்ற பெருமையை இழந்து விட்டதாகவோ, நாட்டின் கலாச்சாரத்தைப் பேணாதவராகவோ ஆகிவிடாது.

தாய் நாட்டின் மீது மிகுந்த பற்றுடையவராக வெங்கடரமணி இருந்தார். அதனால், எழுதுவதே சிறப்பான தொழில் என்று ஏற்றுக் கொண்ட பிறகு, தாய்மொழி மீது பாசம் மிகுந்து தமிழிலும் அவர் எழுதத் தொடங்கினார். 1922ஆம் ஆண்டில் அவர் ஆசிரியராக இருந்து நடத்திய 'தமிழ் உலகு' என்னும் பத்திரிகை இரண்டு ஆண்டுகாலம் தொடர்ந்து வெளிவந்தது.

பின்பு 1938இல் வேறொரு தமிழ் பத்திரிகையைத் தொடங்கி நடத்தினார். 'பாரத மணி' என்ற பெயர் கொண்ட இந்த ஏடு அவருக்கும், தனக்கும் தமிழ் பத்திரிகை உலகில் அழியாத வரலாற்றுப் புகழைத் தேடிக் கொண்டது.

அவ்விதம் ஒரு புது வாரப் பத்திரிகையைத் தொடங்கு வதற்கான உடல் ஆரோக்கியமோ, பொருளாதார வசதியோ

வெங்கடரமணிக்கு அன்று இல்லை. ஆனால் சிந்திக்கத் தெரிந்த அறிவாளியாக இருந்த காரணத்தால், மனச்சோர்வு நிரம்ப இருந்தாலும், துன்பங்களையும், துயரங்களையும், இன்னல் களையும், இடர்பாடுகளையும் எதிர்த்து நம்பிக்கையுடன் போராட வேண்டும் என்ற மன உறுதி அவரிடம் வலிமையுடன் இருந்தது. 'சொல்வதற்கு நிறைய சமாசாரங்கள் இருக்கின்றன' என்ற வேகமே அவரைப் பத்திரிகை தொடங்க வைத்தது எனலாம். தொடர்ந்து அது சில ஆண்டுகள் வெளிவந்தது. பின் நின்றது. பத்திரிகை ஆசிரியரான வெங்கடரமணிக்கு அது ஒரு துயரமான நிகழ்ச்சிதான்.

நீதிமன்றத்தை விட்டு ஒரு பத்து ஆண்டுகள் 'மார்க் கண்டேயா' என்ற பெயரில் ஓர் ஆசிரமம் நடத்தியதாக எழுதி இருக்கிறார். இந்த ஆசிரமம் அவருடைய பற்றுக்கு வெகுவாக உரிய காவிரி ஆற்றின் கரையிலுள்ள திருக்கடையூர் என்ற புண்ணிய ஸ்தலத்தில் அமைக்கப்பட்டது. 'ஸ்வேதாரண்யா' என்ற பெயரில் இன்னொரு ஆசிரமத்தையும் பண்பாட்டு மறு மலர்ச்சிக்காகத் தொடங்கினார்.

'பாரத மணி' தொடங்கப்பட்டபோது, அவருடைய நண்பர்கள் தடுத்தனர். நண்பர்களில் எழுத்தாளர்களாக இருந்த சிலர் தங்களது ஆதரவையும் தெரிவித்தனர். ஆனால் அவர்கள் அனைவருமே, பொருளாதார ரீதியில் நிலைமையை வெங்கட ரமணியால் தாங்க முடியாது என்ற கருத்தை வெளிப்படையாகச் சொன்னார்கள். ஆயினும் அவர் தன் முயற்சியில் விடாப்பிடியாக இருந்தார். 'முயற்சி மெய் வருத்தக் கூலி தரும்' என நம்பினார்.

பத்திரிகை உலகில் 'பாரத மணி' பெயர் எடுக்க சில காலம் ஆகியது. இப்போதுபோல அத்தனை பத்திரிகைகள் அக் காலத்தில் இல்லை. 'பாரத மணி' நூதனமான ஏடு. இப்படியான தொரு பத்திரிகையை, கொள்கைப்பிடிப்புள்ள, இந்தியப் பண்பாட்டில் தீவிர நம்பிக்கையுள்ள ஒருவரால்தான் திறன்பட நடத்தமுடியும். பத்திரிகையின் முகப்பை கிராமப்புற காட்சிப் படங்கள் அலங்கரித்தன. தாகூர் போன்ற எழுத்தாளர்கள், ஜவஹர்லால் நேரு போன்ற தலைவர்கள் ஆகியோரின் படங்களும் முகப்பில் வெளிவந்தன. கையில் எடுத்துப் பிரிக்கத் தொடங்கு வதற்கு முன்பாக, இதோ ஒரு பத்திரிகை, இந்திய நாட்டின்

கலைகளை, பண்பாட்டை, இலக்கியத்தை உள்ளடக்கமாகக் கொண்டு வெளிவருகிறது என்ற பெருமிதமான எண்ணத்தை வாசகர்களிடம் தோற்றுவித்தது.

பல நல்ல, எழுத்தாளர்கள், படிப்பாளிகள், கல்விமான்கள் 'பாரத மணி'யில் எழுதினர். ஊக்கம் மிகுந்த ஓர் பத்திரிகை ஆசிரியரை ஆதரித்து, அவருடைய பத்திரிகைக்கு எழுதுவதை கர்மயோகமாகக் கருதி உதவினார்கள். அறிவு இயல் கட்டுரைகளைத் தமிழில் தர வேண்டும் என்ற ஆர்வமுடைய பெ.நா. அப்புசாமி, பண்டைய இலக்கியங்களில் ஆழ்ந்த பரிச்சய முள்ள 'பி.ஸ்ரீ. (ஸ்ரீநிவாசாச்சாரியார்) ஆகியோர் நிறையவே எழுதினர். . எழுத்தாளர்கள் என்று பெயர் பெற்றிருக்காவிடினும், தாங்கள் சம்பந்தப்பட்ட தொழில், கற்றுத் தேர்ந்த பொருள் ஆகியவை குறித்து அறிஞர்களின் கட்டுரைகள் வெளிவந்தன. மருத்துவம்பற்றி அந்நாளில் பிரசித்தமாக இருந்த டாக்டர் ஒருவர் எழுதினார். சர்க்கரை தயாரிக்கும் தொழில் குறித்து விவசாயத் துறை நிபுணர் ஒருவர் எழுதி இருந்தார். வான இயல் பற்றி பல கட்டுரைகள் வெளிவந்தன. தரம் மிகுந்த சிறுகதைகளும் பிரசுரிக்கப்பட்டன.

இவை அனைத்தையும்விட 'போகிற போக்கில்' என்ற தலைப்பில் ஆசிரியரே எழுதும் எண்ணங்களைக் கொண்ட பகுதி வெகுவாக வாசகர்களைக் கவர்ந்தது. இப்பகுதி வெங்கட ரமணியின் தனித்துவத்தைக் காட்டியது எனலாம். பல விஷயங்கள் குறித்துத் தன் கருத்துகளைச் சொல்லத்தான் இப்பத்திரிகையை அவர் தொடங்கினார். தன் நாவல்களிலும், சிறுகதைகள் மூலமாகவும் சொல்ல இயலாத பல எண்ணங்களை இப்பகுதி மூலம் அவரால் உடனுக்குடன் சொல்ல முடிந்தது.

1941ஆம் ஆண்டு மார்ச் 14 அன்று அவர் எழுதியதில் ஒரு சிறு பகுதியைப் பார்ப்போம். அவருடைய நடையின் தனித்தன்மையை எடுத்துக்காட்டுவதோடு அல்லாமல், அவருடைய வாழ்க்கையின் உயர்வான தகவலையும் அது தருகிறது. ஆசிரியரின் இந்தப் பகுதியின் தலைப்பில் ஒரே சித்திரம் இதழுக்கு இதழ் அச்சிடப் பட்டிருக்கிறது. காவிரி ஆற்றுப்படுகையில் வயல்களும், அவற்றில் விவசாயிகள் வேலை செய்வதும், ஒரு பக்கம் தென்னை மர வரிசையும், இவற்றுக்கெல்லாம் பின்னணியாக காவிரி ஆறு இருப்

பதான பாவனையும், இந்தக் காட்சியை ஆசிரியரான வெங்கடரமணி ரசித்துப் பார்ப்பது போலவும் ஆன இந்தச் சித்திரம் அவருடைய மனதில் எழுகிற நினைவாய், உள்ளதை பிரதிபலிப்பதாய் அமைந்திருக்கிறது.

மேலே குறிப்பிட்ட ஆசிரியர் பகுதியை, வெங்கடரமணி கங்கையின் கரையில் இருந்து கொண்டு, அதாவது கங்கை ஆற்றின் கிளையான ஹூக்ளி நதியின் கரையிலிருந்துகொண்டு எழுது கிறார். அந்த நேரம் அவர் கல்கத்தாவில் ஹெளரா பாலத்தின்மீது நின்று கொண்டிருக்கிறார். நடைபாதையினரையும், வாகனப் போக்குவரத்துகளையும் கவனிக்கிறார். கனவு கண்டபடி நடக்கும் பாதசாரிகளை பாலத்தை வேகமாகக் கடக்கும் வாகனங்கள் உஷார்படுத்திவிட்டுச் செல்கின்றன. இந்த சந்தடிக்கு இடையே ஆசிரியர் ஒரு பக்கமாக இருந்தபடி சிந்தனைவசப்பட்டிருக்கிறார். பெரும் நகரத்தின் செல்வச் செழிப்பும், வாகன ஆர்ப்பாட்டங் களும் அவரைச் சுற்றிச் சுழன்று வருவதை வியப்புடன் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

பாலத்தின் கீழாக இன்னொருவகை சுழற்சி, ஹூக்ளி ஆற்றின் ஆக்ரோஷமான சுழல்கள் கடலின் கொந்தளிப்புக்கு ஈடாகக் காணப்படுகின்றன. அங்கு நின்று கனவு காணும் ஆசிரியர் அழுக்கு வேட்டி, கசங்கிய சட்டையுடன் ஒரு சிறுவனைப் பார்க்கிறார். அவன் 'அமிர்த பஸார்' பத்திரிகை விற்றுக் கொண்டிருக்கிறான். அச் சிறுவனின் பரிதாபத்துக்குரிய உடைகளும் தோற்றமும் இந்தியாவிலிருந்து அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் பஞ்சுப் பொதிகளை சோக நினைவாக மனதில் எழுப்புகிறது.

வெங்கடரமணி சிறுவனிடமிருந்து ஒரு பத்திரிகையைப் பெற்றுக் கொள்கிறார். அப்போது நடந்து கொண்டிருக்கும் இரண்டாம் உலகப் போரின் போக்கு குறித்துத் தெரிந்து கொள்ள பக்கங்களைப் புரட்டுகிறார். ஆனால் அவருடைய பார்வையில் பட்ட செய்தி மாறானது. அவருடைய பழைய நண்பரான எஸ். ரங்கய்யர் என்பவர் பெங்களூரில் காலமானார் என்று செய்தி தெரிவித்தது. அந் நண்பரை முதன் முதலில் சந்தித்த நேரம் அவர் மனதில் விரிகிறது. இந்த சிந்தனை ஓட்டம்தான் அவரை 1920-ம் ஆண்டில் பத்திரிகை தொடங்குவதற்கான முயற்சியில் ஈடுபட

வைத்தது. இம் முயற்சியின் விளைவுகள் குறித்து முதல் அத்தியாயத்தில் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம்.

1942-ம் ஆண்டு. ஜப்பான் சென்னை மாநகரத்தின் மீது குண்டுகளை வீசிய சமயம். நகர மக்கள் வீடுகளைக் காலி செய்து, நாட்டின் உட்பகுதிக்குச் சென்று கொண்டிருந்தனர். அந்த நேரத்தில், பத்திரிகையை சென்னையிலிருந்து மாயவரத்துக்கு எடுத்துச் சென்று வெளியிட இருப்பதாக அறிவிப்புச் செய்தார் வெங்கடரமணி. அதாவது கூவம் நதிக்கரையிலிருந்து காவிரி ஆற்றின் கரைக்கு அலுவலகம் மாற்றப்படுகிறதாம். அப்படி மாற்றுவதான முயற்சியில், பத்திரிகைப் பதிவு சம்பந்தப்பட்ட அதிகாரிகளை நெருங்கி அனுமதி பெறுவதிலுள்ள சிகப்பு நாடா அவலங்களை நகைச்சுவையோடு எழுதி இருக்கிறார்.

1947-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம். அப்போது வெளிவந்த ஓர் இதழில், நாட்டின் சுதந்திரத்தை வரவேற்கும் அதே நேரத்தில் அவருடைய குரலில் ஒருவிதமான சோகம் இழையோடுகிறது. நாட்டுப் பிரிவினை அவரைக் கவலைக்கு உள்ளாக்கி இருக்கலாம். இரு நாடுகளின் கூட்டமைப்புக்கான ஓர் ஆணித்தரமான கருத்தையும் தெரிவிக்கிறார். மதக் கலவரங்களால் மக்கள் மடிய நேரிட்ட சம்பவங்கள் அவரைத் துயரத்துக்குள்ளாக்கின. மேற் கொண்டு இந்நாட்டிலிருந்து சுரண்டுவதற்கு ஏதுமில்லாததால், பிரிட்டிஷ்காரர்கள் வெளியேறினர்.

அரசியல் விவகாரங்களிலும், ஏனைய சமுதாய சீர்திருத்தங்களிலும் வெங்கடரமணி தனது என்று சுதந்திரமான ஒரு நிலை, எண்ணம் கொண்டிருந்தார் என்பது மேற்சொன்ன ஆசிரியப் பகுதியிலிருந்தும், பல கட்டுரைகளிலிருந்தும் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவருடைய விமர்சனங்கள் சம்பந்தப் பட்டவர்களைத் தூற்றுபவை அல்ல; தர்க்க பூர்வமானவை. தன்னடக்கம் மிக்கவை. தாக்கும்போதுகூட அவர் கடுமையான சொற்களைப் பயன்படுத்தியது கிடையாது. ஒருவரைப் பற்றி அல்லது ஒரு பொருளைக் குறித்து அவர் விமர்சிக்கும்போது, அவரிடம் மென்மையான உணர்வு வெளிப்படுகிறது. ஆங்கிலத்தை எந்த மட்டில் இசையோடும், இனிமையாகவும் அவரால் கையாள முடிந்ததோ, அதேபோல தமிழிலும் அவரால் இசையையும்,

இனிமையையும் கொண்டு வர முடிந்தது. உரையாடுவதைப்போல அவர் தமிழில் எழுதினார்.

தன் பத்திரிகை தழைத்தோங்கும் என வெங்கடரமணி எதிர்பார்த்தார். பத்திரிகையின் தரத்தைக் குறித்து பெரும் குறை ஏதும் சொல்ல முடியாது. மேலும் அவர் ஆசிரியராக இருந்து நடத்தும் பத்திரிகை என்பதால், அதற்குச் சிறந்த வரவேற்பு இருந்தது. இருந்தாலும் பத்திரிகைத் துறையில் அவர் தோல்வி பெற்றார். பத்திரிகை நின்றதற்குக் காரணம் தனது நிர்வாகத் திறனின்மையே என்பதை சூசகமாக, இலைமறைவு காயாக எடுத்துக் காட்டினார். உண்மைதான். எழுதத்தான் வெங்கடரமணி பிறந்தாரே தவிர, அமைக்கவும், நிர்வாகம் செய்யவும் அவருக்குத் தெரியாது. நாடு விடுதலை பெற்ற சில நாட்களில் பத்திரிகை மூடப்பட்டது. மேலும் இந்தக் காலகட்டத்தில் அவர் வெகுவாக காச நோயால் அவதிப்பட்டார். எழுத முடியவில்லை. அவர் ஒருவராகவே இருந்து பத்திரிகைக்கான வேலை அனைத்தையும் கவனிப்பது என்பது இயலாமற் போயிற்று.

"உதவி என்று கை கொடுப்பவர் எவரும் இல்லை. பணமும் கிடையாது— தன்னைத்தானே வளர்த்துக் கொள்ளும்படியான நிலையில்" 'பாரத மணி' யை என்னால் வெற்றிகரமாக நடத்திச் செல்ல முடியவில்லை. மார்க்கண்டேய ஆசிரமத்தின் நிலை இன்னும் மோசம். 'பாரத மணி' யில் வெளியான கதை, கட்டுரை களில் ஐம்பது சதவீதம் தற்கால இலக்கியம் என்ற பெயரில் நூல் வடிவில் வெளிவர இருக்கிறது" என்று அந்தக் கடினமான கால கட்டத்தைப் பற்றி வெங்கடரமணி எழுதினார். அவருடைய மனத்துயரை ஒருவாறு புரிந்து கொள்ளலாம்.

பாரதப் பண்பாட்டில் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்த வெங்கடரமணி அவர்களால் எதையெல்லாம் சாதிக்க முடியும் என்பதை 'பாரத மணி' சிறப்பாகவே எடுத்துக் காட்டியது. தமிழில் தன்னாலும் எழுத முடியும் என்பதை உணர்த்துவதற்காக அவர் எழுதவில்லை. அவர் எழுதினார் என்றால் அவருள் எழுத்தார்வம் இருந்தது. ஆங்கிலத்தில் திறன்பட எழுத முடிந்தது என்றால், அதே திறமையுடன் அவரால் தமிழிலும் எழுத முடிந்தது.

# 6

## புறக்கணிக்கப்பட்ட படைப்பாளர்

அவருடைய கதைகளும், கிராமங்களின் அன்றாடப் பிரச்னைகள் குறித்து அவர் நடத்திய ஆய்வுகளும் வெங்கட ரமணியைக் குறிப்பிடக்கூடிய எழுத்தாளர் ஆக்கின. அவருடைய இயல்பு குறித்து இரண்டு உண்மைகள். ஒதுக்கிவிட முடியாத உண்மைகள் இவை. இந்தியாவிலுள்ள கிராமங்கள் அனைத்தையும் சீரமைத்தாக வேண்டும் என்ற தீராத வேட்கை முதலாவது உண்மை. மற்றது, உள் ரத்த நாளம் வரை அவர் ஒரு அப்பழுக்கற்ற தேசியவாதி. இந்த அடிப்படையான இரு உண்மைகள் அவருடைய இயல்பையும், வாழ்நாள் முழுதும் அவர் எழுதுவதில் கழித்ததையும் சார்ந்து நிற்கின்றன.

தேசியவாதிகளுக்குள் மிகச் சிறந்தவர் வெங்கடரமணி. விடுதலை பெற்றபின் சில ஆண்டுகள் இவர் 'அன்னியன்' ஆகக் கருதப்பட்டது மிக துயரத்துக்கு உரிய சமாசாரம். நாட்டின் விடுதலைக்கு எதிராக இவர் செயல்பட்டார் என்று எவருமே சொல்லமுடியாது. இவர் 'இந்திய எழுத்தாளர்' இல்லை என்ற எண்ணம் பரவலாக இருப்பது புரிகிறது. காரணம் இவர் ஆங்கிலத்தில் எழுதினார், தமிழில் எழுதவில்லை என்பதுதான்.

அவர் ஆங்கிலத்தில் ஏன் எழுதினார் என்பதற்கு மிகச் சாதாரண காரணம் இருக்கிறது. இந்த நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் உலகெங்கும் காணப்பட்ட புதிய வளர்ச்சியினால் தமிழில் அவ் வளர்ச்சி குறித்து தகவல்களைத் தரமுடியாத நிலை இருந்தது. என்னதான் ஒரு தமிழன் தமிழ்மொழியில் புலமை பெற்றிருந்தாலும், தகவல்களைத் தமிழில் தரவேண்டும் என்று ஆர்வம் கொண்டிருந்தாலும், இந்த மொழியில் நவீன காலக் கருத்துகளைத் தருவது என்பது இயலாது என்ற எண்ணம் பரவலாக இருந்தது. ஓர் இரு தலைமுறைக்குப் பிறகே தமிழில் எதையும் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கை பிறந்தது. கல்லூரியில்

படித்துக் கொண்டிருந்த வெங்கடரமணி தாய் மொழியில் எழுதுவதற்கான சாத்தியக் கூறுகள் அறவே இல்லை.

அதே காலகட்டத்தில் சுப்பிரமணிய பாரதியார் அவருடைய சாகாவரம் பெற்ற கவிதைகளைத் தமிழில் எழுதினார் என்பது மிகவாக உண்மைதான். ஆனால் அவர் வெங்கரமணியிடமிருந்து வேறுபட்டவர். பாரதி கவிஞர். கவிதை அவரிடம் பொங்கி எழுந்தது. அக் கவிதைகள் ஆத்மாவின் ரீங்காரம். மூச்சுவிட அவர் மறந்திருந்தாலும், கவிதை எழுதாமல் அவரால் இருந்திருக்க முடியாது. கவிதை அவ்ருக்கு வரப்பிரசாதம். வருங்காலத்தின் ஆரூடம் அவை. எரிமலையின் தழல் குழம்பு. அவரைப்போல ஆர்வம் கொண்டவர்தான் வெங்கடரமணி. கிராம சீரமைப்புக் குறித்து அவர் எழுதினார். நாடு விடுதலை பெற வேண்டும் என்ற வேட்கை அவருள் தணலாகக் கனிந்திருந்தது. ஆனால் வெங்கட ரமணி பல விஷயங்களில் பாரதியிடமிருந்து மாறுபட்டவர். சொல்லப் போனால், ஒரே ஒரு பாரதிதான் இருந்தார்; வெள்ளைக் காகிதத்தின்மீது பேனாவை நகர்த்தக்கூடத் தெரியாதவர்கள் லட்சக்கணக்கானோர்.

வெங்கடரமணி ஓர் உயர்தர தேசியவாதி என்பதற்கு அவருடைய ஆங்கில நூல்களே சாட்சி. அவற்றின் உள்ளடக்கம் இந்தியாவைப்பற்றி மட்டுமே இருக்கிறது. அவரது இரண்டு நாவல்களுமே-சிறப்பாக 'தேசபக்தன் கந்தன்', தேசியப் போராட் டத்தை விவரமாகச் சொல்லி, நாடகமாக மேடை ஏற்றிக் காட்டுகின்றன. அவற்றில் வரும் பாத்திரங்கள், அவர்களுடைய நம்பிக்கைகள், அவர்கள் சென்ற பாதைகள் யாவும் கிராமச் சீர் அமைப்புக்காகவே படைக்கப்பட்டுள்ளன. அந்தக் காலத்தில் கிராம சீரமைப்பு என்ற கொள்கை மகாத்மா காந்தியின் நிர்மாணத் திட்டத்தில் அடங்கி இருந்தது. நாட்டின் மறு வாழ்வுக்கான ஓர் அம்சம் அது. இன்றும் இந்தியாவில் இத் திட்டம் அமுலில் இருக்கிறது. வெங்கடரமணி முற்றும் இந்தியனாக இருந்து கொண்டுதான் எழுதினார். அவர் சுத்த சுயம்புவான இந்தியர். ஆங்கிலத்தில் எழுதினார் என்பதால் அவர் நாட்டுப் பற்றுடையவர் அல்ல, தேசிய எழுத்தாளர் ஆக மாட்டார் என்பதாகி விடாது.

சொல்வதானால், அவர் தமிழிலும் எழுதி இருக்கிறார். மேலும் தமிழில் தீர்க்கமாக, தீர்மானமாக, ஒரு தேர்ந்த கலைஞ னாக, பணியில் அனுபவம் கண்டவராக இருந்து செயலாற்றி இருக்கிறார். இன்னும் சொல்வதானால், எந்த அளவு தடுமாற்ற மின்றி அவரால் ஆங்கிலத்தில் எழுத முடிந்ததோ, அதைவிட அவர் தமிழை அழகாகக் கையாண்டார். அவருடைய ஆங்கில நடையில் கவிதை மிளிரும். தமிழ்மொழியைக் கையாளும்போது இசை பிறக்கிறது. மேலும் அவருடைய தமிழ் தெள்ளிய நீரோடை போன்றது. படிக்கும்போது சுருதியும் தாளமும் கலந்த மென்மை யான பாடலின் இனிய அமைதியான நடையை அனுபவிக்கலாம்.

தனது பேனா முனையால் தேசிய இயக்கத்தை ஊக்குவித்த எழுத்தாளரான வெங்கடரமணியை அவருக்கு உரிய இடத்தில், விடுதலை வரலாற்றில், இலக்கிய உலகில் மீண்டும் நிலை நிறுத்த வேண்டிய காலம் நெருங்கி வருகிறது. சாராம்சத்தில் அவர் பிரசங்கிதான்; பிரசாரம் செய்தவர்தான். ஆனால் அவர் செய்த பிரசாரம் உயர்ந்த நோக்கம் கொண்டது. உலகின் பெரியதொரு நாட்டின் விடுதலைக்காக இருந்தது.

அடிக்கடி உடல் நலமின்றி இருந்தவர். குடும்பங்களில் எதிர்ப்படும் அனைத்துத் தொல்லைகளாலும் அவதிப்பட்டவர். அப்படியான சூழ்நிலையில் அவரால் சத்தியாக்கரகப் போரில் கலந்து கொள்ள இயலாமற் போய்விட்டது. சத்தியாக்கிரகத்தில் பங்கேற்ற ஆயிரக்கணக்கான தியாகிகளை அவர் போற்றினார்; வாழ்த்தினார். அவர்களுக்கு உரிய மதிப்பையும் மரியாதையையும் தந்தார். ஆனால் விடுதலைக்காகத் தன் பங்கை செலுத்து வதற்கான வகையில், வேறு மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்.

பலரிடம் இல்லாத ஒரு பேறு அவருக்குக் கிட்டி இருந்தது. அதுதான் இலக்கியம் என்னும் வரப்பிரசாதம். எத்தனை இளைஞர்கள், எத்தனை புனித ஆன்மாக்கள் அவருடைய எழுத்துக்களால் உத்வேகம் கொண்டு, ஊக்கம் பெற்று விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்டார்கள் என்பதைக் கணக் கிட்டுக் கூறமுடியாது. இன்றைக்கு அவர் பலருக்குத் தெரியாது இருக்கலாம். ஆனால் அவருடைய காலத்தில் வலிமைமிக்க சக்தியாக இருந்து, நாட்டுக்காகப் பாடுபட்டவர்களில் முதல்

அணியில் இருந்தார் அவர். அவர் உணர்வு ஊட்டிய கந்தன்கள் எத்தனை எத்தனை! அவருடைய எழுத்தாற்றல் எத்தனை பத்மாக்களை தைரியமாகப் போராட்டத்தில் குதிக்கச் செய்தன!

இளம் வயதிலேயே முடிவான கருத்துகளைக் குறித்து வெங்கடரமணியிடம் சிந்திக்கும் திறன் வாய்த்திருந்தது. இக் கருத்துகள் சரியானவை என்ற நம்பிக்கையுடன் அவற்றை அவர் ஏற்றுக் கொண்டார். சின்ன வயதில் பள்ளியில் படிக்கும்போது அப்படியான கருத்துகளை அவர் மனதில் கொண்டிருந்தாலும், ஆண்டுகள் கழிந்த பின்னும் அக் கருத்துகளை மாற்றிக் கொள் வதற்கான அவசியமே நேரவில்லை. எண்ணங்கள் தொடக்கத்தில் மனதுள் எவ்விதம் எழுந்து நிலைத்தனவோ, அவை கடைசிவரை அப்படியே நின்றன. காவிரி ஆறிடம் அவர் காட்டிய பாசம், தஞ்சை அதன் சுற்றுப்புறத்திடம் நேசம், இந்திய கிராமங்களிடம் அடக்கமாட்டாத ஆர்வம், பற்று, நாட்டின் முன்னேற்றத்தில் ஆழ்ந்த அக்கறை, நாட்டின் விடுதலைக்கான அடங்காத தாகம் ஆகிய உணர்வுகள் அவரிடம் குறையவே இல்லை. இந்த உணர்வுகளிலிருந்து எழுந்த ஊக்கமே அவரைக் கடைசிவரை எழுத வைத்தது. தன் வாழ்நாள் முழுதையும் அவர் மேலே சொன்ன லட்சியங்களுக்காகவே செலவிட்டார்.

வெங்கடரமணி பிறவி மேதை. ஆங்கிலத்தைத் திறமையுடன் கையாளுவதிலும், நாவலைத் திறன்பட எழுதுவதிலும், கதைகளைச் சொல்லும் சாமர்த்தியத்திலும் அவருடைய மேதா விலாசம், அறிவின் மலர்ச்சி தெரிகிறது. கிராமப்புறத்தை அவர் வெகுவாக நேசித்தார். உண்மையில் நகர வாழ்க்கையை அவர் வெறுத்தார். இந்த நாட்டுப்புறப்பற்றின் விளைவாகவே அவரு டைய எழுத்தின் நடை இயல்பாகப் பரிணமித்தது. காவிரி ஆறின் ஓட்டத்தை மனதில் வாங்கிக் கொண்டு, அந்த நினைப்பின் திளைப்பில் ஆழ்ந்து விடுகையில், அவருடைய எழுத்து தனக்கென ஒரு பாணியை அமைத்துக் கொண்டது. ஆற்றின் மெல்லிய அலை நடை. இசையுடன் ஆன நடை. தாளகதியில் சிறு துள்ளல் செல்லும் நடை. அயல் நாட்டுச் சிறந்த இலக்கிய விமர்சகர்கள், அதிலும் ஆங்கில விமர்சகர்கள், அவருடைய தெள்ளிய, மென்மையான, ஒளிரும் நடையைக்கண்டு பரவசப்பட்டார்கள். புரிந்து கொள்ள வேண்டிய அவசியம் காரணமாக, எந்த ஒரு வாசகரும் அவருடைய நூல்களில் எந்த ஒரு வாக்கியத்தையும்

மீண்டும் படிக்க வேண்டிய அவசியம் இருக்காது. குறுக்கீடு, தடுமாற்றம் இன்றி, மெதுவாக, இனிமையாகத் தவழும் சொற்களின் கோர்வை, தன் பொருளை வாசகனின் உள்ளத்தில் இழைந்து நிரப்புகிறது. ஆனால் அந்த நடை வறட்சியான, மிகச் சாதாரணமான, சுலபமாகக் கைவரும் நடையும் அல்ல. வெங்கட ரமணி மிக எளிமையானவர்தான். அது போன்று அவர் நடையும் இனிய சங்கீதம் போன்று எளியது. சப்த ஸ்வரங்களின் ஆரோகணம், அவரோகணம் போல, ஏற்ற இறக்கத்துடன் கூடிய இனிய எழுத்துக்கள் அவருடையவை.

வெங்கடரமணி கல்லூரியில் ஆங்கில இலக்கியத்தைப் பாடமாக ஏற்றுப் படித்தவர். ஆனாலும் அந்த ஆங்கில இலக்கியத்தின் தாக்கம் அவருடைய நூல்கள் எதிலும் வெளிப் படையாகத் தெரியவில்லை. எந்த ஓர் ஆங்கில ஆசிரியரையும் மேற்கோளாக எடுத்துக்காட்டவில்லை. எந்த ஒரு தகவலையும் அழுத்தமாகச் சொல்ல, ஷேக்ஸ்பியரைக் கூடக் கையாளவில்லை; அவர் குறித்து மதிப்பையும் வெளியிடவில்லை. மேற்கோள்களை எடுத்துக்காட்டினால்தான் ஒருவர் சிறந்த இலக்கிய கர்த்தா என்பது மரபு. அப்படியான இலக்கியகர்த்தா அவர் இல்லைதான். தன் எழுத்துகளில் அவர் மேற்கோள் காட்டுவதைத் தவிர்த்தார். அவருடைய நண்பர் ரகுநாதனும் இவரைப் போன்றவர்தான். எதையும் அழுத்தமாகச் சொல்ல தன் சொற்களையே நம்பினார்.

இளமையிலேயே முதிர்ச்சி பெற்ற சிந்தனையாளராக அவர் வளர்ந்து விட்டார். அதனாலேயே அவருடைய எண்ணங்களில் மேலும் தீவிர முன்னேற்றம் இருக்கவில்லை. அதே போல அவருடைய எழுத்து நடையிலும் முன்னேற்றம் காணோம். தொடக்க காலத்தில் எழுதியது போலவே, கடைசிகால கட்டத்திலும் எழுதினார். அவருடைய நூல்களில் முன்பக்கங்களில் ஒன்றுதான் எழுதப்பட்ட ஆண்டைத் தெரிவிக்கும். நூலின் நடையைக் கொண்டோ, உள்ளடக்கத்தைக் கொண்டோ எழுதிய ஆண்டைக் கணிக்க முடியாது. இது வெங்கடரமணி என்ற மனிதரைப் பற்றிய அசாதாரண உண்மை.

'காகிதப் படகுகள்'(பேப்பர் போட்ஸ்) என்கிற அவருடைய நூல் முதலில் வெளிவந்தது. இந்த நூலைத்தான் ஆங்கில விமர்சகர்களில் சிறந்தவர்கள் அவர் எழுதிய அனைத்து

நூல்களிலும் குறிப்பிடத்தக்கது எனப் பாராட்டி இருக்கிறார்கள். 'தேசபக்தன் கந்தன்' என்பது நாவல். காகிதப் படகுகள் சிறுகதைத் தொகுப்பு. இரண்டின் நடைகளையும் ஒப்பிட்டு நோக்கும்போது, நாவல், சிறுகதைக்கான நடை வேறுபாட்டைத் தவிர, மற்றப்படி பொதுவாக ஒரே நடையைக் கையாண்டிருப்பதாகத்தான் படுகிறது.

'மணல் மேடுகள் மீது' (ஆன் தி சாண்ட்டுயூன்ஸ்), சாம்புவுடன் ஒரு நாள் (எ டே வித் சாம்பு) என்ற இரண்டு நூல்களை வெங்கடரமணி எழுதி இருக்கிறார். இந்த நூல்களில் சாதாரண தன் நடையைவிட்டு வசனக் கவிதைக்கு இயல்பாக நழுவி இருக்கிறார். மகாகவி தாகூரும் இப்படியான வசன கவிதை நடையில் எழுதியது உண்டு. இந்த நடை இந்தியாவில் மட்டுமல்லாது, மேற்கு நாடுகளிலும் வெகுவாகப் பாராட்டப் பட்டது. டபிள்யூ.பி.யீட்ஸ் என்ற அறிஞர் தாகூருக்குப் புகழாரம் சூட்டினார். இதன் பயனாக தாகூருக்கு நோபெல் பரிசு கிடைத்தது. மேற்சொன்ன இரண்டு நூல்களுக்காக வெங்கட ரமணி 'தென்னாட்டு தாகூர்' என்று அழைக்கப்பட்டார்.

ஆனால் இருவருக்கும் முக்கியமான வேறுபாடு ஒன்று உண்டு. ஆங்கிலத்தில் எழுதப்பட்ட தாகூரின் அத்தனை நூல்களும் இந்த வசனக் கவிதை நடையைக் கொண்டவைதான். ஆனால் வெங்கட ரமணியிடம் இரண்டு விதமான நடைகள். அதாவது இரண்டு வேறுபட்ட நடைகள். 'மணல் மேட்டின் மீது', 'சாம்புவுடன் ஒரு நாள்', இந்த இரண்டிலும் வெளிப்படையாக அவர் 'வசனக் கவிஞர்' ஆகத் தெரிகிறார். அதே சமயம் தனது இதர நூல்களில் உவமைகளைச் சொல்வதிலும், உருவகப்படுத்துவதிலும் வெகுவாகத் திறனைக் காட்டி தான் ஒரு 'வசனக் கவிஞர்' என்பதை மறைமுகமாக சூசகமாகவே தெரிவிக்கிறார். சொல்ல வந்த விவரத்தை நேரடியாக, தக்க சொற்களைக் கொண்டு சொல்லி விடுவது வெங்கடரமணியின் வழக்கம் அல்ல. வாசகர் சிந்திப்பதற் கான வகையில் வாக்கியங்கள் அமைக்கப்பட்டிருக்கும். சொற்களில் மணமும், இசையும் ததும்பும். (வெங்கடரமணிக்கே உரிய சொற் கோவை அது. சொல்வதானால், சிந்திக்க வைக்கும் நடை அது. இன்னிசை ஒலிக்கும் நடை. எழுதுவதைப் போலவே சிந்திப்பவர் வெங்கடரமணி. சிந்திக்கையில் உவமைகளும், உருவகங்களும்

இறக்கை கட்டிப் பறந்து வந்து சொற்றொடர்களில் உட்கார்ந்து கொண்டன.)

வெங்கடரமணியின் 'வசன கவிதை' அயலானதோ, திணிக்கப் பட்டதோ அல்லது செயற்கையானதோ அல்ல. இயல்பாக அது கை வந்தது. கருத்துகளுடன் கூடிய வசன கவிதை அது. இசை பின்னி வருவது. இக் கருத்தைத் தெரிவிக்க முன்பக்கங்களில் தேவையான அளவுக்கு மேற்கோள்கள் காட்டப்பட்டுவிட்டன. எடுத்துக் கொண்ட பொருள் அப்படி ஓர் இயல்பான வசன கவிதையில் எழுத வைத்தன. ஒரு நூல்; அதில் அவர் காவிரி ஆறு கடலுடன் கலக்கும் இடத்தில் கரை மீது மணல் மேட்டில் உட்கார்ந்திருக்கிறார். இன்னொரு நூல்; அதில் அவர் ஒரு சிறுவனுடன் உரையாடுகிறார். இயற்கையின் புது மணத்துடன் கூடிய இந்த இரண்டு சூழ்நிலைகளும் எழுதத் துடித்துக் கொண்டிருக்கும் அவரை சாதாரண உரை நடையிலிருந்து உந்தித் தள்ளிக் கொண்டு போய் வசன கவிதை நடையை அவருடைய கையில் திணிக்கிறது. இவ் விதமான உந்து சக்தி மற்ற நூல்களை அவர் எழுதியபோது, இருந்ததாகத் தெரியவில்லை. அவற்றை சாதாரண உரைநடையில் எழுதி இருக்கிறார்.

இன்று வெங்கடரமணியின் இந் நூல்களைக் காணும் சிலர் இந்த வசன கவிதை நடையின்பால் மனம் ஊன்றிப் படிப்ப தில்லை. இது இயல்புதான். இவ்விதம் எழுதுவது இன்றைய பாணி அல்ல. இன்றைய மூர்க்கத்தனமான, வன்முறையான, அவசரமான நாட்களில் இந்த மென்மையான நடை ஏற்காதுதான். ஆனால் வெங்கடரமணியும் புரட்சிகரமான, இன்னல்கள் சூழ்ந்த அந்த நாட்களில் வாழ்ந்தவர். பழமையை விடாப்பிடியாகக் கொண்ட வரும் அல்ல. அவர் இன்று இருந்திருப்பாராகில், இந் நாட்களின் வன்முறையை வெகுவாக வெறுத்து ஒதுக்கி இருப்பார். ஆயினும் இத்தகைய வன்முறையைக் கண்டு அவர் பதட்டமோ, சோர்வோ கொண்டிருக்கமாட்டார்.

வெகு நாட்களாகவே வெங்கடரமணியின் பெயர் என்ன காரணத்தாலோ இலக்கிய உலகில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஓர் இலக்கிய படைப்பாளியின் பெயர் அவர் மறைந்ததும் மறக்கப் பட்டு விடுகிறது என்பது இலக்கிய உலகில் சகஜம்தான். 1952ஆம் ஆண்டு அவர் மறைந்தாலும், இன்றுவரை அவருடைய பெயர்

நினைவுக்கு வராதது வருத்தத்துக்கு உரியது. அவருடைய நாட்களில் அவர் வெகுவாகப் பாராட்டப் பெற்றவர். அவருடைய புகழ் அந் நாட்களில் ஓங்கி இருந்தது. அவரது அறுபது ஆண்டு நிறைவு விழாவின்போது அவர் கீர்த்தியின் உச்சத்தில் இருந்தார். அவருடைய வாழ்க்கையின் சித்தாந்தம், வாழ்க்கையில் பற்றுக் கொண்டிருந்ததற்கான தத்துவம் வெளியாயிற்று.

அவர் இறந்தார். இலக்கிய உலகம் அவரை மறந்தது. ஒரு காலத்தில் உச்சியிலிருந்த அவருடைய இயாதி அந்த மறதி யிலிருந்து மீளவே இல்லை. காரணம் இதுதான். அவர் ஆங்கிலத்தில் எழுதினார். அதனால் அவரிடமிருந்து பலர் விலகி நின்றார்கள். மற்றும் சிலர் அவர் வசனக் கவிஞர் என்பதால், அவருக்குத் தகுந்த மதிப்பு அளிக்க முன்வரவில்லை. ஏற்கெனவே நான் கூறியபடி இரு கருத்துகளும் தவறானவை. வெங்கடரமணி ஓர் உயர்ந்த இந்திய எழுத்தாளர். வசன கவிதை நடை அவருக்கு இயல்பாகக் கைவந்தது என்பதுதான் உண்மை.

இன்று தனது கதைகளினால் வெங்கடரமணி மலைபோல உயர்ந்து நிற்கிறார். கதைகளில் 'தேசபக்தன் கந்தன்' என்ற நாவல் சிகரம். இந்திய விடுதலை இயக்க வரலாற்றில் மிகச் சிறந்த நாவல் அது. பாத்திரம் படைப்பு, காட்சிகளை கூறும் திறன் உணர்ச்சிகளின் கொந்தளிப்பு ஆகியவற்றை விவரமாகக் காண லாம். அன்றைய காலகட்டத்தின் தேவையை நிரப்ப வெங்கட ரமணி எழுதினார். காலத்தின் தேவை என்பது சமுதாயத்தின் நாடி. வெங்கடரமணி என்ற எழுத்தாளர் அத் தேவையை நிரப்பும்போது, தலை சிறந்த படைப்பைத் தந்திருக்கிறார். படிப்பதற்கு ஏற்றவகையில் இயல்பான ஓட்டம். முயற்சி செய்து, சொற்களைத் தேடி அமைத்த நாவலாக அது இல்லை. காவிரி ஆற்றின் கரையில் 'வளர்ந்த' நூல் என்ற எண்ணத்துடன் அணுக வேண்டியது ஒன்று உண்டு என்றால், அது 'தேசபக்தன் கந்தன்' தான்.

இயல்பாகவே நமது விடுதலை இயக்கம் ஏராளமான இலக்கிய வெளிப்பாடுகளைத் தந்திருக்கிறது. பங்கிம் சந்திரரின் 'ஆனந்த மடம்' போன்ற நாவல்கள் குறித்து அனைவருக்கும் தெரியும். விடுதலை உத்வேகத்துடன் கிளர்ந்தெழுந்த அந்த வங்காள மேதையுடன் வெங்கடரமணியை ஒப்பிடக்கூடாது. ஆனால்

வெங்கடரமணி வித்தியாசமானவர். அவர் பாதையில் அவர் மேதைதான். அந்த மேதை சுடர்தெறிக்கும் தேசிய எழுச்சியால் புளகாங்கிதம் பெற்றவர். ஓர் எழுத்தாளருக்கு உரிய மிகச் சிறந்த முறையில் பாராட்டுப் பெறத் தகுதியானவர். அவருடைய நூல்களைத் தேடிப் பிடித்துப் படிப்பது தான் நாம் அவருக்குச் செலுத்தும் அஞ்சலி.

இதோ ஒரு மாமனிதன். இவர் தேர்ந்த கதாசிரியர். நாட்டின் தென்கோடியில் வாழ்ந்திருக்கிறார். நாட்டின் வேறு பகுதிகளில் இவருக்கு இணையானவர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் அந்த நாட்களில் எத்தகைய உணர்வு கொண்டிருந்தார்களோ, அதே போன்ற உணர்வுடன், இயன்ற அளவு இவரும் தன் திறமையை காட்டியிருக்கிறார் என்பதை வாசகர்கள் புரிந்து கொள்ள வேண்டும். தன்னுடைய நாவல்களிலும் சிறுகதைகளிலும் அவர் நாட்டின் கீர்த்தியை வேத கோஷங்களாக எழுப்பி இருக்கிறார். அதேபோல, கிராம சீரமைப்பு ஒன்றை மட்டும் தன் குறிக்கோளாகக் கொள்ளாது, நாட்டின் இழந்த கௌரவத்தை எப்படி மீட்டுக் கொடுப்பது என்பதையும் அவர் கோடி காட்டியுள்ளார். முனிவர் அவர். அதே சமயம் ஓர் இலக்கியக் கலைஞன். நன்றி மறவாத ஒரு நாட்டின் குடிமக்கள் உள்ளத்தில் என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டியவர் வெங்கடரமணி.

வெங்கடரமணியின் நூல்கள் குறித்து குறிப்பிடத்தக்க மதிப்புரையை கே. நாகராஜன் என்பவர் வழங்கி இருக்கிறார். இவர் வெங்கடரமணியின் இயல்பிலிருந்து வெகுவாக மாறு பட்டவர். அவர் காலத்தில் வாழ்ந்தவர். வெங்கடரமணியின் அறுபதாவது நினைவு நாளை ஒட்டி நடைபெற்ற விழாவில் அவர் கீழ்கண்டபடி குறிப்பிடுகிறார்.

"சூரிய ஒளி பட்டுத் தகதகக்கும் நீரின் மெல்லிய சலசலப்பு ஓசை. அப்போது அறுத்துப் போட்ட பயிரின் புதிய வைக்கோல் மணம். தலையில் குடம் ஒன்றும், இடுப்பில் ஒரு குடமுமாக வரும் மகளிர். அரை வயிறு உண்டு, அரை நிர்வாணமாக இருந்து பாடுபடும் இந் நாட்டு மக்கள் காற்றிலும், மழையிலும், வெயிலிலும் வாழ்க்கையைக் கழிக்கப் போராடும் நிலை. இக் காட்சிகளை எல்லாம் அவருடைய எழுத்துகளில் காண்பவர்கள் தங்களுடைய கடந்த கால அனுபவங்களோடு ஒப்பிட்டுப்

பெருமூச்சு விடுவர். அந்த வாசகர்கள் எளிமையானவர்கள்; எந்த ஒரு சக்தியும் அவர்களை மாற்றிவிடாது; அவர்கள் செயலில் உறுதியாக இருப்பவர்கள்; மேலும் எவராலும் அவர்களைத் தூண்டி விடவும் முடியாது. அப்படி இருக்க ஓர் எழுத்தாளர் அவர்களிடம் இவற்றை சாதித்து அவர்களை மாற்றி இருக்கிறார் என்றால், அவருக்கு வேறு பெருமை எது வேண்டும்?"

# வெங்கடரமணி இயற்றிய நூல்களின் பட்டியல்

(நிறைய எழுதாவிடினும், எட்டு நூல்களை வெங்கடரமணி பதிப்பித்திருக்கிறார். ஆனால் அவருடைய வரலாற்றை எழுதத் துணியும் ஒருவருக்கு இந்த நூல்களின் உதவி மட்டும் போதாது. துண்டுப் பிரசுரங்கள் பலவும் அவர் வெளியிட்டார். தனது நூல்களிலிருந்து சில பகுதிகளை தன்னிச்சையாக வெளியிடவும் செய்தார். ஒன்றிரண்டு துண்டுப் பிரசுரங்கள் இரண்டாம் பதிப்பாகவும் அச்சாகின.

இங்கே செய்ய முயன்றிருப்பது எல்லாம், வெங்கடரமணி எழுதிய நூல்களை அவை வெளிவந்த காலத்தின் வரிசையில் தொகுத்து அளிப்பது தான். தன் நூல்கள் அனைத்தையும் அவரே பதிப்பித்தார்.)

1. 'காகிதப் படகுகள்' (பேப்பர் போட்ஸ்) - 1921
2. 'மணல் மேட்டின் மீது' (ஆன் தி சாண்டு டியூன்ஸ்) - 1923
3. 'முருகன் ஓர் உழவன்' (முருகன் தி டில்லர்) - 1927
4. 'தேசபக்தன் கந்தன்' (கந்தன் தி பேட்ரியட்) - 1932
5. 'அடுத்த நிலை' (தி நெக்ஸ்ட் ரங்) - 1928
6. 'சாம்புவுடன் ஒரு நாள்' (எ டே வித் சாம்பு) - 1929
7. 'மறுமலர்ச்சி பெறும் இந்தியா' (ரெனாஸென்ட் இண்டியா)-
8. 'ஜடாதரன் முதலிய கதைகள்' (ஜடாதரன் அண்டு அதர் ஸ்டோரீஸ்) - 1939
9. 'படைப்புக் கலையின் இயல்பு' (தி நேச்சர் ஆஃப் கிரியேடிவ் ஆர்ட்) -1950
10. 'இந்திய கிராமம்' (தி இண்டியன் வில்லேஜ்) - 1936
11. 'சோதிடத்தில் நேர்பாதை' (ஹைவேஸ் இன் அஸ்ட்ராலஜி)

**எழுத்தாளரும், சிந்தனாவாதியுமான வெங்கடரமணி மஞ்சேரி எஸ். ஈஸ்வரன் - 'சுவதந்த்ரா' (ஆங்கில வார இதழ்), சென்னை, ஜூலை 21, 1951.**